அத்திரமொத்தகணம்பிகைநம்பணியதுகொண்டே
பத்திரபுட்பபலங்கட்ருந்தருநிரைபாரா
யித்திரமென்றிசைசொற்றிடுகின்றனவிவைகண்டா
ளுத்தமனன்றெனமெத்தமகிழ்ந்தனளுரைசெய்வாள். [கூ]

ஐயபராபரசங்கரவிங்கதிசயமாகுஞ்
செய்யவனஞ்செறியுந்தருவுங்கொடிசெடியாவு
முய்யவருந்தவரண்டர்களென்றுளமுணர்கின்றேன்
றுப்பவிதன்றியுமையமிலாவகைசொல்கென்றாள். [க0]

மாதுமைகேளிமயாசலசாரலின்வாழ்வோரா
மாதியின்மாதவமேபுரிவேதியராமேனோர்க
ளோதிமனுளளவுட்புலன்வென்றுறுதவமுற்றோர்
தீதகல்சிந்தையர்சீலமறிட்டெதிர்சென்றேமால. (கக)

அங்கவர்கண்டுகளித்தனர்வந்துநபடிவீழ்ந்தா
பொங்கிபவன்பொடுதோத்திரகின்றெதிர்புகலுற்றார்
தங்கியவத்துதிசாற்றினர்மேற்கதிசார்வாரான்
மங்கையிங்கதுகேளெனவோதினன்மாதேவன். [கஉ]

வேறு.

அண்டர்தொழும்பெருமானைச்சந்திரசேகரனையுமையாகத்தானை
மண்டுபெருகொளியானைமகேசனைமாமேருவில்லாவனைத்தோன்றன்னை
தொண்டர்தமக்கானந்தசுகங்கொடுக்குந்தொலையாதசெல்வநீல [த்
கண்டனைக்காலனையடர்த்தகாலனைக்காமனைக்காய்ந்தகண்ணினனை. ()

உடுமாலைதரித்தானைப்பெருகொளிச்சந்திரகிரணத்தொளிர்தோளானை
தடுமாறிலாயோகர்மனத்தடாகத்தெகினந்தானுனை [ந்
நெடுமாயன்முதலமரர்புகழ்வேதம்பணிந்திறைஞ்சுநிமலன்றன்னைத்
தொடுவேலைபபுவியாக்கிப்புரந்தொடுக்கிவிளையாடுஞ்சோதியானை.(கச)

அம்பிகைதன்வதனவம்போருகமலர்த்துஞ்சூரியனையவடன்கொங்கை
பைம்பொனிகர்களபமணிபுளகமார்பனைவிருபாக்கன்றன்னை
வெம்புமந்தகாசுரசங்காரனைச்சூலம்பிடித்தவீரன்றன்னை
நம்புமெமக்கொருநான்குபொருளருளும்பூதியணிநாதன்றன்னை. [கரு]

வெற்றிவிடைத்துவசனைமானேந்தியகையுடையானை விண்ணின்மீ
ன்கண், முற்றுதிரவிரித்தாடுஞ்சடையானைத்தொழுதுய்வோமுனிவீரெ
ன்றே, நற்றுதிசெய்தொருவர்களுங்கேளாதவரங்கேட்டார், நங்காயன்
னோர், சொற்றவரங்கேளென்றேயெம்பிரானுமையவட்குச்சொல்வான
ன்றே. [கசா]

ஆகாரநித்திரைசோமபாநிசேருடலைவிட்டேயகன்றுசற்றும்
போகாதகுணங்களினுலவமகவீண்பொழுதுபோக்கினேமால்

வாகாரவரங்கொடுக்குஞ்சாந்தகுணவள்ளலேவணங்குவோர்கள்
சோகாதிசங்கெடுக்குந்தோன்றலேயென்றுபின்னுஞ்சொல்கின்றூரால்.

இலங்குமுன்றன்கயிலைவரைச்சாரலிடந்தொறுமேயவிலிங்கங்கட்கே
நலங்குலவுகுளிர்நிழலாய்த்தழைந்துகுழைந்தேபூசைதனக்குவேண்டு
நலம்பெறுபத்திரபுட்பங்கனிகளொழியாமைநல்கிநாளு
நிலங்குலவுதருநிரையாய்நிற்கவரந்தருதியெனநிகழ்த்தினூரால். [கஅ]

அப்படியேயவாக்களித்தோமிவ்வரையின்றூழ்வரையினவர்களெல்லா
மொப்பருநற்றருவாகியுயரிலிங்கபூசையுபகரணமெல்லாந்
தப்பிலாதுதவுகின்றூர்சிவபூசையில்லாதான்றரணிமீதிற்
கொப்படியாயும்விழியாய்சஞ்சாரபிரேதமெனக்கூறலாமே. (கூ)

சாற்றரும்பூசைக்குதவுந்தருநிரைகண்முடியின்முத்திசார்தரிண்ண
மேற்றமாந்தருமமிவையெனவுமையாட்கரனுரைத்தானெனவேவேதந்
தேற்றமுறப்புகன்றமுனியுரைகேட்டதவமுனிவோர்செப்புகின்றூர்.
ராற்றல்பெறுஞ்சிவன்றேற்றப்பெற்றுமரவுருக்கேட்டாரறிவென்னென்

வேதவியாசன்புகல்வான்பூமியினிலெடுத்தசென்மம்வீண்போகாம
ஞுதனூர்சிவபூசைதனிற்காலங்கழித்தவரேநன்மையாளர்
பூதலத்திலறுகேனுங்கொடுதொழுதோர்தமைத்தேவர்பூசிப்பாரா
லோதரியவிதனிலொருகதையுளதுகேட்டிரெனவுரைக்கின்றூனே. []

வல்லமைசேர்தருமுனிவீர்மல்லிகார்ச்சுனவரையின்பாங்கர்மன்னு
மெல்லையினின்மேவுபுல்லனல்லோருக்கிடரிழைக்குமீனன்கானத்
தல்லலுழந்தேமிருகவேட்டைபுரிவேடர்குலத்தவனுல்வேதஞ் [வான்.
சொல்லுமறையோர்வேடங்கொண்டவர்க்கும்வஞ்சகஞ்செய்துட்டனு

வெந்திறல்போய்மூப்பெய்திவேட்டைபுரிதிடமிலலான்விலங்கும்பு
ள்ளு,மந்தவனத்தினிலிறந்துகிடந்தவற்றைக்கொடுவருவானவற்றையட்
டே, தந்தவிறைச்சிகணுகர்வான்றனதுதாரத்தங்கிசற்றுந்தணிந்துமில்லா
ன், மைந்தர்மனைவியுநுகர்ந்தேயாற்றூராய்ப்பசிப்பிணியில் வருந்துவா
ரால். (உ௩)

மற்றவனங்கொருதினத்திலேயிறந்துகிடக்குமூன்வனத்திற்காணு (ன்
னுற்றுதொருவழுதுணைத்தோட்டம்புகுந்தான்பிஞ்சுபூவுடன்கவர்ந்தா
பெற்றதனையாய்ந்தனவிற்பெய்தருந்தினுன்பெற்றபின்னையானே
னிற்றயலிற்கிடந்தவதன்மலரொன்றையெடுத்தயலினெறிந்தானன்றே.

அங்கதுமற்றவணிருந்தவிலிங்கநாதன்முடிக்கணிந்தாலொத்தே
தங்கியதம்மலரெறிந்தோன்பசிநோயுமீக்கொள்ளச்சாம்பினுனுன்
மங்குமவன்றனைப்பாசத்தார்த்தீர்த்துக்கொண்டுசென்றூர்மறலிதூதர்
துங்கமன்றுனவனைத்தூரத்தேகண்டுடலுந்துளங்கிச்சொல்வான்.

வேறு.

சிந்தைமிகவேநொங்கிச்சித்திரகுத்திரர்தமையே
தந்திடுமினென்னவவர்சார்ந்தார்தமைநோக்கி
யெந்தவினையோவிவன்றனையான்கண்டவுடன்
வந்ததுடனடுக்கம்வண்புதுமையாமிதென்பான். (௨௬)

என்கண்ணுந்தோளுமிடமாடுகின்றனவான்
முன்கண்டிலேனென்றேமுறைக்கேடுசூழ்ந்துளதால்
வன்கண்ணதூதர்மதியாமைசெய்தனரோ
புன்கண்புகுந்ததிதுபோமாறுசொல்வீரே. (௨௭)

இங்குவந்தோரியாரிவன்செய்தவமேதமையாள்
சங்கரன்றனன்பனிவன்றானெனவேயெண்ணுகின்றேன்
றுங்கனிவன்றனைக்கொணர்ந்ததூதர்தமையேபிடித்து
மங்கவடித்தடர்க்கவல்லேனல்லேனே. [௨௮]

என்றுபுலம்பும்பமன்றனையேநோக்கியெதிர்
நின்றகரணிக்கர்நெடுமூச்செறிந்துரைப்பார்
தென்றிசைக்கோவேயோவாத்தீங்கடுத்ததீங்கென்று
றொன்றுமிறும்பூதிதுபோலொன்றையுநாங்கண்டிலமே. (௨௯)

கருணைக்கடலாங்கடவுளடியார்க்கருளும்
பெருமைக்களவொருவர்பேசுந்தகைத்தாமோ
வருமைச்சிவலிங்கபூசையின்பேராறிவார
தருமத்ததிகந்தவந்தனிலுமாதவமே. (௩௦)

எண்ணில்கொலைவேடனிவன்றன்பிதாவவன்றான்
பண்ணிபபாவமெங்கள்பட்டோலைக்குட்படுமோ
தண்ணளியிலாவவன்றன்றாரமருஞ்சுற்றமெலாங்
கண்ணிச்செயும்பாவங்கட்டுரைக்கவல்லோமோ. (௩௧)

குட்டநோய்வாதபித்தசிலேட்டுமத்தின்கொள்கலமாய்
நட்டம்புரிந்துழலுநல்குரவினன்மெலிவான்
கட்டனவன்கொணர்ந்தகத்தரியின்பூவையிவன்
விட்டெறிந்தானேரிலிங்கமீதுசென்றுவீழ்ந்ததுவே (௩௨)

செப்பவிலிங்கத்திருமுடியின்வீழ்ந்தமல
ரையன்மகிழ்ந்தேயருச்சனையாக்கொண்டனனால்
வெய்யபிணிநலியவீழ்ந்திறந்தானன்னவனை
மையலாந்தூதர்வளைந்துகொடுவந்தனரே. [௩௩]

ஆதிபிரானெம்மையருச்சனைசெய்தானையமன்
றூதர்கொடுபோனார்தொடர்ந்தவனைத்தண்டித்தே

கோதில்வியானத்தவனைக்கொண்டுவருவீரென்முன்
பூதகணநாதர்களிப்போதுபுகுதுவரால். (௯௪)

எந்தவுலகிற்புகுவோம்யாவரெமையாதரிப்பார்
நந்திபிரானேவுகணநாதர்க்கெதிருண்டோ
புந்தியற்றதூதர்தமைப்பொன்றவடித்தேயிவனை
வந்தனைசெய்தேத்தாய்மறலீயெனவுரைத்தார். (௯௫)

ஐயாவொருகருமஞ்செய்வோர்களாய்க்துணர்ந்து
செய்பார்கெடுவரென்முர்சித்திரகுத்திரர்வாய்மை
மெய்யாமெனவேவிசாரமிடும்போததனின்
மையார்கண்டன்கணத்தோர்வந்துதலைப்பட்டனரே. (௯௬)

வேறு.

சூழ்ந்தார்யமனைக்கைப்பிடித்தார்துணைத்தோளிறுகப்பிணைத்தீர்த்தார்
வீழ்ந்தானவனைத்தாள்களினன்மிதித்தார்கசையால்வீசியுடல்
போழ்ந்தார்புடைநின்ருர்களையுப்புடைத்தார்பிடித்தார்கட்டினர்
தாழ்ந்தாரோடுந்தூதர்நமைத்தடிந்தார்தலைகடகர்த்தாரே. (௯௭)

இன்னவாற்ருற்சமலோகத்தீசன்கணநாதர்கள்புகுந்து
பன்னவரியதுயர்செய்யும்பரிசுகேட்டார்பதைபதைத்தார்
பொன்னின்கணவன்பிரமனுடன்புரந்தராதிவானோர்க
டுன்னினர்கள்சிவகணங்கடுணைத்தாடொழுதார்துதிக்கின்ருர். (௯௮)

சம்புவரியகணநாதர்தண்டாமரைத்தாளேசரண
மிம்பருடனும்பர்கள்போற்றுமிணையிலாதோர்க்கேசரண
நம்புமடியார்க்கருள்சுரக்குநாதனடியார்க்கேசரணங்
கம்பமில்லான்கயிலையில்வாழ்கணநிபதிகட்கேசரணம். (௯௯)

என்றுபுகன்ருர்தினைக்குற்றமிழைப்போமெங்கள்பிழைபொறுத்தே
நன்றுபுரப்பதுங்கள்கடனென்ருர்நமன்றனபராத
மொன்றுபொறுப்பீரினியிவ்வாறுஞற்ருனெனச்சென்றடிவீழ்ந்தார்
கன்றுசிந்தைக்கணநாதர்கண்டார்வெகுண்டார்கதித்திட்டார். (௧00)

ஆங்கிப்பரிசுபுரிந்திறைஞ்சுமரியையயனையிந்திரனைப் [ன்
பாங்குற்றிடும்விண்ணோர்களையும்பணைப்பொற்புயங்கள்புணைத்தனரெ
ருங்கற்கரசன்மகட்கெம்மானுரைத்தானென்றேயுயர்வேதந்
தாங்குற்றிடுசெந்நாப்புலவன்றவத்தோர்தமக்குச்சாற்றினனே. (௧0௧)

**இருபத்தாருவது சத்தரிப்பூவருச்சனைச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-அ0௫.



இருபத்தேழாவது

# தேவர்முறையிடுசருக்கம்

வேறு.

தில்லைமுல்லைவன்னிபுன்னைமருதுமாச்செண்பகம்பாதிரிவெண்ணாவல்
வில்லமரசாத்திகரவீரஞ்சாய்வேணுநெல்லிவீழிசேர்ந்த
வெல்லையினிலெல்லையில்லாவிறைவன்வீற்றிருக்கும்பேறெய்தலாகி
யொல்லுமோரறிவினவைவையறிவுபெற்றும்யாமுற்றிலோமே. (க)

அருமறைநான்கும்பகர்ந்தோனொருமறைசொல்வானியமனுதியாக, வருமமரர்தமைப்பிணித்துவருங்கணநாதர்கண்முழக்க வார்த்தைகேட்டே, பெருமைபெறுங்கயிலாயத்திறைவனந்திதனைப்பார்த்துப்பெரிதேதாரார்த்த, றருமதனைவிமானத்தின்மிசையேறிப்போந்துணரத்தகுநீயென்பான். [உ]

நந்திகேணந்தருமஞ்செய்தவனையேயியமனடுங்கச்செய்தா
னந்தயமன்றனைக்கொண்டுவந்திடநந்தூதர்தமையனுப்பினேமான்
முந்துமவர்போய்நமனைப்பிடித்தடித்துக்கொண்டுவரமுயலும்போதில்
வந்தமரகணங்கணமகணங்களுடனெதிர்மாற்றம்வழங்கினுரால். (ங)

வரம்பிகந்தமாயனயனிந்திரனையும்பிடித்துவரிந்தேதாம்பாற்
பிரம்புகொடுசாடியவரேங்கவேதண்டங்கள்பிறவுஞ்செய்வாய்
தரம்பெறுமன்னவரையிங்ஙன்கொடுவரவேண்டாகடிதிற்சார்வாயென்
கரம்பெறுமஞ்சலியுடனேநந்திகடவுளைநோக்கிக்கழறுகின்றான். [னக்

எம்பிரானுனதேவல்புரியடியேன்றனக்கெதிர்யாரிமையோர்க்கெல்லாந், தம்பிரானவர்க்கியன்றமுறைமையிற்றண்டனைபுரிவேன் சார்வேனென்றே, செம்பொன்மானத்திவர்ந்துநமனுலகிற்கணங்களெதிர்சென்றுனந்தி, நம்பியைக்கண்டிடுகணங்களணங்குறுதேவரைமிகவுநடுக்கஞ்செய்தார். (ரு)

தண்டுகொண்டுசாடினார்கணையமரங்கொடுதகாத்தார்தாழ்ந்திலாது
மிண்டுபுரிதேவர்களைச்சூலமுனையிற்சேர்த்தார்மேற்கொண்டாராற்
கண்டுவிழுந்தரம்பையர்கள்கலுழ்கின்றார்பிரளயகாலந்தானென்றார்
மண்டுகின்றார்யமன்பாவிகெடுத்தானென்றுரவனைவைகின்றுரால். (சா)

அந்தரத்தோர்பூதலத்தோர்பாதலத்தோர்கூடினாரந்தோவந்தோ
வந்தடுத்தவருந்துயரம்தேவர்களுக்கோவென்றார்மறுகுகின்றார்
நந்திவந்தானினியுய்ந்தாரெனப்புகன்றார்சிலர்கயிலைநாதனன்பர்க்
கிந்தயமன்சிந்தைமருண்டென்னவபராதமிழைத்திட்டானென்பார். ()

அப்பொழுதுநந்திகணநாதரெதிர்வந்தடுத்தானதனைக்கண்டா
ரொப்பரியான்சரணமேசரணமெனவீழ்ந்திறைஞ்சியோதுகின்றார்
மைப்படியுங்கண்டத்தான்றொண்டர்தமக்கிடரிழைத்தமறலிதன்னைக்
கைப்பிடித்தேயடர்த்தனமிங்கிவர்தேவர்வந்தடுத்தார்கலக்கினேமால்.

தடிகொமொமுடிதகரத்தாக்கினேமேக்கமுற்றுத்தளர்ந்தாரன்றே,
படியவித்திலாத்தேவர்தமைப்புரிந்ததண்டங்கள்பகரொணாதா, னெடி
யுமினிப்புரிவதனையெனப்புகன்றார்கணநாதர்நூக்கவீழ்ந்து, மடிதலுற்
றோரெனக்கிடந்தோர்நந்தியைக்கண்டெழுந்தோடிவந்துற்றாரால. [௯]

துன்னருந்துன்பக்கடற்கோரம்பிபெற்றாரெனத்துன்பந்துடைத்தார்
மேனி, தன்னில்வரிந்திடும்பாசம்பொடியாகும்படியுடலந்தடித்தாரன்
றே, நன்னயந்தந்தருணந்தீநந்தீகாத்தருளென்றார்நாயினேஙின், பொன்
னடியேசரண்புகுந்தேம்புரந்தருள்வாயெனப்பணிந்துபுகல்கின்றாரால்.

ஐயவெமக்கருட்பார்வைதந்தருள்வாய்சிவனைமயர்த்தோமல்
லோம், வெய்யதுன்பமெமக்குறுமோவெண்ணீறுங்கண்டிகையும்விரும்
பிலோமோ, துய்யசிவலிங்கவருச்சனைசெய்யாதிருந்தனமோ துதித்தி
லோமோ, செய்யதிருக்கோயிறொழாதிருந்தனமோதீர்த்தஞ்சென்றாடி
லோமோ. [௧௧]

சிவனுமமஞ்செழுத்துமுருவேற்றுதிருந்திலம்யாந்தேவனன்பர்க்
கவமானம்புரிந்துமிலோம்பழிமொழிகள்கேட்டுமிலோமறைந்துமில்லோ
நவமாநின்மாலியந்தீர்த்தம்புசியாதிருந்துமிலோநாளுநாளும்
பவமாற்றுந்திருவிழாப்பரிந்துதொழாதிருந்திலோம்பாவிப்போமே.[௧௨]

திருவீதியலங்கரியாதிருந்துமிலந்திருமாலைதிருவிளக்கு
மருமேவுதூபதீபம்பூசையுபகரணவகைகளெல்லா
மொருவாமலாலயங்கட்குதவாமலிருந்துமிலோமுறுகணீது
வருமாறென்னந்திநாயகவென்றார்க்கெதிர்மாற்றம்வகுப்பானன்றே. [ ]

எம்பிரான்றிருமுன்னர்ச்சென்றுமதுகுறை புகல்வீரென்றானப்
போ,தும்பர்யாவருநந்திதனைத்தொழுதுசிவன்றனையாமுணரோமுன்றா,
ணம்பினேமெமைப்புரப்பாயென்றிரந்துபுகன்றிடலுநகைசெய்தார்க்கு
ச், செம்பொன்மானத்திழிந்துவணங்கியதேவரைபபார்த்துச்செப்புகின்
றான். [௧௪]

புந்தியிலாவிந்தமன்றூதர்சிவபூசைபுரிபுண்யவானை
வந்துகொடும்பாசத்தாற்பிணித்தீர்த்துக்கொடுவந்தார்மதித்திலாரா
யெந்தையுணர்ந்தேகணங்கடமையேவவந்தமைகண்டிருந்துநீவிர்
சிந்தைதனிலுணராமற்சிவகணங்களுடன்வார்த்தைசெப்பலாமோ. [ ]

எய்தவனையுணராமலம்பினைநொந்தவர்போலவின்றுநீவிர், செய்த
மதியாலந்தோவித்துபரம்பெற்றுளீர்தேவரேநீர்,மைதிகழுங்கண்டர்தம
க்கிடரிழைத்தோரியாவருய்ந்தார்மறலிக்காவந், துய்தலருங்கவலைபெற்
றீரென்றனன்னவைகேட்டோருரைசெய்வாரால். [௧௬]

ஈங்கிவன்றான்சிவலிங்கபூசைபுரிந்திடும்பெரியோனென்றுசற்று,மி
யாங்களறிந்திலங்கணங்கள்யமன்றனைக்கைப்பிடித்தடர்த்தேயேகின்று
ரென், றுங்குவந்தோர்சொலவினவிச்சடுதியில்வந்தடுத்திவ்வாறடைந்

துளோமாற், நீங்குறுவார்தோராதமதியாளரெனும் பொருளைச்சிறப்பித்தோமே. [கஎ]

தவஞ்செய்தோர்தருமதானம்புரிந்தோர்சிவலோகஞ்சார்வார்திண்ண
மிவன்செய்தபுண்ணியந்தானின்னதெனவறிந்திலோமெம்பிரானே.
யவஞ்செயாதருந்தவங்கள்புரிந்தோர்கடேவர்களாயடுத்துளோராற்
சிவம்போலவருஞ்செல்வாவிவர்புரிநல்வினைகேட்டிசெப்புவோமால். [ ]

சாற்றருந்துலாதானஞ்சோடசமகாதானந்தனத்தின்றுன
மாற்றருமக்கினிட்டோமமுதலசுவமேதவரையறியாக
மேற்றமாமனதானம்வத்திரதானங்களிரத்தினதானங்கள்
போற்றலருங்கோதானம்பூதானமொருகோடிபுரிந்துளோர்கள். [கூ]

மேதினியைவலம்வந்தோரைந்தழலினிடைநின்றோர் விரதம்பூண்டோர், பாதையினிற்குளிர்சாலைநளிர்புனற்பந்தர்களமைத்தோர் பரிவினோடுந், தாதையன்னைதமைத்தொழுதோர்சர்வபூடணங்களொடுந்தனங்களோடுங், காதல்பெருகோடிகன்னிகாதானம்புரிந்துளோர்கருணைகூர்வோர். [உ0]

பொருவருமெண்ணுன்கறங்கள்புரிந்துளோரிவைமுதலாம் பொருவில்கோடி, தருமவகைபுரிந்தோர்கடாமன்றேதேவர்களாய்ச்சமைந்துளாரா, லுருவுயிர்க்கெலாம்பரமனமைத்தபடிநாடோறுமொழிவிலாமன், மருவுமவரிருவினையைமறவிபுணர்ந்தனுபவங்கள்வகுக்கின்றுனல். [உக]

எந்தைபாரளித்ததன்றேவிந்தரு'மிவன்பூதிசாதனங்கள்
சந்ததமுமணிந்துசிவபூசைசெய்வோனியாங்களுமத்தன்மையோமா
னந்திநாயகவென்றேயடிபணிந்தஞ்சலிசெய்துநவிற்றுகின்று
ரந்தமிலாச்செல்வனருமறைமுனிவர்க்கறிவிபவாதிமூர்த்தி. [உஉ]

அம்பிகைதன்முகத்தெழிலைநயனத்தைத்தனக்குவட்டை யகட்டிலுற்ற, பைம்பொன்வரைமூன்றதனைப்பார்த்துமகிழ்ந்தாடல்புரி பரிவுபூண்டோன், கொம்பனையாள்குழறிருத்தியணிதிருத்தியலங்கரிக்குங்குழகன்பாத, நம்பினம்பாமெனத்தேவர்நடுக்குறுடன்பின்பார்த்துநவின்றுரன்றே. [உங]

இருபத்தேழாவது தேவர்முறையிடுசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அஉஅ.



இருபத்தெட்டாவது,

# நந்திகேசுரர்தேவர்க்கருள்புரிசருக்கம்.



வேறு.

விலங்கதானகரிகுரங்குமிக்காரைபறவையுஞ்
சிலம்பியூரொறும்புபூசிசெய்துமுத்திபெற்றவா

சலங்கொண்மானுடக்குலத்திலுற்பவித்தநாங்கதிப்
பலந்தருஞ்சிவன்சரண்பணிந்துபெற்றிலோமரோ. (க)

அண்டர்சொற்றவாறனைத்துநந்திகேட்டகமகிழ்ந்
திண்டைகொண்டசெஞ்சடைப்பிரானைநெஞ்சிருத்தியே
விண்டுவோடுபிரமன்வானவேந்தனீவிர்கேண்மினென்
றெண்டருஞ்சிவன்றன்மேன்மையிற்றெனக்கிளத்துவான். (உ)

இமயவர்க்குளதிகரேகரீசர்சராசரநிதனு
ருமையிடத்தர்காலகாலருலகளித்தவொருவனூர்
கமைபடைத்தசோதியாதிகருணைபெற்றநாமெலாந்
தமமறத்தொழும்புசெய்தல்சம்புபாதநளினமே. (௩)

அருத்தியுற்றுநாளுநாளுமண்ணல்பாதநினைகுவீர்
விருத்தியுற்றதேவர்காள்விளம்புமவாய்மைகேண்மினோ
மருத்திருத்துகொன்றைவேணிவள்ளல்பாதமுள்ளுறக்
கருத்திருத்துவோர்நினைத்தகாமியங்கணல்குமே. (௪)

இறைவர்பொற்பதாம்புயத்தைதயிதயம்வைத்துளோரெலா
மறவிபுற்றநகருறுர்கள்கயிலைவாசமருவுவார்
கறைமிடற்றினிறையளித்தகருணைபெற்றபேர்க்கலா
னறைமலர்க்கொடவனடிக்கணண்ணுவண்ணமொண்ணுமோ. ()

அரியமெய்த்தவங்கடானமியாகமாகமத்தொடே
தெரிவுறச்செய்தாலுமாவதென்னதேவர்தேர்மினோ
கரியகண்டர்மருவிலிங்கபூசையைக்கருத்துடன்
புரியிலட்டசித்திபிட்டபோகமுங்கொடுக்குமே. [௬]

வண்டரித்தவில்வமேனுமலர்களேனுமேமனங்
கொண்டரிக்குமரியலிங்கபூசையைக்குறித்துடன்
றெண்டினிற்செய்தாரும்விந்தைதோன்றுறச்செய்தாருமே
யண்டருக்குமரியதானசிவபதத்திலடைவரே. (எ)

நன்றிபெற்றயாகேகோடிவிரதகோடிநல்கிடுந்
தன்றனக்குநிகரதானதானதன்மைகோடியுந்
துன்றிநின்றவானுளோர்கடூபூசைகோடியுங்
குன்றவில்லிபூசைகோடிகூறிலொன்றையொக்குமோ (அ)

ஒருகுடங்கையிற்சலங்கொண்டநுகுவில்வமொன்றினாற்
றிருகுசிந்தையிற்றிலிங்கபூசைசெய்தசீலர்தாம்
பெருகியுற்றபிருதுவிப்பரப்பெலாம்புரந்துபின்
னருகிருந்துசிவபதத்திலரசுசெய்யவல்லரே. (௯)

காதலாமிலிங்கபூசைகடவுளாலயங்களுக்
கோதுகின்றகுறைமுடித்தல்பூசனைக்குகந்திடுந்

தீதிலாதபொருளளித்தல்சேவைசெய்தவினையெலாம்
வேதமாகமங்கள்சொல்லுமேன்மையானதருமமே. (௧0)

மற்றிவ்வாறறிந்துசெய்திலார்கண்மாயைகன்மமாங்
குற்றமேவுமலமதாமுந்நீரினிற்குளிப்பரார்
சொற்றநம்பர்பெருமையாவர்சொல்லவல்லர்திரிபுரஞ்
செற்றவில்லியாரனந்ததிருவுருத்தரிப்பரே. (௧௧)

ஆடுகின்றவமலாகொண்டவரியவிம்பசோதியைக்
கூடுகின்றநமதுகண்கள்கொண்டுகாணவல்லமோ
நீடுசெங்கைநகாலுடன்கண்ணிறமனந்தமல்லவோ
பீடுகொண்டபரமர்மேன்மைபேசுதற்கடங்குமோ. (௧௨)

இரண்டுநான்குசட்டோடெட்டிரட்டியைந்தொடாயிர
முரண்டருங்கைபயுதகோடிமூர்த்தமுற்றமூர்த்தியோர்
புரண்டவேணிசந்த்ரசூடர்பூவைபாகராகவே
திரண்டுதொண்டருக்கிசைந்ததிவ்யவிம்பகோடியே. [௧௩]

சீலமேவுதிருவுருச்சிறந்தமூர்த்திகட்கெலா
மூலமாஞ்சுயம்ப்ரகாசமுதல்வனானசிவனவன்
பாலலோசனத்தன்சூலபாணிகாலகாலனு
மாலகாலமுண்டகண்டனருமையாவரறிவரே. (௧௪)

இன்னமூர்த்திதம்மில்யாவரிபற்றுபூசையிற்பிர
சன்னமூர்த்தியானவீசனாராகுமுபயகை
மன்னர்பன்னிதன்னொடுமெகிழ்ந்துவீற்றிருப்பரான்
முன்னிருந்துகாண்பரானைமுகனுமாறுமுகனுமே. [௧௫]

தேவர்னோர்கணத்திலீலைசிந்தைசெய்யுமளவிலே
மூவர்தந்தொழிற்களின்முயற்சியாவுமுற்றிடு
மேவுநாதன்மகிமைசற்றுவேதமேயறிந்திடு
மாவியண்டகோடியண்ணலாணையுள்ளடங்குமே. [௧௬]

காலொடங்கிவாரிநீடுகரைகடந்திலாவது
மேலடங்குபானுவிந்துவிண்ணடைந்துலாயது
மாலொடிந்திராதிதேவர்வானநாடளிப்பது
நீலகண்டனெந்தைதந்தநீதியாணையல்லவோ. (௧௭)

இன்னவீசனைப்பராவுமியல்பினோரிலிங்கமுன்
னுன்னிநின்றியற்றிலன்னதொன்றனந்தமாமனோர்
பொன்னிநாடளித்துமுத்திநாடுபோய்ப்புகுந்தவண்
மன்னுவார்களென்றுநந்திவானுளோர்க்கியம்பினன். (௧௮)

இருபத்தெட்டாவது நந்திகேசுரர்தேவர்க்கருள்புரிசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அ௪௬.



# பசாசுமோசனச்சருக்கம்.

வேறு.

கன்றெடுத்துவிளவெறிந்துகாலெடுத்தமழைக்குடைந்தகாலிகாக்கக், குன்றெடுத்தமால்விடையின்கொடியெடுத்துவடிவெடுத்துக் கூறெனுத, மன்றெடுத்தசேவடியின்மலரெடுத்துச்சாத்தியன்பின்வழிபட்டோர்க, ளின்றெடுத்தவுடற்பிறவிபிணிபெடாவண்ணமெண்ணமெய்துவாரே,

மாதவவியாதனிவ்வாறுரைத்தனன்பின்னும்புகல்வானந்திவார்த்தை, யாதவர்கேட்டறைந்திடுவாரரன்சரிதங்கேட்கவின்னு மாசைகொண், டோஞ், சீதமதிவேணியன்புண்ணியஞ்சொல்வாயென்னநந்தி சிவனைச், சிந்தித், தோதரியசிவதருமநவமணிமாலைகள்புனைந்தோனோதுகின்றான்

அண்டர்காள்கேண்மினரும்புண்ணியமாம்பலகனிக்குமரனார்தன்மந், கொண்டசெழுஞ்சுவையாகுமாங்கதுவேயிகபரமுங்கூட்டுங்கண்டீ, ரெண்டரும்வேதங்களெலாஞ்சிவபூசைமகிமையெடுத்தியம்பலாலே, தண்டலின்மேன்மைகள்படைத்ததுபுரியிற்பவக்கடலைத்தாண்டலாமே.

அருமறைகளிரணியவாகுவையேயுள்ளென்றுரைக்கு மாசையில்லாப், பெருமையனையுமையாடன்னிடம்பிரியாச்சாந்தகுணப் பெருமான்றன்னை, மருமலர்கொண்டடிவணங்கியுளத்தினில வைத்தாற்சனனமரணநீங்குந், தருமருளுமவனருளன்றேற்றவத்தாற்பலனும்வந்துசார்ந்திடாதே. (௪)

ஆகைபாலருமறையாகமம்புகன்மந்திரத்தினுற்றியானமாற்றி [ணி
யோகையாற்பத்திசெயவேண்டுமெந்தத்திரவியத்தாலொழுங்காலென்
லேகமாம்பரன்பூசைபுரியவருச்சனைத்தானமியற்றிச்சுத்தி
வாகைசேர்தருஞ்சைவாசாரசீலத்தார்புரிவகைமைபூண்டே. (௫)

புனலாடிச்சுத்திபெறும்வத்திரங்கள்புனைந்துடலிற்பூதிபூசித்
தினமேவுமனுட்டானகருமங்கள்புரிந்துகண்டிசிரசுமாலை
கனமேவுகண்டசரமார்பிலணிகையின்மணிக்கட்டிற்காதி
லினமேவவணிந்துசெபவடமிருபத்தேழ்மணியாலெழுத்தஞ்செண்ணி.

படித்தவருமறைப்படியேபூசைசெயப்பதுமவாசனத்தின்மேவி
வடித்திடுமஞ்சனத்திலைந்துதிரவியமுங்கலந்திதயமனுவைக்கொண்டே
பிடித்தருளுந்தேனுவின்முத்திரைகாட்டிச்செய்வினைகள்பிறவுஞ்செய்து
கொடித்தருளுமருக்கியபூசனைபுரிந்துதானசுத்திநோக்கிச்செய்தே. (௭)

திரவியத்தின்சுத்தியுடன்பூதசுத்தியாவிசுத்திதிகழச்செய்தே
பரவுமிதயப்பூசைமுடித்துவெளிப்பூசனைக்கும்பணிமேற்கொண்டே
யுரமுறுமந்திரசுத்தியிலிங்கசுத்திபுரிவதனுக்குளத்திலெண்ணி
யானையறுகாற்பீடத்தானிவேதிகையிலெழுந்தருளச்செய்தே. (௮)

அருக்கியந் தூபந் தீபங்கொடுத்துநின் மாலியசுத்தியாற்றிப்பின்னர்
மருக்கிளருமட்ட புட்பஞ்சாத்தியெண்ணெய்க்காப்புமாக்காப்புமஞ்ச
டருக்கிளர்நெல்லிக்காப்புச்சர்க்கரைதேன்பாறயிர்நெய் தனக்குவெந்நீர்
பெருக்கியபல்கனிச்சாறுகருப்பஞ்சாறிளநீரும்பிரித்தேயாட்டி. [௯]

இடையிடையிற்சுத்தசலபிடேகம்பணிமலர்களினிதுசாத்தி
*மடையுடன்பஞ்சாமிருதம்பஞ்சகௌவியமுமாட்டிமகிழ்ந்துபின்னர்த்
தடையறவேகுச்சிப்புற்சாத்திச்சந்தனத்தின்றண்குழம்புசாத்தி
யுடையசததாரைசங்கமருக்கியமுமாட்டிநல்லொற்றுடைசாத்தி. [௧௦]

தேவனைமேற்பீடத்திலெழுந்தருளப்பணிப்பஞ்சாசனமுஞ்சேர்த்தித்
தாவிலாவாகனதாபனசன்னிதானசன்னிரோதனந்தான்
மேவவமைத்துன்னிரோட்டிபறுகட்சனைதனைவேத்யமாற்றி
யோவில்கருப்பூரங்குங்குமம்புழுகுசந்தனக்காப்புடனேசாத்தி. [௧௧]

ஆணிப்பொற்குவளையுடன்மாணிக்கமாலைகளுமடைவிற்சாத்தி [திப்
பேணிக்குட்பிறையணிந்தார்க்கப்பொன்வில்வமாலைகளும்விளங்கச்சாத்
பூணுற்றசுகந்தபலபுட்பவகையிண்டைதொடைபொலிவிற்சூட்டிப்
பாணித்தலின்றியேபலவகைநைவேத்தியமும்பரிவினூட்டி. [௧௨]

பஞ்சவாசத்தினுடன்றாம்பூலநைவேத்யம்பணியேதூப
மஞ்சடுக்குநாகமிடபப்புருடாமிருகமுடனுலத்தித்தட்
டெஞ்சலிலாத்தீபநீராஞ்சனத்தட்டியுமேந்தியிருங்கண்ணாடி
விஞ்சுகுடைகவரியுடனுலவட்டம்விசிறியெனவிளம்புகின்ற. [௧௩]

× ஆறுபத்தாமுபசாரவகைகளுமேபுரிந்தருட்சனையுஞ்சாத்தி
யேறுசகத்திரநாமமெட்டெனேசதகமுமர்ச்சனைசெய்தேத்தி
வீறுடனேவீழ்ந்துபணிந்தெழுந்துகண்ணீர்மேனியெங்குமாடவாடிக்
கூறுபலதோத்திரங்கள்சோத்திரவாரமுதமெனக்குழைந்துபாடி. (௧௪)

ஆண்டருளும்பெருமானேயடியேன்செய்பிழைபொறுத்தேயாள்வா
வேண்டிபருடரப்பெற்றுபந்திரபுட்பஞ்சாத்திவிதிதப்பாமற் [யென்று
பூண்டபரிவாரமுடன்சண்டேசன்பூசனையுப்புரிந்துபின்னர்க்
காண்டகுபூசையிலன்னமன்பருடனினிதருந்திக்களித்தல்வேண்டும். ()

செப்பரியகதியுதவுஞ்சிவகதையுஞ்செவியுறவேகேட்டல்வேண்டு
மிப்படிமுப்போதுமுடித்தத்தயாமப்பூசையினிதினுற்றி
யொப்பருமண்டபமான்றிற்சப்பரமஞ்சத்தானுமுமையுந்துஞ்சி [டே.
மைப்பொழுதுவிடிந்தருளும்வைகறையிலெழுந்தனராமனத்திற்கொண்

இன்னனமெய்யுள்ளளவும்புரிந்தவனேசிவரூபமெய்தப்பெற்றோன்
சொன்னமறையோரசர்வசியர்சுராசுரர்நாகர்யோகர்சித்தர்
கின்னரர்கந்தருவரிவர்மறைபுகன்மந்திரபூசைக்கேண்மைபெற்றோர்
பின்னவர்மாதர்களேனோராகமதந்திரபூசைப்பெருமைபெற்றோர். [௧௭]

---

* மடை-அன்னம். × ஆறுபத்து-பதினாறு.

எவரேனுஞ்சிவபூசையியற்றுகிலாரொன்றையெடுத்த யின்றுரென்னிற், பலகோடியனைத்தினிலும்பசிப்பிணியாவிடருழந்துவருமைகூர்ந்தே, யவமானத்துடனிறந்துநரகினெடுங்காலம்வீழ்ந் தழுந்துவாராற், றவமாகுஞ்சம்புபத்திசமுசாரவனத்தைவெட்டுந்தறிகைதானே. (கஅ)

பிறந்தசிவலிங்கபூசனைபுரியாதவன்யோனிசெனிக்கும்பேத
மறைந்திடும்போதெண்ணில்பலகோடிகளாங்கறங்கெனவேயவைகடோ
மிறந்துபிறந்துலைந்துவெவெள்ளளவுஞ்சுகமின்றியெய்ந்தநாளு (று
மறந்துநலமென்றுபுலைமலமருந்துஞ்சூகரமாய்வருவன்பின்னும். (கசு)

இன்னவற்றோகதைபுகல்கேனிமையோர்கள்கேண்மி னொருபனவன்மேனுண், முன்னர்செய்தபசுதன்மந்தன்னிலெண்ணில்கோடிபொருண்முறையிற்பெற்றான், பன்னுகலைபலவுணர்ந்தான்பவுத்திரர்புத்திரர்கிளைஞர்படைத்துவாழ்ந்தான், மன்னியவிங்கிலைமைபெற்றேன் சிவபூசைசெயும்பேறுவாய்த்திலானே. (உ0)

தேடியவப்பொருளையெல்லாஞ்சிவபத்தரல்லாததீனருக்கு
மாடியகூத்தியர்க்குமவர்க்கனுகூலம்புரிபவர்க்குமாக்கிப்போக்கிக்
கூடியவருடன்கலந்துவாகனபூடணவத்ரங்கோடிநல்கி
விடியேசுடலைபுகுங்காலம்வருமளவுமிவைமேற்கொண்டானே. [உக]

மன்னுமவன்மனையில்சிவலிங்கசித்ரமேனுமொன்றுவகுத்ததில்லை
யன்னதனலவ்வாறுசெறிமனைகள்புலைச்சேரிசுடுகாடாகும்
பன்னுசிவபூசையில்லார்மனைபுகுதிற்சலபானம்பண்ணிலன்றோ
ரன்னமருந்திடிலவர்கள்புலையராய்நரகமெல்லாமடைவரன்றே. [உஉ]

அறியாமற்புகுந்துசலமருந்திடினூமூத்திரகுண்டத்திலாழ்வர்
குறியாமலன்மருந்திற்குழப்பாயேகொதிக்குமலக்குழியில்வீழ்வர்
பிறியாமலவனுடனேசெறிந்திடிற்சண்டாளசன்மம்பிறந்துவீந்தே
பொறியாவுமில்லாதகிருமியாய்நரகினிடைப்புகுவரன்றே. (உங]

அரும்பாவிதனைச்சேர்ந்தவையொர்பரிகாரத்தாலகற்றலாகுஞ்
சுரும்பாருங்கொன்றையினன்பாலலார்தமையடுத்ததுகடீரந்த
பெரும்பாவத்தவர்குலத்திற்பிறந்துதவம்புரிந்தாலும்பேறுண்டாமோ
விரும்பாதவினைப்பனவனிறந்தனனில்லாளுமுடன்வீந்தாளன்றே.(உச)

அன்னவனுமனையவளுமகோரநரகங்களின்வீழ்ந்தநேகங்கால
மன்னுமிடருழந்தனராங்கவனுதவும்பொருளதனைவாங்கினோருந்
துன்னுகிளைஞருந்தோழர்தாமுமிறந்துடனரகத்துயரஞ்சேர்ந்தார்
பின்னுஞானிகளுருவோராயிரமுற்றார்வனத்திற்பேய்களானார். (உரு)

அவனுடனெப்பாயினரநேகரந்தவனத்துறுமப்பசாசமானார், கவனமுறுந்தீயபசித்தாகசோகங்களுற்றேகதறினர்க, ளிவர்களரற்றியகுரல்

கேட்டேங்கியவிலங்குபுள்ளினங்களெல்லாஞ், செவிகளில்வேல்குடை
ந்ததெனத்திகைத்தடவிவிடுத்தோடிச்சென்றவன்றே. (௨௬)

அவ்வனத்தினறும்புனல்களமுதமயக்கனிகளிருந்தாலுமன்ன
வெவ்வினைசேர்ந்திடுமலகைகண்ணினிற்காணாதவகைமேயவன்றே
செவ்வியசிவாலயத்திலொருநாளுந்திருவிளக்குச்சிறப்பித்தில்லாக்
கவ்வையுறுந்தீவினையாங்காரணத்தாலவர்பிறவிக்குருடரானார். [௨௭]

கந்தமுறுகளபங்கள்சிவன்றிருமேனிக்கணியாக்கசடரெல்லாம்
புந்திதனிலருவருப்பாமுடைநாற்றவுடலமுடன்பொருந்துவாராற்
சிந்தைமகிழ்கலைசாத்தார்தரித்திரராயரைத்துணிக்குத்திகைத்துநிற்பா
ரெந்தைதனக்கிரதவர்க்கமூட்டாதாரனங்கிட்டாதிடைகுவாரால். ()

சங்கரனாலபஞ்சமையார்தாமிருக்கவிடமின்றித்தவித்துநிற்பார்
பொங்குபுனலொருகுடங்கையபிடேகம்புரிந்துளோர்புனலிலாத
மங்கியகானகம்புகினுமமுதநீரெதிர்வரவேமகிழ்ச்சிகூர்வார்
பைங்கனியொன்றூட்டினார்சிந்தித்தகாமியங்கள்படைப்பாரன்றே.(௨௯)

சுகந்தபானிபத்தினைநைவேத்தியஞ்செய்தன்பருக்கேதுய்க்கச்செ
ய்தோர், மிகுந்தவமுதக்கடலிற்றினைத்துவிளையாடுவரால்விரையார்கின்
ற, தகுஞ்சுவையோடன்னமரன்றனக்கருத்தியருத்தியுடன்றவத்தோர்க்
கீவோ,ருகந்தவன்னவெற்படைவாரான்பாலன்பர்க்கருளுமுண்மையோ
ர்கள். (௩௰)

பாற்கடலையடைந்துவிளையாடிடுவர்ததியளித்தோர்பகருமந்த
மேற்கடலையடைந்திடுவர்நெய்யளிக்கிலக்கடலைமேவுவாரா
லேற்குதல்சர்க்கரையினியகனிவகைநைவேத்தியத்திற்கிறைவர்க்கீந்தே
நாற்கடல்சூழுலகிலன்பர்க்களித்துளோரவ்வரையைநண்ணுவாரே. [ ]

சந்தனமாபரணவகைகுடைகவரிவாகனங்கள்சாற்றுகின்ற
வெந்தவகையுஞ்சிவனுக்கற்பிதஞ்செய்தரனடியார்க்கீயப்பெற்றோ
ரந்தவகைப்போகங்களனைத்தையும்பெற்றேகயிலையடைவாரென்றே
நந்திபுகன்றான்பின்னுந்தேவரைப்பார்த்திவ்வாறுநவிற்றுகின்றான். [ ]

மனத்தினுமேசிவதருமமதியாதார்கைப்பொருளைவாங்கல்சேரா, வி
னைத்தர்பொருள்கவர்தலன்றிப்பறம்பர்பொருடனையுங்கொண்டேகலொ
ப்பா, மனத்தமேபுரிமறையோன்சம்புபத்தியற்றவர்க்கீந்தலகையானான்,
கனத்தகானகத்தவன்கையேற்றவருங்கூளிகளாய்க்கலந்தாரன்றே. [ ]

தண்ணீர்தண்ணீரென்றுதாகத்தாற்றடுமாறித்தவித்தேநின்று
கண்ணீர்விட்டேகதறுங்கடிக்கூட்டந்தனைக்கண்டாகாயவாணி
வெண்ணீற்றான்பத்தியில்லார்தமக்களித்தீர்சிவதருமமேவகில்லீ
ரெண்ணீர்மைக்கமுதாநீரமுததனைவதென்னென்றியம்பிற்றன்றே.

உவர்த்தரைவித்துடன்கடலிற்கவிழ்த்தகலமழுக்குஙிலத்துற்றநீம்பா
லவத்தமாஙவைபோலச்சிவதருமமில்லவர்க்கேயளித்திரங்தோ
தவத்தராஞ்சிவனடியார்தமக்கொர்பிடியனஞ்சுத்தோதகமுகல்காப்
பவத்தினுற்கழுதாகிப்பசிப்பிணியாலுடன்மெலிங்தேபதைக்கின்றிரால்.

பரமனடியார்க்கின்னமுடைபொருளீந்தினியவுரைபகராதன்ஞேர்
திரமுறச்சொல்கதைதசிந்தைசெய்யாதுதிருமாலைதிருவிளக்கோ
டரனதாலயத்திலுற்றபணிவிடைசெய்யாதண்ணலாரிலிங்க
விரவுபூசனையியற்றாதுற்றதெனக்கேட்டலறிவீழ்ந்தவன்றே. [௩௬]

வாயதனின்மார்பதனில்வயிற்றினுமேயறைந்துகொண்டு மயங்கிவீழ்ந்த, பேயதின்கூட்டத்தினையவ்வனத்தில்வில்வமெடுக்க வந்தபெரியோர்கண்டார், சேயவசரிசொன்னதிறமுங்கேட்டதிசயித்தார்செறிந்தவ்வூரிற், போயதனைப்புகன்றிடவவ்வூரிலுள்ளோர் சிவபத்திபூண்டாரன்றே. (௩௭)

அன்னகரிலிருந்தருளுமந்தணஞேர்முதியனரனன்பனூர்தாஞ்
சொன்னவுரையத்தனையுமனங்கொண்டானதிசயித்தேசொல்லுகின்று
னின்னகரார்சிவதருமமெள்ளளவுமிதுவரைக்குமிசைந்தாரில்லைத்
துன்னுமிவருடன்கூடியானுமறியாக்கேடுசூழ்ந்தேனென்பான். [௩௮]

சிவநாமம்புகல்வோருக்குதவாதபொருளையவர்சேராவில்லைப்
பவமாற்றும்பரமேசன்பூதிகண்டிதரியாதபாழ்ந்தேகத்தை
யுவமானமில்லாதான்கோயிலில்லாவூரையரனுமையைநாளுந்
தவமாசவணங்காததலைபச்சூழாக்காலைச்சாற்றுநாவை. [௩௯]

மேவிலிங்கந்தன்னையருச்சனைசெய்யாக்கையையங்கிவிரும்பியுண்டே
தீயுறச்செய்திடவேண்டும்யானென்றுமிம்மேன்மைசெய்திலேனென்
றோவிலாதிரங்கியரனேபுரப்பாயெனவடலையுடலிற்பூசி
யாவியிறந்தானவனைத்தனயர்சுடலையிற்கொடுபோயட்கினூரால். [௪௦]

மற்றவனைச்சுடுமயானப்புகைபோய்ப்பசாங்கண்மருவுகானி
லுற்றதுதான்பட்டவுடனவ்வுருவம்போய்த்தேவவுருவம்பெற்றூர்
விற்றருவிமானத்திலேறியேசிவலோகமேவினூரா
மிற்றிடும்போதவன்சொல்சிவதருமங்கேட்டநகராரெவருமுய்ந்தார். []

இமையோர்கள்கேண்மினெம்மான்சரித்திரங்கேட்டோர்கதியினெய்தாரியாரே, யமைபாகுமரணகாலந்தனிற்கேட்டிடுமறையோனறிவுசோர்ந்து, சமையநூற்சிவதருமஞ்செய்திலேனென்றுமனத்தாபங்கூர்ந்தே, யுமைபாகன்கயிலையுற்றூனதன்பெருமையாவரேயுரைக்கற்பாலார்.

ஆங்கவனைத்தகனஞ்செய்மதூமம்படப்பெற்றடவியுற்ற
தீங்குபெறுவெறிக்கணங்கட்வினைதீர்ந்தான்கயிலைசேர்ந்தவரேலோ

னீங்கிவனும்வங்கமலர்கொண்டரனையர்ச்சித்தேயின்பம்பெற்றான்
பாங்கிலிவையுணராமலின்னசெய்தீரென்னநந்திபகர்ந்தானன்றே. [௪௩]

இருபத்தெட்டாவது பசாசுமோசனச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௮௮௩.



முப்பதாவது

# நந்திகேசுரர்நமனுக்குப்
# புத்திசொன்னசருக்கம்



வேறு

ஞாலமீதுநறுந்தளிர்பூவுண்டே
கோலியேத்தக்குளிர்புனறானுண்டே
சூலபாணிதுணைப்பதமுண்டுநாங்
காலனான்மெலிவுண்ணக்கணக்கின்றே. (௧)

தேவர்நந்தியைப்பார்த்தனர்செப்புவார்
காவலாளகருணைபுரிந்தெமக்
கேவலானிவையென்றியம்பாயென்றார்
தாவில்சங்கரன்றாணம்பினோமென்பார். (௨)

யாங்களீசன்றனையேயிறைஞ்சுவோம்
பூங்கழற்கன்புபூண்டோம்புகழ்சொல்வோ
மோங்குமாங்கவனுண்மைக்கதையெலாந்
தீங்கிலாதின்னங்கேட்கச்சிந்திக்கின்றேம். (௩)

ஐயகேட்டியோராயிரமியோசனை
வெய்யதோர்சமலோகவெளியெலாந்
தையல்பாகனுக்கன்பிலர்தாநிறைந்
துய்யலார்படும்பாடுகண்டோமென்பார். [௪]

தாக்குபாவியர்தங்களைத்தண்டித்தே
போக்குகின்றதிலேனம்போக்கியே
யேக்கமுற்றிடுமித்திறத்தாலரற்
காக்குபூசையுமொல்லையிலாற்றுவான். (௫)

இந்தவெந்துயரத்திடைந்தானென்றார்
நந்திகேசநமன்றனைப்பார்த்தனன்
பந்தமுற்றவரைக்கும்பிபாகமா
மந்தமற்றநிரயத்தழுத்தென்பான். (௬)

சம்புபத்தியில்லாதவன்றான்செயு
கம்புபுண்ணியமியாவையுநாசமா
மம்பணியற்றவன்றூசனுயினும்
வெம்புலேயனவன்செயல்வீணரோ. [அ]

அற்புதன்சிவபுண்ணியமற்றிலார்
கற்பகாலங்கடுசிரையத்துற்றே
வெற்படுத்திடும்வெங்கடுங்கானத்தி
லுற்பவித்துழுஞ்சோகாபுலேவரே. [கூ]

ஈங்குநீதானிறைஞ்சத்தகுமவர்
தாங்களியாரெனச்சாற்றிடக்கேட்டியேற்
றேங்கொள்கொன்றைச்சிவன்றிருநாமமே
பாங்கினேதும்பழவடியார்களே. (கூ)

வேறு.

சந்திரசேகரவிசுவநாதசங்கராசம்போசயிலநாதா
நந்திவாகனகாசிநாயகபார்ப்பதிநாதவீமநாத
வைந்துகரத்தனேயாறுமுகத்தனேயுமேதருமாமர்த்தகேச
சுந்தரசித்தேசுரர்தன்மணவாளசோமேசசூலபாணி. (க0)

மன்னுபழமலேநாதகாலகாலேசகிர்திவாசஞான
பொன்னிமபகேதாரநேசசதாசிவபுரத்தல்பூண்டநாத
தன்னிகரில்சித்தேசதருமகணேசுரசடைதன்மனுள
வென்னுமரநாமங்களேத்துவோர்நீபரவற்கிசைந்துளோரே. (கக)

வேறு.

கண்ணுதலாரிலிங்கங்கள்கண்டவுடன்பூசைசெயக்காதலிப்போ
ரண்ணல்சாதனம்பரிப்போர்தேகாந்தத்தினிற்கயிலேபடை குவோரா
லெண்ணுசைவாசாரசிவயோகியர்தாந்தூரத்தேயெதிர்ந்தாரென்றால்
விண்ணுளோர்முனிவர்சித்தர்வீழ்ந்திறைஞ்சுவாரெனவேவேதங்கூறும்.

மங்களஞ்சேர்சிவபுராணம்பகர்வோர்க்குதவிபுரிமாந்தர்க்கெல்லாஞ்
சங்கரன்றனருள்புரிவனிங்கிதுதான்சத்தியஞ்சதபமாமன்றே
திங்களணியிலிங்கேசன்பூசைசெய்வார்தமைக்கண்டுசிந்தையார்வம்
பொங்கிவிழிப்புனல்சோரவுருகுவோர்சென்மவலேப்புகுந்திடாரே.(கங)

என்னேரமும்பகவற்சிந்தனேசெய்வோர்பதத்தையிறைஞ்சுவோராற்
றன்னேரில்லாதசிவன்றனேப்பூசைபுரிந்தபெனத்தயவுகூர்வான்
மின்னேர்செஞ்சடையானேயுதயத்தேதப்பாமல்விசேடத்தோடு
நன்னேயமுடன்பூசிப்போர்முனிவோர்பூசைபுரிநன்மையோரே. (கச)

செய்யசிவநேசர்தாம்வைகறையிலெழுந்தரனேச்சிந்தைசெய்தே
யையனேயுமைகணவாவருள்புரிவாயெனப்பரவுமதிஞரார்வார்

மையலுறுமனைவிமைந்தருடல்பொருளெல்லாஞ்சிவன்றன்வசமேயெ
வெய்யதொருசமுசாரவினையொருவிப்பேரின்பவீடுசேர்வார்., [ன்பார்

நினைப்பதெல்லாஞ்சிவன்சரிதம்புகல்வதெல்லாமவனுமகித்தமே
கை, தனைக்கொடுசெய்திடலெல்லாமரன்பூசைசூழ்வதெல்லாந்தலைவ
ன்கோயில், மனப்பமென்பொடுமுடலால்வருந்தொழிலெல்லாம்வள்ளல்
வசமேயாக்கித், தினைப்பொழுதுமவப்பொழுதாச்செலுத்தாதாரசிவக
ணத்தின்செய்கையோரே. (௧௬)

அப்படியேசிவபத்திபுரிவோரனையின்றதந்தையன்னையாவார்
மைப்படிகண்மனைவிமைந்தர்சுற்றத்தாராளடிமைமற்றுமுள்ளோர்
செப்பருமன்னவன்பூசைப்பலத்தினர்சிவபதத்திற்சேர்வார்திண்ண
மெய்ப்பொருளுஞ்சிவமாகப்பாவிப்பார்சிவரூபமெய்துவாரே. (௧௭)

சங்கரன்றனடியவர்தமமகிமையையிவ்வளவெனறுசாற்றலாமோ
மங்களமாமவரிடத்திற்பபத்திவரவுனக்குவகுக்கின்றேனமா
லங்கவர்தாமுறையிடத்திற்செலவுனக்குர்தூதருக்குமடுப்பதன்று
லிங்கதனைச்சங்கையிலாதியமவழியெனப்பின்னுமியம்புகின்றான். [௧௮]

மறைநான்குப்புகல்பூதியுருத்திராக்கந்தரிப்போர்மலர்விலவத்தா
லிறையோனைப்பூசிப்போர்சிவதீர்த்தந்தனிலாடுமியல்பினோர்கள்
கறையாகண்டன்கயிலைகாளத்திமலையேகாமபரம்பொன்மன்ற
நறையாருமிடைமருதுகுமபகோணந்தொழவோநாடுவோர்கள். [௧௯]

தேசுபெறுமாவடுதண்டுறையாரூர்மறைக்காடுசெங்கோடுள்வோர்
வாசமுறுமல்லிகார்ச்சுனம்பிரமராம்பிகையைவந்திப்போர்கள்
காசியில்வாசம்புரிவோர்விசுவலிங்கபூசைபுரிகருணையாளர்
நேசமுறமுத்திமண்டபத்தையன்னபூரணியைநினைக்கின்றோர்கள்.[௨௦]

கணபதியாந்துண்டியைவீரேசுரனைப்பிரணவத்தின்கடவுளானை,
பிணையின்மணிக்கன்னிகைவாணனைத் தொழுவோரிடத்திலுற விதயத்
தெண்ணல், புணருமுன்றன்தூதருக்குப்புத்திகற்பிப்பாயமனேபுனையும்
வேணிப், பணவரவற்கபாரதம்பணிணிலுய்ந்தோரில்லையெனப்பகர்ந்தா
னந்தி. [௨௧]

முப்பதாவது நந்திகேசுரர்நமனுக்குப்புத்திசொன்னசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௦.



முப்பத்தோன்றாவது

# அபுத்திபூருவசிவபுண்ணியச்சருக்கம்



வேறு

தண்பெற்றமலர்கள்பழுதற்றதேடிச்சங்கரனார்முடிசாத்தக்கல்கயிற்
க லிற், கண்பெற்றுறொருமுனிவனிருவர்காதிற்காத்திருநதுதோத்திரத்

தின்கானம்பாடப், பண்பெற்முர்பாஞுடனெக்காளும்வாழும்பாக்கியமு ம்போக்கியமும்பரிவாற்பெற்ற, பெண்பெற்முன்மலேயரசனிவர்கள்பெற் றபேறுலகிலொருவர்களும்பெற்றிலாரே. (க)

ஆரணஞ்சொன்முனிபகர்வானிவைகள்சொன்னவருணந்திதனைத் தொழுதஞ்சலிகள்செய்தே, நாரணனுதியதேவரிவன்முன்செய்தநல்வி னையின்ரகசியத்தைநாங்கள்கேட்ப, வேரணியுஞானவாரிதிநின்வாக்கா லிசைத்தருளவேண்டுமெனவவரைநோக்கிக்,காரணமாமிவையுரைக்கிற் கேட்போர்க்கெல்லாங்காட்டுமெதிசயமென்றேகழறுகின்முன். (உ)

புலவீரகாண்மகத்துவமாமணிகொழிக்கும்புணரியெனுஞ்சிவன் பெருமைபுகலலாமோ, நலமருவுமிலிங்கபூசனையின்மேன்மைநாதனறிந் துரைப்பதல்லானம்மாலாகா, திலகியமாணிக்கவகைதேடிவைத்தேயிரு ப்பவனங்கதன்விலேயுநலமுந்தேர்வா, னுலகதனிலவைபோலச்சிவதன்ம த்தினுண்மையினைச்சிவன்முனேயுணர்வன்முனே. (ஙு)

சித்தரசகுளிகையிரும்பாதிசேர்ந்தாற்செம்பொனேயாகுந்தீப்போ றியொன்றுற்முல், வைத்தருள்காற்பாசமலேதீருமன்னவாறுபோற்சிவத ருமந்தானென்றுற்முன், மெத்தவுளபாவபருவதங்களெல்லாம்வேராத் தூளாகிவிடுமுத்திசேர்வ, னுத்தமனுஞ்சிவன்றவர்க்கிறைவன்போலவு யர்தருமத்திறைபரமன்றருமந்தானே. (சு)

அண்ணல்சிவபுண்ணியத்திற்கதிகதன்மமாகபுராணவேதத்துமில் லேத், திண்ணமிதுவென்றிருகையெடுத்தேநந்திசெப்பினன்பின்னருமே செப்புகின்று, னென்னுமிதற்கேமுத்திமற்றோர்தன்மத்தெய்துமோகதி சாதியிரத்நமல்லாற், பண்ணும் * வளே க்காச்சுமணிதரித்தான்மேலாம்ப லனுண்டோபெருமையுண்டோபாருளோர்க்கே. [௫]

அன்னதுதானிற்கவிந்தவேடன்செய்தவரும்பாவகோடிகளுர்கள வையுண்டோ,வின்னவன்முன்றந்தைதுணையோர்கள்பாவவீட்டதார்கூ ட்டத்தாரெவருமன்னோர், மன்னுமிவன்முதைகொணர்ந்திடும்வங்கத்தி ன்மலரதனையெடுத்திவன்முன்புறத்தெரிந்தான், முன்னிருந்தவிலிங்கத் தின்முடியில்வீழ்ந்தேமுடிவிலரும்பூசையாய்முடிந்தத்ன்றே. [சு]

என்னசொல்கேஞ்சிவலிங்கமுற்றதிங்கேயென்றறியானெறிந்தமல ரிறைமகிழ்ந்தான், றன்னையறியாதுவந்தபுண்ணியத்தாற் றம்பிரான்கயி லேயினிற்சார்கின்முனுற், பன்னரியதலேவனேயேயறிந்துபத்திபாவனையா ற்பூசனையைப்பண்ணுவோர்கண், மன்னுபலன்றன்னேயெம்மாலுணரலா மோமறைநான்குமின்னதெனவகுக்கலாமோ. (எ)

இப்படிதானறியாமற்செய்துபூசையிரும்பலன் பெற்முனொருவனி மையோர்கேண்மின், விப்பிரமான்கற்பழிந்தாடந்தமைந்தன்வேதியர்த ங்கருமங்களொன்றுஞ்செய்யா, னெப்பரியவிந்தவளதேசந்தன்னிலுற்று

ளான்கல்விநலமொன்றுமில்லான், றப்பிலாதவன்செய்தபாவமேகோடிதன்னையின்னமென்றொருவர்சாற்றலாமோ. (௮)

மைபெழுதிக்கண்ணினெற்றிப்பொட்டுமிட்டேவாரெழுதுந் தனங்காட்டித்தனங்கள்வாங்குந், தையல் + சாரத்திளம்பெண்ணொருத்திதன்னைத்தனதுமனையாளெனமேவதழுவி வாழ்ந்தான், செய்யவவன்வயிற்றிலொரு கருவுண்டாயிருந்தவளீர்த்தவளிளமைசேரக்கண்டே, கையனவனவடனையுங்காதலாலேகலந்தின்பநுகர்ந்துமனங்களித்தானன்றே. ()

பூங்குழலாளவளுமொருபெண்ணைப்பெற்றாள்பொற்புடனே வளர்த்தவளைப்புணர்ந்துகொண்டா, னங்கவடன்மோகதத்தாலவட்குவேண்டுமரும்பொருள்கள்கொணர்ந்தளிப்பானொருநாளன்னா, ளங்கலவிசெய்யும்போதுசுகந்தப்போதுநலந்தரு பஞ்சணைபரப்பநல்காயென்னி, லீங்குநானுனைப்புணரேனென்றாளன்னாளித ழூறற்கிச்சைகொண்டா னீவேனென்றான். (௧௦)

பாதிரிராவினிற்பஞ்சபாணனார்தம்பகை வனார்க்கமைத்த நந்தவனத்திற்புக்கான், போதலருஞ்சுகந்தப்பூஞ்செடியைக்கண்டான் புவனமொருமூன்றினுங்கண்டறியேனென்றான், மாதவடான் மகிழுமனைப்படப்பைதன்னின்வைத்துவளர்த்திடவேண்டுமெனநினைந்தான், சீதமலர்கவர்ந்தோடிச்செலுங்காலந்தச்செழுமணந்தென்கால்கொடெங்குஞ்சென்றதன்றே. (௧௧)

அந்தமலர்ச்சுகந்தமொருவன்மீகத்திலடுத்துளதுபடமெடுத்தேயரா டும்பார்த்தண், மந்தமாருதந்தவழும்வழியேபயோடிவந்துமனைநோக்கிவருமவன்பாலுற்றே, சந்தமலர்வாடைகண்டேயன்னோன்மெய்யிற் றழுவிடவேமெய்பதறிக்கலங்கியோடிச், சிந்தையுந்தள்ளாடியோர்சிவலிங்கத்தின்றிருமுன்னர்த்தடுமாறிவீழ்ந்தானன்றே. (௧௨)

வீழ்ந்திடக்கைப்பூச்சிதறியவ்விலிங்கமேல்வீழ்ந்தவவன்புரண்டுநெருக்கநோந்தே, சூழ்ந்திடமெய்வளைந்தகொடும்பாந்தள்சீறிச்சுருக்கெனவேகடிக்கவிடந்தலைமேற்கொண்டே, யாழ்ந்தவருந்துயருழந்தாங் குயிரிழந்தேயவன்கிடந்தான்றனைவிடுத்தவ்வரிபநாகம், வாழ்ந்தநறுமையிலிங்கந்தன்னைச்சூழ்ந்துமாணிக்கவிளக்கேற்றிவதிந்ததன்றே. [௧௩]

ஈங்கனமிவ்வாறுநிகழ்தன்மையெல்லா மெம்பிரானுணர்ந்திமயமென்னவோங்கு, மோங்கலரசருளரசிகேட்பாயென்றேயுரைக்கின்றானந்தமக்கோருவகைவாய்த்த, தாங்குளதோர்புதுமையதுதன்னைக்கேட்கிலதிசயமாமவனிதனின்மாந்தர்க்கெல்லாந், தீங்கொழிபூசனைபுரியப்பத்திசேருஞ்சித்திரமாமென்றுபின்னுஞ்செப்புவானால். [௧௪]

விந்தவளநாடுளதந்நாட்டிலுற்றமெய்யன்பனொருவனுளனவனுண்டாக்கு நந்தவனமொன்றுளதவ்வனத்திலுற்றநல்வளமத்தனையுநம்மானவிலலாமோ, கந்தமலர்ச்சுகந்தமெழுகாதம்வீசுங்கனிகனியுந்தேனும்

+ சாரப்பெண்-வேசி

பூந்தேனுங்கூடி, யந்நவுலகினிற்கலுழிக்கால்களாகுமவ்வனத்தி னெழி
லைநீகாண்பாயென்பான். [௧௫]

முல்லைசிறுசண்பகமார்பிச்சிவெட்சிமுருகலர்சண்பகம்வகுளங்குர
வங்கோங்கம், குல்லைகரவீரங்கூவிளமந்தாரங்கோட்டுப்பூக்கொடிப்பூநீ
ர்ப்பூநிலப்பூ, வெல்லையிலாவகைநிறைந்தவண்டொனுமெய்தாத காவனு
ளவிதனைக்காண, வல்லைவருகெனவிமயமங்கையோடு மணிவிமானத்தி
லெம்மான்றான்வந்தானே. [௧௬]

வந்துவிமானத்தினைவிட்டிழிந்தேநந்தவனத்தின்மலரோடை யொ
ன்றுமணிச்சோபான, மந்தமுளகரையிலகுமணிப்பூங்கோயிலதனிலுள
சிகரகோபுரங்களாதி, சுந்தரமாமண்டபமாளிகைப்ராகாரஞ் சூழ்ந்தவதி
ன்மாணிக்கவிலிங்கமேவு, மெந்தையந்தவிலிங்கத்தைத்தழுவிக்கொண்
டேயினிதினவணொருகணம்வீற்றிருந்தானன்றே. [௧௭]

தீபமாலையின்சிறப்புமவணிலுற்றசெழுஞ்சுகந்தமாலையினிற்சிறப்பு
ம்பார்த்தான், கோனைவவாயுமையுடனேபுறத்திற்போந்தக்குளிர் சோலை
க்கனிநைவேத்தியமுங்கொண்டா, னவனுடனமதுபத்தன்பதிட்டைசெ
ய்தவரிபநருமதையிலிங்கமதனைக்காணப், போவதுநாமென்றதனின்மே
ன்மையெல்லாம்பூவைமொழியாளுமைக்குப்புகலுகின்றான். (௧௮)

மங்களகேணருமதையிலிங்கமாகும்வாணலிங்கந் தனக்கிணையாவ
ண்டமீதி, லெங்குமிலைமாணிக்கவிலிங்கந்தானுமிதற்கிணைபோமனமகி
ழ்ந்தேயெந்நாளுந், தங்கிபகலாதிருப்போமதனைப்பூசைதான்புரிவோ
ரிகபரமுந்தழைநதுவாழ்வா, ரங்கதனைக்காணநமக்குளம்பூரிக்கு மம்பி
கையேயெனவவண்வந்தடைந்தானன்றே. (௧௯)

படநாகஞ்சூழ்ந்தமையுங்காட்டியந்தப்பளிங்கத்திற்கண்பதித
ல்காட்டி, யுடனாகந்தீண்டினோன்றனையண்ணலுள்ளத்தின்படியேயவ்
வுடலைநீக்கித், திடனாகத்தெய்வவடிவாக்கிமானத்தேற்றியேகணங்களுய்
க்குந்திறமுங்காட்டிப், புடைசூழ்ந்தபுயங்கத்தானமக்குநாகபூடணனெ
ன்றொருநாமம்புகுந்ததென்பான், [௨௦]

மணத்தமலர்வாணலிங்கமீதுவீழ்த்திவாளரவந்தீண்டிடவே வீழ்ந்
துமாண்டு, பிணத்துருவமானவனைக்கயிலைவாசம்பிரியாதபடிகணத்துட்
பெருமையாக்கிக், குணத்துருவாங்கொம்பினொடும்வர்புலாவுங் குளிர்
சோலைவீற்றிருந்தான்கோமான்கண்டு, ருணர்த்துவதோர்சிவபூசைமே
ன்மையிவ்வாறுவனறிபான்கத்தரிப்பூவுய்த்துய்ந்தானே. [௨௧]

இன்னவனையமலோகத்தேற்றலாமோவிமையோர்கள்கேண்மினின்
னமுளதோர்காதை, மின்னுமல்லிகார்ச்சுமாம்வரையின்பாங்கர்வனவே
டச்சேரிதனிலிரந்துண்பானோர், பன்னுமறையோன்புரிந்த பாவந்தன்
னைப்பகர்வரிதாற்பலிகொ * ளரிவழுதுணங்காய்,தன்னைநருமதையாற்றி
ன்கரையிலிங்கசன்னிதியிலட்டுண்டேசார்கின்றானல். [௨௨]

* அரி-அரிசி.

அங்கவன்றுணித்திறஞ்செல்கின்றநாளிலரும்பிரதோடத்தினம் வந்தடுத்ததந்நா, டிங்கடிரயோதசியாதிரையும்வந்துசெறிந்திடுமகாதினமாய்ச்செறிந்தவன்றே, பொங்குமுடலவேர்வையினாற்புனலிலாடிப புனிதலிங்கத்தெதிர்புகுந்தான்றன்கொணர்ந்த, வங்கவிளங்காய்தனினீர்தெளித்தேயந்தமணியிலிங்கந்தனிலறுகான்மூடிவைத்தான். [௨௩]

பரிந்திடுமன்னேன்பலிகொளரிசியையெல்லாம்பாத்திரத்திற்பெய்து பாணியின்மேலேற்றித், தெரிந்திடுமிந்தனங்களிட்டுப்புரங்கள்வேவச்சிரித்திட்டான்முன்னமேயெரித்திட்டானா, லரிந்திடுகெத்தரிக்காயுஞ்சமைத்துக்கல்லைபமைத்ததனிற்கொடுவந்தேயவைகளெல்லாஞ், சொரிந்தருந்திவருந்துமிளைப்பதனாலாகஞ்சோர்ந்துகிடந்தேவிழியுந்துஞ்சினனால்.

வழுதுணங்காய்நனைபாணியிலிங்கமீதுவார்ந்ததபிடேகமா யதனைமூடும்,பழுதிலறுகர்ச்சனையாபட்டேயிட்டுண் * பாத்துநைவேத்தியமாகக்காட்டத்தீயே,முழுதுமெரித்திடும்விளக்காய்முன்னேதுஞ்சுமுறைமைவணங்குதலாகமுடிந்தவன்றே, பழுதிலிவன்புரிந்தவெலாம்பிரதோடத்திற்பத்திபுரிபூசனையாப்பரமன்கொண்டான். [௨௫]

அனையவன்றன்கனவிலந்தலிங்கத்திற்கேயபிடேகமர்ச்சனைநைவேத்யமாதி, புனிதமுறுதிரவியங்கொண்டரியபூசைபுரிந்ததுபோற்றெரிந்தெழுந்தான்பின்னர்க்கண்டான், வனைசிகரகோபுரமண்டபப்ரகாரமாணிக்கமயவொளியாய்வயங்குமாறு, மினியமணிமாளிகைபொன்னிரத்நகோடியானைபரிசேனைமின்னார்யாவுந்தானே. [௨௬]

வந்தவனைச்சூழ்ந்தரம்பைமாதர்வேண்டும் வரிசைசெய்வார்கவரியிரட்டுறுவார்தம்மிற், சுந்தரிதானொருத்தியவனருகிருந்து துணைத்தோளைத்தழுவுகின்றாளதனைக்கண்டா, னெந்தவகைநீவிர்களியார்புரிசையாதியாவர்பெற்றபாக்கியமீதிந்த்ரசாலந், தந்தவகையோவென்றுவினவினனத்தாழ்குழையார்தமிலொருத்திசாற்றுகின்றாள். [௨௭]

பூசுரகேள்பிரதோடந்தன்னிலிந்தப்புனிதநருமதைமகாலிங்கந்தன்மே, னீசொரிவங்கக்காய்மேல்வார்த்தநீராணிகரிலபிடேகங்கள் செய்தாய்பின்னர், மூசுமறுகருச்சித்தாயன்னந்தன்னைமுன்னிருந்தேயருந்திநைவேத்தியஞ்செய்வித்தாய், தேசுபெறவிறகின்றீவிளக்கும்வைத்தாய்திருமுன்னாத்துயின்றிறைஞ்சுஞ்செயலுஞ்செய்தாய். [௨௮]

இத்தனையும்பத்தியினாற்செய்தபூசைக்கிசைந்ததென்றேயெம்பெருமானிதயந்தன்னில், வைத்தளித்தபாக்கியங்களியாங்கள்கண்டாய்மன்னுமின்னம்பிரதோடமகிமையாலே, யுத்தமமாமுத்திநலமுடிவினீபெற்றுய்ந்திடுவையென்றுரைத்தாளெனவேநந்தி, சித்தமகிழ்ந்தேவரைப்பார்த்திசைத்தானென்றுதிருந்துமறையோதுமுனிசெப்பினனே. (௨௯)

**முப்பத்தோராவதுபுத்திபூருவசிவபுண்ணியச்சருக்கமுற்றிற்று.**

**ஆகத்திருவிருத்தம்-௩௩௯.**



முப்பத்திரண்டாவது,

# பாக்கியதேவதைச்சருக்கம்.



வேறு.

கைவேலையுன்பாதபூசைசெய்யுங்கடன்கோயில் சூழ்வதுவேகாலின்வேலை, மைவேலைவிடமுண்டகண்டத்தெண்டோள்வரதனேயெனப்புகழ்தல்வாக்கின்வேலை, மெய்வேலைதிருப்பணியின்குறைகள்செய்யும் வேலையெனையாண்டருளுமவிமலனேயா, னுய்வேலைகொண்டருளியெந்தவேலையுன்னடியேன்முன்னர்வந்தேயுதவுவாயே. (௧)

நந்தியிமையோர்கடமைப்பார்த்துச்சொல்வானல்வினைப் பாக்கியதெய்வந்தன்னைநோக்கிச், சிந்தைமகிழ்வேதியன்றான்வணங்கி யிகதச்செல்வமெனக்கெதுகாலநிலைக்குமெம்மான், றந்தருளவெத்தவமியான்செய்தேனீதுசாற்றுதியென்றிடநகைசெய்தவன்றனக்கே, புந்திதனிற்சிவலிங்கபூசைசெய்யும்புத்திவரமுத்திபெறப்புகலுமன்றே. (௨)

வேதியகேள்பிரதோடகாலந்தன்னின்மிக்கருமதையி லிங்கபூசைசெய்யு, நீதியறியாய்கொணாந்தவழுதுணங்காய்நிறையநீர்பொழிந்துசிவக்குறிமேலவைத்தாய், கோதிலறுகாற்பொதிந்தாயம்மீதிசற்கேகுளிரபிடேகத்தொடருச்சனையாயிற்றாற், றீதிலாத்தலங்காலமூர்த்தி மேன்மைசேர்ந்தவற்றாற்பூசனையாய்ச்சிறந்தவன்றே. (௩)

எம்பிரான்கருணைபொழிநிதியமானோனேழையடியாரிடர் கண்டிரங்குமீச, னமபிநீயறிந்திலைசெய்ததனைச்சிந்தைநயந்துபெருவாழ்வளித்தானதன்கண்டா, யம்புவியிற்பிரதோடகாலந்தன்னிலண்ணலாதமமையறிந்தருச்சிப்பார்க, டம்பயனையவர்பெறுமபேறதனையாவா சாற்றுவார்சிவரூபந்தானாவாரே. (௪)

பரமனார்சிவலிங்கபூசைதன்னைப்பத்தியுடன்புரியிலிந்தப் பாக்யமெல்லாந, திரமதாமிகழ்ந்தனையேயிழந்துபோதிதிருவுமுயர்செலவபோகங்களியாவு, முரமுறுமெய்ப்பத்திபெற்றோரிடத்தைநீங்காதுறைந்திடுமிங்கிதனிலொருகாதைகேட்டி, புரவலன்மேனாளொருவன்சிவனைப்பூசைபுரிந்ததனாற்பெருவாழ்வுபொருந்தப்பெற்றான். (௫)

இளநலமின்னார்மோகமயக்கஞ்செய்யுமின்பவிளையாட்டினாலீசன்பூசை, யுளமதனினிகழ்ந்ததனாற்கேடுசூழ்ந்ததுடைநாடூர்மனையரசினுரிமைசெல்வந், தளவநகைமடவியர்கண்மைந்தர்சுற்றந்தானைகாவலரியாருமியானையுண்ட, விளவினுறுகனிபோலுமுனிவன்சொல்லால்விண்ணவர்கோனுற்றெனவுமடவிசேர்ந்தான். (௬)

உன்றருங்கானகம்புகுந்துபசித்தீவெப்பமுள்ளெரியமேலெரியவெயிலின்கோடை, மன்னவன்வெந்துயரமுற்றான்செல்லும்போதின் யன்னுமன்னவனத்திலொருவில்வநீழ, றன்னிலொருசிவயோகசைவர்பூதி

தாங்கிவிழிமணித்தாமந்தரித்தார்பூருத், துன்னிருகண்ணுரிதபத்தரனை க்கண்டுநெடூழிருந்தார்தமைக்கண்டான்ரூழூதான்சொல்வான். (எ)

அம்புவியினம்பர்பதத்தன்பர்க்கெல்லாயதிகராயுறைநின்றீரையாநீரே, யும்பரிவுசேர்சம்புநாதர்தாநெட்டூரேர்கண்டீரெனதுசெல்வ முளவெலாம்யான்,கம்பமுறக்கவர்ந்தனர்வேதங்களெல்லாங்கருணைநிதிபுரந்தளிக்குங்கடவுளென்றே, தம்பமுறப்புகல்வதென்பாற்காணேனென்றுசாற்றிடக்கேட்டருள்போகத்தவர்சொலவாரால். (அ)

கோபமுற்றூர்நெட்டூரரென்றதற்கேகூறுமறையருட்கட லென்றதற்கேபச்சாத்,தாபமெய்திபன்னவனைநோக்கிவேதந்தபாபரர்சங்கரரெனவேசாற்றல்பொய்யோ, பாபவினைநீபுரிந்தாயதனாற்செல்வம்பற்றறவிட்டுனையகன்றபடிகாண்கஞ்ச, நாபனுடனயன்றேடற்கரியசோதிநாதனைநீகுறைபுகறனலமன்றென்பான். (௯)

முந்திபவிச்செல்வமெலாந்தந்தநெந்தைமுதல்வனென வறிந்திலாய்சிவனுமங்கள், புந்தியினிற்கொண்டறியாய் பூசைசெய்யும்புத்தியும்பத்தியுமற்றும்புணியஞ்செய்யாய், சிந்தைமகிழ்ந்துண்டுநெந்தலணிதல்பூசல்சேயிழைபாரின்பமுதலியவுமான, வந்தமிலாப்போகங்களனைத்துநாதர்க்காக்கியேயின்பநுகர்ந்தறிந்திலாயே. (க௦)

இப்போதுசங்கரரைக்கொடுமையோரென்றிகழ்ந்தனையாமதுபொறுங்கண்டாய்நீசெய், தப்போதியுனைவெறுத்திவழிபடாததன்மையாற்றண்டனையாற்புத்திதந்தார், கைப்போதுகொண்டுபூசனைசெய்தாயேற்கருயிணையினுவிழந்தசெல்வமனைத்துஞ்சேர்தி, யொப்போதிலாதசிவன்வணங்கிளுருக்குதவாதபொருளுளவோவுணர்த்துங்காலே. (கக)

செய்பதிருவுறுநாளிலெம்பிராற்குத்திருப்பணிமகாபூசைச் சிறப்புஞ்செய்தே, மெய்யடியார்தமக்கன்னஞ்சொன்னமாடைவிரும்பியளித்தரனருளைமேவப்பெற்றே, துப்பதொருவாணுளும்பொருளுநாளுஞ்சுருங்காதவகைபெறவேயறிந்திலாயா, லுய்யவருஞ்செல்வத்தையிழந்துதேகத்துயிரிழந்தோர்தமைப்போலவுறுகின்றூயே (கஉ)

நல்வினையின்பேறுடையார்தமக்கெந்நாளுநாதன்பூசனை யமிர்தபானம்போலு, மல்வினையார்தமக்குவிடமாகுமன்றேயருந்துயரம் வந்திடினுமையன்பூசை, சொல்வழுவாதியற்றினரேலவர்கடுன்பஞ்சுடர்கண்டவிருள்போலத்தொலையுமன்றே, பல்விசையம்பெறவிழந்தசெல்வமேவப்பரமனுராதனையின்பணிசெய்வாயே. (கங)

காமனைக்கண்ணுற்குமுரகண்டன்றன்னைக்காலினு லடர்த்தருளுங்காலகால, நாமனைப்பூசனைபுரிபதினைதியாயினுருமதைமகாலிங்க நாதனுருஞ், சோமனைச்சென்னியில்வைத்தானறனையர்ச்சித்தாற் சொலும்பூசையொன்றனந்தகோடியாகு, நீமனத்தினினைத்தவெலாம் பெறுதியின்னுநிகழ்த்துதும்பாகிழலைரும்பூசைதானே. [கச]

பரமனுருவமாகமேவுமிந்தப்பருப்பதத்திலுறையிலிங்கமநேகமாகுந்திரமதாமவர்ப்பதியார்பூசைசெய்ததிரிபுராந்தகலிங்கமொன்றுமேவுமுரமதாமவ்விலிங்கத்தைப்பூசித்தாலொன்றுசதகோடியாமன்பினோடுங்கரமதாலறுகுவில்வமொன்றுசார்த்திற்கைவசமாமுத்திநலங்காணலாமே.

தீர்த்தகோடிகளெல்லாமுருவுகொண்டுசேர்ந்ததிருப்பருப்பதத்தின்மேவுகின்ற, மூர்த்தியாமுப்புராந்தகலிங்கமுன்னலைவதனைப்புரிந்தவன்னந்தன்னை, பார்த்தபானன்பாகமெப்பத்திடச்செய்தோர்களிலமேலாமருசெய்துகதியுஞ்சேர்வார், கூர்த்தசெபந்தவந்தானம்விரதம்யாகங்குறித்திப்பிலையைப்பலனநந்தகோடியாமால். [கசு]

அந்தலத்திலிடைக்கண்டாகன்னாரெம்ப நளிங்கநாயகாதாமுளரன்றோரைப், பந்திபிறுப்பூசைசெய்தோர்பாவநீங்கிப்பாகதியிற்புருஷரதற்கையமின்றான், முந்தரவர்சன்னிதியிலமுதகுண்ட மூழ்கிலவர்பெருங்கைதத்துமூழ்ந்கவெண்டு, முத்தமாமங்கவர்க்கேசாத்துபெண்பூவொன்றினுங்கோகோடிசெல்வமுறுவரன்றே. [கஎ]

ஆங்கேபுண்ணியகோடீச்சரமென்றேருமரியகோடுமுடியிலிங்கமேவுகின்ற, தீங்கேதுமில்லாப்புண்ணியகாலத்திற்றெரிசித்தோர்புண்ணியகோடிகளைச்சேர்வார், பாங்கேயோர்பூதிருண்டபதனெனுப்பாரிருள்ளதீர்த்தமெல்லாம்வந்துகூடு, மூங்கேமெய்த்தலந்தீர்த்த மூர்த்திபெருமையுடையதிலைவபோலுலகிலடையிலாவே. [கஅ]

உன்னதமாஞ்சிகரேசன்றன்னைக்கண்டோருலகினி லெங்கேனும்பொயுடல்வீந்தாலு, மன்னுசிவலோகத்தின்மேவுவாரவ்வளவாயினிலாடகவீசர்மருவுகின்றார், சன்னிதிபாடகதீர்த்தந்தன்னிலாடிச்சங்கராமவர்தமையர்ச்சனைசெய்தோர்கள், பன்னுபரகதியடைவர்கண்டாயன்னபருப்பதத்திற்பிரமராம்பிகைசீர்கேண்மோ (க )

ஸ்ரீதேவிபிரமராம்பிகைதகன்பாதந்தெரிசித்தோர் பூசித்தோர்கிங்கைசெய்தோர், பூதேசமுழுதுமெபுராந்தகனின்னுட்புரந்தான்போற்புரந்துசிவபுரத்தில்வாழ்வார், மாதேவிபவானியைவணங்குவோர்கண்பரிட்டினிட்டங்கொடுப்பனென்றேவிரதம்பூண்டாண், மீதேவர்பணிதேவன்றேவிமேன்மைவேதமொருநான்கினுமேவிளம்பொணாதே. (உ0)

வேந்தகேளிவையெலாங்கவுக்ரவிமலராஞ்சிவன்றனையே பூசிப்போர்க்குச், சாந்தராயருள்புரிவருணதுதுன்பத்தானீங்கும்பூசிபெனவில்வழுலம், வாய்ந்தசிவயோகர்சொன்னூறென்றுசெல்வமன்னுதெய்வநூமறையாகதிதிரத்திற், போந்தமறையவன்கேட்பபகர்ந்தெதென்றுபுகழுநந்திபெருமையவர்க்குப்பின்னுஞ்சொல்வான். (உக)

முப்பத்திரண்டாவது பாக்கியதேவதைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கூசு0.



## முப்பத்துமூன்றாவது

# பலிபீடவன்னமகிமைச்சருக்கம்



### வேறு

வெறியேறியபூஞ்சடையாய்விடையாயுமையோர்புடையாய்
மறிமேவியகைபிடையாய்வரியார்புலித்தோலுடையாய்
நெறியேதுமிலேன்வழியென்றிலையேபன்வினையேனுனையே
குறியேன்சிறியேனடியேன்கொடியேனெனையாள்குவையே. (க)

அல்லார்கண்டன்பூசையமைப்பாயரசேயென்று
சொல்லாநின்றபோகிதுணைத்தாடொழுதானழுதா
னல்லாச்செல்வமுளநாளடிச்செய்யாதமர்ந்தே
னில்லாமையினன்மெலிவேனென்செய்வேனியானென்றான். [உ]

பரியும்பத்தியில்லேன்பஞ்சாமிர்தமேமுதலா
முரியபொருள்சோடசமாமுபசாரமுமில்லாம
லரியபொருடன்பூசையமைப்பதெவ்வாறையா
தெரியுமெனதுசிந்தைசிறுமைத்தொழில்செய்திடுமோ. (௩)

ஓமப்பொருளொன்றில்லாதுழுற்றும்பாகர்தன்னு
லாமப்பயனென்றுண்டோவவைபோலுமையாள்கணவ
னுமப்பூசைக்குரியநல்லபொருளொன்றிலதேற்
காமற்காய்ந்தகடவுள்கருணைபெறுமாறெவனே. (௪)

என்றுநின்றுபுலம்பாவினையுமரசன்றனையே
நன்றுநோக்கிபோகர்நகைசெய்துரைசெய்கின்றா
ரன்றுசெல்வம்பெற்றபாரனினைபாதபர்த்தாய்
குன்றுமுன்றன்மதிலைக்கொழுந்தீக்கொளுவாயென்றார். (௫)

எவ்வாறேனுங்கிடைத்தவியங்கொண்டிறைவன்பூசை
செய்வாயென்றபோகர்திருத்தாளிணையிற்பணிந்தே
யவ்வாறரசன்புரிவானணிநீர்வாவிமூழ்கிக்
கைகளாறருகுகொய்தான்கமழ்மஞ்சனமுங்கொணர்ந்தான். (௬)

ஆவிக்கருகேயுறையுமமுதத்திரளாமிமயத்
தேவிக்கிறைவன்குறியைச்சிந்தித்தருச்சித்தனனும்
பாவித்திடுமெய்ப்பூசைபலநாட்புரிந்தங்குறைந்தா
னேவுற்றனவெய்திலதாலுணவுற்றிலன்மன்னவனே. (௭)

உவந்தசெல்வமுறுநாளுரியபூசைபுரியா
வவன்றனகந்தையடங்கவருநாளிலொருநாட்
சிவன்றனுவின்மதிநாடிரயோதசிவந்தனவாற்
கவன்றநேசன்கஞ்சக்கமழ்பூக்கொடுவந்தனனே. (௮)

அற்றைத்தினத்திலறுருமடவிப்பொருளுங்கொணர்ந்தான்
கற்றைநச்சடையான்பூசைகருதிப்புரிந்துகண்ணீர்
முற்றப்பெருகவீழ்ந்துமுறையிற்றாழ்ந்தேயெழுந்தான்
சுற்றிச்சூழ்ந்தேயுடலந்துளங்கக்குழைந்தாடினனே. (௯)

கருணாநிதியெமபெருமான்கண்டேயவன்றன்செல்வம்
வருமாறருள்செய்தன்னான்மன்னன்மகிழ்செய்திடவே
பெருமாநிலமுமரசும்பெருகுங்கிளையும்பொருளு
முருமாவழகுந்திறமுமுற்றேநவிறல்பெற்றனனே. (௰)

வேறு.

இறந்திசெந்தன்பெருஞ்செல்வமுள்ளவெல்லா மிந்திரன்பெற்றாற் போலவெய்தவேந்தன், மறந்தனன்முன்பூசனையைச்செய்திடாமன்மறி ந்தசெல்வமிப்போதுவணங்கலாலே, பறந்தருமம்பிகைபாகனளித்தானி ன்னவவன்றனக்காக்குவனென்றேயகத்திற்கொண்டான், சிறந்ததிருப் பணிபூசைதிருவிழாமெய்ச்சிவதருமவகைபுரியுஞ்செய்கைபூண்டான்.

ஆலயமண்டபசிகரகோபுரங்களாதியமைத்தாவரணதேவர்க்கெல் லா, மாலைபரிவட்டமாபரணவர்க்கமன்னுமகாபூசைபினிற் சிறப்புஞ்செ ய்தான், சோலைநந்தவனந்தடாகந்தீபங்கள்சூழ்வீதிவருவிம்பந்துவசகம் பஞ், சீலமுறுமாதவிழாமாதராடநீர்த்தநீராடலுமேசெய்வித்தானல். [ ]

மன்னுமகாவபிடேகம்புரிவித்தான்பூமாலைரத்நமாலை கற்பூராதிசந் தம், பன்னரும்வெண்பட்டுமுதலாயதூயபரிவட்டவகைசாத்தும்பரிவு செய்தா, னன்னமலைகதிச்சிகரம்பானெய்பாற்றினருவிதிருப்பாவாடை யூட்டுவித்தான், றுன்னியதூபந்தீபமுதலவாயசோடசநல்வரிசைகளுஞ் சூழ்வித்தானல். (க௩)

சாற்றரியபூசனையின்முடிவினெம்மான்சன்னிதியிற்றண்டெனவே வீழ்ந்திறைஞ்சிப்,போற்றிமனங்களிகூரப்புரிந்துகண்ணீர்பொழிதரமெ ய்ப்புளகங்கள்பூப்பவாய்ப்ப, வாற்றருமன்பென்புருகவானந்தக்கூத்தாடி னைரன்மகிழவவன்றொண்டர்க்கே, யேற்றியவன்னஞ்சொன்னமாடந ல்கியெப்பொருளுமெய்ப்பொருட்கேயேற்பச்செய்தான். (க௪)

அண்ணலவன்றனக்குமன்பர்தமக்குமேநம்மரியசெல்வமாகுமென வனைத்துநல்கிக், கண்ணுதல்பூசையின்சேடம்புசிப்பதல்லாற் கருதில ஞென்றென்றுதிடசித்தங்கொண்டா,னெண்ணிபவச்செயல்புரிபேனெ ன்னின்முன்போலிடருறுவேனெனவுற்றானவன்றனட்டி, னண்ணியநா ற்குலம்பெற்றமாந்தரெல்லாநாதனுர்திடபத்திநலம்பெற்றாரே. (க௫)

புரவலனிப்படிபுரியவவன்றானும்பூலோகவிந்திரனேபோன்றான ன்றே, யுரமுறுமைந்தர்களொருநூற்றொருவர்ப்பெற்றானுவருமேயரன் பத்தியுறுதிபூண்டார், திரமுறுமாலயங்கள்சிவலிங்கபூசைதிருமாலை தீப

வதைச்சிறப்புச்செய்தே, பரவுறுகாலங்கள்பல புரியப்பெற்றுப்பரமனரு ள்பத்திமுத்திப்பயன்பெற்றாரே. (௧௬)

மண்ணுலகினைப்புரக்குமிறைகள்பெற்றார்பாதிரமோரெட்டும் போய்விசையமுற்று, ரண்ணல்வபமாப்புரவிதேர்களூர்ந்தேயண்டமெ லாம்புகுந்துவருமாண்மைமிக்கார், விண்ணவர்தம்பதம்விரிஞ்சனுடமே லாம்விண்மெயின்றனுலகமுஞ்சென்மேன்மைபூண்டா, ரெண்ணரும்பல் புவனமும்போய்த்தடையுறாமலினிதுவிளையாடியேமீள்குவாரால். (௧௭)

இவ்வாறுசெலுநாளிலொருநாளெண்டோளெண்கணன்ற னுலகத் தினெய்தினா, லவ்வாறுகண்டெதிர்கொண்டோடிவந்தேயவன்வணங் கிக்கொடுபோந்தாசனங்களீந்தி, மெய்வாழ்வுவந்ததெனவுபசாரங்கள் வேண்டியவர்புகுந்திடவும்புரிந்தார்த, செவ்வாறுசேர்முனிவர்யாரின் னேரிச்சிறப்புநீபுரிவதென்னைசெப்பாயென்றார். (௧௮)

அருமறைதேர்தருமுனிவீர்கேண்மினின்னோர்க்கரிய மூதாதைதீகி டமென்றேதுந், தருமநெறியறியாதபாவமேசெய் தனிலிருந்தான்றையு லார்மையலாலே, மருவுமவனன்றோட்டியுற்றகோயில்வாயிலிற்றீர்மிருகம் வாராவண்ணங்காக்க, வொருவனமைத்திடவுற்றான்பலிபீடத்தினுமைபா கனுண்டிகைக்கொண்டிண்பானன்றே. (௧௯)

அன்னவன்றன்மனைவியுமேயுகர்ந்துபுரிந்தமர்ந்தனளத்தருமத்தா ற்கருப்பமாய்த்தா, டன்னிகரிலாதவொருமகவையின்றாள் சந்ததிசுந் தரமுற்றான்றனையங்காட்டின், மன்னவன்மைந்தனையில்லான்கொடுபோ கித்தன்வளவாசிற்கிளவரசாவைத்தான்வேந்தன், பின்னரிறந்திடப்பெ ற்றதந்தையோடும்பிள்ளையங்காட்டரசுரிமைபெற்றானன்றே. (௨௦)

அருந்தவத்தீரவன்கருப்பத்திருந்தநாளினரனார்கின்மாலியத்தினன் னசாரம், பொருந்துமன்னையுதரத்திலிருந்துமந்தப்புண்ணியத்தான்ஞா னமுற்றன்புங்கூர்ந்தே, திருந்துபுவியிற்சனித்தாலேவேதனுவேன்சிவ ன்றனைப்பூசனைபுரிவேனெனச்சிந்தித்தா, லிருந்தனனவ்வாறடைந்தா ன்மின்னார்போகத்திளநலத்தாலரன்பூசையிகழ்ந்தானன்றே. (௨௧)

ஆதலாலரசிழந்தேயட விசேர்ந்த னரியசிவயோகியுபதேசந்தன்னா ற், காதலான்மல்லிகார்ச்சுனத்தின்மேவுங்கடவுளைப் பூசனைபுரியக்கரு ணைகூர்ந்தான், பூதலத்திலிழந்தசெல்வமீண்டும்பெற்றே பொருவரும்ப த்திபிலரனைப்பூசைசெய்தா, னேதிபெறுமவன்பெற்றபுதல்வரின்னோரு றுதிபெறுஞ்சிவபூசையுற்றுளாரே. (௨௨)

அண்ணலாராலயங்கண்மிகவுமேயுண்டாக்கினார்சிவலிங்க மமையச் செய்தார், நண்ணுபன்னந்தனவனங்களமைத்தேயந்தருமலர் வில்வங் கொடுபூசனைபயந்தார், திண்ணமிகுசிவபூசைசெய்யப்பெற்றோர்செல்வ மென்றுமழியாமற்செழிக்குமன்றே, கண்ணுதல்பாலகங்கைதயின்றிச்சிந் தனைவைத்தோர்காசினிக்குட்குபேரன்போல்வாழ்வரன்றே. (௨௩)

மைந்தரெழின்மனைவியர்களியானைசேனைவாசிதன்தானிய வர்த்த னைசேர்செல்வ,முந்துசதகோடிசிவபூசைசெய்வோர்முழுமனையிற்றழை க்குமன்றேமுனிவர்கேண்மி, னிந்தவுலகிவர்புகுதலரிதோபோலாமிருங்க யிலைபுகுவரெனவேதன்சொன்னா, னந்தவுரைபாக்கியதேவந்தனக்கே யறைந்தமரர்க்குநந்தியருள்செய்தானால். (௨௪)

**முப்பத்துமூன்றாவது பரிபீடவன்னமகிமைச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம் - ௮௯௪.



முப்பத்துநான்காவது,

# சிலாதநார்சமகவரங்கேட்டசருக்கம்.



வேறு.

நேசநாமநின்கயிலைவாசநாமதேவர்தொழுதேவநாமநீள்
பாசநாசமுறவேசெய்திடுபாதநாமபாவையுமைதன்
னேசநாமநிர்க்குணநிரஞ்சனநிராமயநிராதரநாம
வீசநாமமென்றுதொழுவாரனைவாரிகரையேறுவர்களே. [௧]

நந்திபகவான்பகர்செய்வானருமறைக்கரையினண்ணுபனவன்
புந்திமகிழ்பாக்கியமெனுங்கடவுணங்கைபுகல்பொருவில்கதைகேட்
டந்தணன்வணங்கிபரனெந்தைதரவந்தெனையடுத்துனைகொல்யா
னுய்ந்தனனுனைப்பிரிபலாவகையவன்பணியுனாற்றுவனரோ. (௨)

என்றுறுதிகொண்டுநியமத்தொடிசயத்தானையேத்துதல்செய்வான்
றுன்றிடுசெல்வங்கொடுதொழுந்தகையிலிங்கமுறுசூழலதனிற்
குன்றுருவுகொண்டகுலபாளிகைகொழுஞ்சிகரகோபுரமுடன்
றென்றறவழ்மண்டபமுடன்சினகரப்பணிதிருத்துதல்செய்தான். (௩)

தேசுபெறுவாசலுறுதீபநிரைதோரணமுமெத்திடனில்
வீசுசுடர்மாலையொடுகோபுரவிளக்கணிவிளக்குதல்செய்தான்
வாசமுறுமாலைகுலைவாழைகமுகாதிபலமண்டபமமைத்
தீசனெமையாணருமதேசன்மகிழ்பூசனையிபற்றிடுவனால். [௪]

ஐந்தமுதவாறுகனியூறினிபசாறுவாய்க்காலடுகுளந்
தந்தவபிடேகமுடனாறுரசமேறுகறிசாரலுடனே
முந்துமனவெற்பமுதுசெய்துதாம்பூலநுகர்முறையுதவியே
யெந்தைமகிழ்சோடசமதானவுபசாரமுமியற்றுதல்செய்வான். [௫]

ஆடலொடுபாடல்பதினெட்டெனுமியற்றொகையமைத்தனனரன்
சேடமடியார்க்கமுதுசெய்திடவளித்துமகிழ்சிந்தையுடனே
தாடொழுதுதோத்திரமுமேத்தியிருகண்கலுழிசாரவிரவிற்
பீடுகெழுமண்ணல்பிரசாதமுநுகர்ந்திசைகள்பெற்றனனரோ. [௬]

இன்னவகைகசித்தமுமியற்றிபரனுக்குரியயாகமுடனே
மன்னுமிடபக்கொடியெடுத்துறும்விழாவணிவகுத்தமுறையகற்
பன்னியசிறப்பிறைவனுக்கிவணியற்றியிபொன்மையினவாத்
தன்னிகரினாரதருடன்சனராதியர்கள்சார்ந்தனர்களே. [எ]

வேணிமுடிகண்டிகையின்மாலைதிருநீறுமிளிர்மெய்த்தவர்கடாஞ்
சேணில்வருகின்றசெயல்வேதியனுணர்ந்துமகிழ்சிந்தையுடனே
காணுமணிபூதியணிசோதியொடெதிர்ந்தருகுகண்டுதொழுதே
பூணுமனமன்பொடவராசனமுறச்சரணபூசனைசெய்தான். [அ]

மங்களமொடென்பழயமாதவமிதென்னவிவண்வந்தருள்செய்தீர்
சங்கரனருச்சனைதரும்பரிசுமெய்க்கதிகள்சார்பலனுமே
யிங்கெனதுசிந்தைதெளியும்படியியம்பிடுவிரென்றுரைசெய்தான்
பொங்குநயைகொண்டிசைகொணாரதமகாமுனிபுகன்றிடுவனால். [கூ]

வேதமுறைறசெய்ததருமங்களொருகோடிமறையோய்விமலனா
காதனுறுபூசனைசெயுந்தருமமொக்குமெனநாட்டவசமோ
வோதிலெளிதாகுமவையோராறுகுவில்வதளமொன்றதனையே
யாதிசிவலிங்கமுடிமீதணியின்மேவுபலனார்பகர்வரே. (கo)

பூசுரவருந்தருமமானபொருள்குப்பயிதுபுகலுவனரோ
காசினியின்மாந்தர்கதிசேர்வகையிலிங்கருகாட்டியதுகா
ணுசிவிதுநன்னிவிதியாசமுளதொன்றதையறைந்திடுவன்யா
னேசமொடுணர்ந்திடுதியென்றிசைகொணாரதனிகழ்த்திடுவனால். [கக]

வேறு.

ஆதிதனிலருங்கபிலைமேவுமெங்களாதியார்கனகசிங்காதனத்திலேறிச், சோதிமணிமண்டபத்திலிருந்தாரன்னசோதியாந் தன்மையெவர்சொல்லற்பாலார், பாதிமதியணிந்தமின்பொற்சடையார்தூவெண்பட்டுடையார்பொன்போலுங்கையார்மெய்யார், நாதர்க்கிசாபதியொளியாருடின்மாலைநவமணிமாலிகைகண்டிமாலைபூண்டார். (கஉ)

பரவுதிரிலோசனத்தார்நிலகண்டர்பார்ப்பதிதன்முககமலம் பார்த்துமூரல், புரியுமறையாகமங்களுணர்தற்கெட்டாப்புனிதனார்சச்சிதானந்தமானர், தெரியுமந்தமாதியில்லார்சுயம்பிரகாசர்தீவினைதீர்த் தன்பர்க்கானந்தநல்கு, மரியமங்களத்தரத்தர்சுத்தர்சாந்தரவரொருவர்க் குணர்வரியவண்ணலாரே. (கங)

பவர்வீமர்நலரமரணர்தீர்பினுகபாணிபார்பாகத்திலிருக்குமம்பை, தவயோகர்பணிபரனைநோக்கி மாற்றஞ்சாற்றுவான்முற்றுணர்ந்த சம்புவேநா, னவமானபொருளொன்றுகேட்கவுள்ளநபர்த்துளே னுயகனேநானிலத்தோர்க், குவமானமற்றகதியெளிதாகவுள்ளதொரு தருமமயாதுரைப்பாயென்றான். [கச]

யிசைபெறுமிதயந்தன்னிலிமயமாதுடன்கலந்த
வஞ்சவில்கற்பூரவெற்பாமெனவொளியாகத்தானை. (ரு)

மாமணிப்பூண்வெண்பட்டுவனைந்தவானந்தக்கட்டி
யாமவன்றன்னைநீலகண்டனையருள்சேர்மூன்று
தாமமார்நயனத்தானைச்சூலஞ்சேர்தடக்கையானைச்
சோமசேகரனைமேருவில்லுடைச்சோதியானை. [சு]

நான்மறைப்பொருளான்றன்னைநாளுமேபத்திபூண்டு
கான்மலர்சாத்துவோர்க்குக்கான்மலர்காட்டுவோனை
மான்மழுவபயமோடுவரதஞ்சேர்கையினானைத்
தேன்மலிகொன்றையானைத்தியானித்துமுன்பூசித்தே. (எ)

மனமகிழிலிங்கந்தன்னின்மானதபூசைபோற்பின்
கனகவாசனத்திலாவாகனமுதற்பூசையாற்றித்
தினமலர்வனசம்வில்வஞ்செழுமலர்பலவுஞ்சாத்தி
யனகனுக்குபசாரங்களாவனபலவுஞ்செய்தே. (அ)

பூசனைமுடிவிற்றண்டுபோல்விழுந்திறைஞ்சிப்போற்றி
யீசனேயடியன்பூசைப்பிழைபொறுத்தாள்வாயென்று
யாசையாற்றான்செயாராதனைப்பயனரனுக்காக்கித்
தேசுறுந்தனதான்மாவையற்பணஞ்செய்வானன்றே. (கூ)

அடியனேன்மனநின்பாதத்தம்புயவண்டதாக
முடிமலராகவென்றன்மூர்சின்காரூபமாகக்
கடிவிழிதீபமாகநிவேதனங்காதலாக
வடிவுறுமங்கஞ்செல்வம்வந்தனைக்கங்கமாக. [க௦]

மனையுடன்மைந்தர்தாமென்வழிபாட்டிற்குதவியாக
வனைவரும்பூசையாற்றவண்ணலேசெல்வம்வேண்டி
யுனதுபூசனையிற்காலம்போக்கவேயுதவிசெய்வா
யெனையினஞ்ஜனனத்தெய்தாவண்ணங்காத்திரட்சிப்பாயே. (கக)

ஐயவுன்னுடனெனக்குவழக்கென்னபிறவியாற்றச்
செய்யினுஞ்செய்வாயந்தச்செனனங்கடோறுமென்னெஞ்சு
மெய்பநின்பாதப்போதில்வெறியளியாகவேண்டு
மெய்துவன்சித்தியாவுமிவ்வரமேனுமீவாய். (கஉ)

பத்திதான்பவரிடத்திற்பதிகநற்றலத்திற்கேகச்
சத்திதான்வருகசெல்வர்தமதிடஞ்சேருஞ்சத்தி
சித்தியாதொழிகமாதர்கோட்டியிற்சிந்தைசேரா
துத்தமச்சிவலிங்கார்ச்சனையினெஞ்சுவகைகூர. (கங)

காதுபுன்கவிகேளாமற்கடவுடன்சரிதங்கேட்க
வோதுநாச்சிவநாமத்தினூறமுதூறன்மாந்த

மாதர்முன் குருடாயென்கண்வள்ளன்முன் காந்திசேர
வாதனென்கைகளெம்மானடிப்பூசைபுரிகவன்றே. (௧௪)

என்றனக்கியாகயோகதன்மமிந்திரைவிலாச
மன்றலார்செல்வம்வேண்டாவள்ளல்பூசனையேவேண்டு
துன்றுதாய்கருப்பத்துள்ளுந்தோன்றியகுழவிப்போதும்
வென்றிவேல்விழிபராசைக்காலத்தும்விரும்பிலேனே. (௧௫)

இப்பொழு[illegible]கினுந்தேனினியுள்ளகாலமெல்லா
மப்பநின்பாதப்பூசையடியனேன்புரிகல்காய்
செப்பியவிளமைக்காலிற்றெரிவையராசைப்பேயிற்
கைப்புகுந்துழன்றேவீணிற்காலங்கள்கழித்துளேனே. (௧௬)

செண்பகமுல்லைவில்வந்திகழ்குருக்கத்தியாதி
நண்பெறுமலர்கொண்டேத்துமவர்தமினந்தனத்தோ
டெண்பெறுமனுவயன்றன்கற்பத்துமீறில்லாமற்
பண்புடனிருக்கநல்கும்பரமநிற்பணிந்திலேனே. (௧௭)

இங்குனதன்பர்பாதமேத்தவும்பெற்றிலேனே
சங்கரவுலகுக்கெல்லாந்தந்தைதாயாகின்ற
வங்கணவெனக்குநல்கினருட்கடல்குறைவதுண்டோ
வெங்குநின்றாலுமேழைக்கிரங்குமென்றுரைக்கும்வேதம். (௧௮)

அம்பிகாபதியேயுன்னையருச்சித்தேனெனைரட்சிப்பாய்
நம்பினேனெனப்பணிந்துநாத்தழும்பேறப்போற்றிச்
சம்புநின்முன்னர்நைவேதனஞ்செய்நின்மாலியந்தா
னெம்பிரானன்பரோடுமிருந்தருந்திடவேவேண்டும். (௧௯)

அருந்திலோர்பிடிக்கொருக்காலரகரசிவமகேச
வருந்திடாதருள்வாயென்றுவாழ்த்தியேபுசித்தல்வேண்டுந்
திருந்தவிப்படிச்செய்வானேற்செய்தபாதகங்கணீக்கிப்
பெருந்திருவாணுணல்கிப்பிறவாதநெறியுய்ப்பானால். (௨௦)

துய்யநின்மாலியத்தின்சொல்லணுவளவுண்டாலுங்
கையினிற்பரிசித்தாலுங்கமழ்முடிதனிற்கொண்டாலுஞ்
செய்யுமாபாவநீங்கிச்சிவபதமடைதறிண்ண
முய்யவங்கதுகையுற்றாலும்பாராமுதென்றோர்ந்தே. (௨௧)

ஆனந்தக்கூத்துமாடியரகராவெனமகிழ்ந்தோன்
றானந்தமில்லாவன்பன்றனக்கிணையொருவருண்டோ
ஞானஞ்சேர்வசிட்டராதிமுனிவருநலத்தினெவ்வா
றீனமிலிதனிற்பத்தியெய்தன்முற்றவமதாமே. (௨௨)

புகலுமிங்கிவைபுசித்துப்பூரித்தோன்றன்னைக்கண்டே
யகமகிழ்ந்தேவணங்கியாதரித்தவனேதேவ

னிகரிலாவிதனையுண்டோனிறைகவிப்புலவனுவான்
மகபதிதுணையுமன்னோன்மலர்ப்பதம்வணங்குவானே. (உ௫)

ஆரேனுஞ்சிவசேடத்தையரனடியாரோடுண்பார்
பாரேறும்பெரியோரென்றுபகருவர்முனிவரெல்லாஞ்
சீரேறுமிலிங்கபூசைசெய்தரன்கதையுஞ்சொல்வோ
ரேரேறும்பதத்தூள்சென்னியேற்றவன்யமனோடெய்தான். (௫௪)

கடவுடன்சரிதங்கேட்பிற்கந்தரமேசீவிம்மாய்
படர்சடையவன்பூசைக்குப்பலம்வில்வங்கையேகொய்யாய்
சுடர்விழியேவெற்பீன்றுடுணவனைப்பாராய்வாரா
யடர்மனமேயெம்மானையனுதினநினைத்திடாயே. (உ௬)

என்றுசொற்றுறைவோர்தங்கட்கிந்திரனுபேந்திரன்று
ஞென்றியவாசறன்னிலூழியத்தவர்களாவார்
கன்றியமனமேயெம்மானன்பரல்லாரைக்கண்டாற்
றுன்றியபுலையரென்றேதூரத்தேயகறிகண்டாய். (உ௭)

கனவினுமேயன்னாரைநினையற்ககனதைவேண்டிற்
பனகபூடணனைத்தானேபரவிடாய்சென்னியேநீ
யனகனைவணங்காய்நாவேசிவனுமமறைநியன்றே
தினமுமென்செவிகளேநீர்சிவகதைபமுதுண்பீரால். (உ௮)

நாசியேவள்ளல்சாத்துநன்மலர்மணங்கொள்வாயாற்
றேசுறுமுடம்பேகைகளிரண்டுசென்னியின்மேற்கூப்பிப்
பூசையின்முடிவினின்றேபுரிந்துகூத்தாடல்செய்தி
யாசைநெஞ்சனமேயீசனடிப்பதுமத்தன்பார்வாய். (உ௮)

சித்தமாம்வண்டேமாதர்சிமிழ்ப்புவர்க்காட்டைநீங்கி
யத்தனார்ஞானவோடையரனடிக்கமலஞ்சேர்தி
பத்திசேருனக்கின்பத்தேன்பரவுறுமனவனத்திற்
குத்தமனானனந்தக்கிழங்கையுமுதவுமன்றே. [உ௯]

சாய்த்திடுதலைமுன்னையவங்கமேசங்கரன்றன்
வாய்த்திடுகோயிலங்கப்பிதக்கணம்வருதிபூழ்தி
தோய்த்திடுமுறுப்பினோடுஞ்சூழ்தொறுங்கறுத்துக்கன்றிக்
காய்த்திடுமுடம்புபெற்றுற்கடுவினைகளையலாமே. [௩௦]

மேதினியாதிசித்தசஞ்சலமிடாவைவிட்டற்
காதியைப்பணியும்பத்திக்குடாரமேயமைதல்வேண்டுஞ்
சோதியைப்பூசைசெய்துதுதிசெய்தாற்றுன்பமாக
மோதுறுங்கடலைநீங்கிமுத்தியைச்சேரலாமே. [௩௧]

ஆதலாலீதுகேட்டிசதானந்தவரசரோறே
நீதியாற்பூசையாற்றிகிமலனாரன்பரோடு

தீதிலாவுறவுகொண்டுசேர்ந்தரனிவேதனஞ்செய்
போதனங்கொடுத்தன்னுரையுகந்துகாத்தருடியன்றே. [௫௨]

அன்னதொண்டர்களுன்பூசைக்கங்கமாயுறைதற்பாலார்
மன்னவவவரேயல்லான்மற்றுளோர்தமைச்சேரற்க
முன்னிருந்தவர்தாமந்த்ரமுறைமுறைபுகன்றுசென்னிற்
சொன்னவன்பூசைதன்னிற்றொலைவிலாப்பலனுண்டாமே. (௫௩)

போனகம்புரிந்தபின்னர்ப்புண்ணியனடியாரோடு
ஞானசாத்திரபுராணநவின்றுவிற்றிருந்தலவேண்டு
மானபின்னந்திமாலைப்பூசையுமமைவிற்றிச்
சேனலர்கொன்றையார்க்குத்திருவாத்தயாமந்தன்னில். (௫௪)

பூசனையாற்றிப்பொன்னுற்புரிபரியங்கமீதில்
வாசனைச்சுகந்தமாலைமலர்பலவொலியனுற்றி
யீசனுமுமையும்பேவியிருந்தனராகவெண்ணு
நேசமோடிகபரத்தைத்தன்னினிக்கமுறப்புரிதவாயால். (௫௫)

இப்படிநிசிக்காலத்துமிப்படிப்புரிந்துமோர்ப
ளொப்பருமனைகயாண்டேயுமப்பதம்பெறுகுவாராற்
செப்பருமிலிங்கபூசைதவிலவருஞ்சித்திபோமே
தப்பிலாப்புண்ணியங்களொன்றினுஞ்சார்கிடாமே. (௫௬)

நீதிநன்னெறிகட்கெல்லாம்விசுவாசநிமித்தமாகும்
தீதிலாவிசுவாசத்தாற்சிவபதஞ்சேர்தறின்னம
பேறைமாந்தர்களுக்கீதுபெறுவதுமரிதுகண்டாய்
மேதகுகாசிமேவுமவேதியனொருவனுண்டால். [௫௭]

விசுவநாதரையும்வீரேசுரரையும்பூசைசெய்வோன்
றிசைபுகழ்தரும்வீரேசன்றிருக்கோவிறனிலெந்நாளு
மசைவிலாத்திருமெழுக்குந்திருவலகாதியாக
வசைவிலாப்பணிகள்செய்துமன்னுபூசனைகள்செய்வான். [௫௮]

அனையவனொருநாளண்ணற்கத்தயாமத்தின்பூசை
தனையுகந்தாற்றியாங்கட்சயனமுஞ்செய்தானன்னுன்
முனைமெழுந்தருளிவீரேசுரன்வந்துமுன்னர்நின்றான்
பனவன்றான்கண்டுவீழ்ந்துபணிந்துதோத்திரஞ்செய்தானல். (௫௯)

அன்னவன்றன்னைநோக்கிவீரேசனருளிச்செய்வான்
பன்னருமறையோயுங்கள்பத்தியாசாரமியாதே
யுன்னரும்விசுவாசந்தான்யாதவையுறைத்தியென்றான்
மன்னருமறைவல்லாளன்றொழுதனன்வகுக்கின்றானல். (௬0)

அண்ணலெம்மாசாரம்நின்னடியருக்கடியராக
வுண்ணெகிழ்வுடனேபூதியுருத்திராக்கந்தரித்துக்கொள்வோம்

பண்ணவனினதுபஞ்சாக்கரசெபம்பண்ணுவோமியாந்
திண்ணமாமிவற்றையன்றிச்செய்யுமாசாரமென்னே (சுக)

இன்னணஞ்சிவதன்மங்களிபாவையுமேதெரிந்து
பன்னரும்பாவகோடிபாறவேபரிந்துசெய்வோ
முன்னருமிதயலிங்கபூசனையுறுதியாகத்
துன்னருமலர்கள்கொண்டுதொழுதருச்சனைசெய்வோமே. (சுஉ)

அரம்பையர்வந்துசேவிந்தளநத்தான்மறைக்கும்பாத
வரந்தருங்கவுரிசெய்பகமலத்நாள்வந்திப்போமாற்
புரந்தனிற்சிறந்தகாசிப்புரவீதிதனிற்புகுந்து
நிரந்தரஞ்சஞ்சரிப்போய்சின்னுமம்புகலுவோமால். [சுந]

கோடிசூரியப்ரகாசக்குணக்கின்றுமேடகனுகி
நாடரும்பொருளதாகிப்பரத்துக்கும்பரமாய்ஞான
வீடுதந்தருளுமேலாமகத்துக்குமகத்தாய்மேவுந்
தேடருநின்னைப்பூசித்தடியிணைசிந்திப்போமே. [சுச]

அம்பிகைசிவஞானந்தவலைகளி[illegible]ல்செய்யு
நம்பியாம்வாலசுப்ரமணியன்றனையத்தல்செய்வோஞ்
சம்புவீரேசர்முன்புசார்ந்துகங்காசலத்தின்
கும்பங்கள்கொண்டேநாளுங்குளிரவேபாட்டுகிற்போம். [சுரு]

கங்கையிற்சுத்திசெய்தகடிமலர்வில்வந்தன்னுற்
பொங்கியவோமத்துற்றபூதியாலுனைப்பூசிப்போந்
தங்கியவாரணுசிச்சம்புவேயிவையேயல்லா
லெங்களுக்காசாரந்தானியாதெனவணங்கிச்சொல்வான். [சுசு]

ஈசனின்னருளாலிவ்வாறியற்றலேயென்பாற்செய்தி
காசியின்மகிமைநின்றன்கதைகளென்விடயமீதே
மூசுவேன்மற்றைக்காதைமுயலுவேனுயிரின்பாவ
நாசனேபொறுத்தாட்கொள்வாய்நாயினேன்பிழைகடானே. [சுஎ]

கூவிளநீழன்மேவுங்குணக்குன்றேதிருமடநதை
காவலனுதிதேவர்க்கருள்புரிகடவுளாகி
மேவியகங்கையாற்றின்வெள்ளத்தினனேந்தவேணித்
தாவிலாநிதியேயாஞ்செய்தரும்பிழைபொறுத்தாள்வாயே. [சுஅ]

திரிவேணிமூழ்கிப்பூதிபுண்டரந்திகழச்சாத்தி
யரிதானகண்டிபூண்டேயனுட்டானநியமமாற்றி
யுறைசெய்தேயுருத்திராத்தியாயமஞ்செழுத்தைக்கங்கைக்
கரைமீதிலிருந்துநின்னைக்கருத்தினிலிருத்திலேனே. [சுகூ]

அருந்துயர்நீக்கியாளுமண்ணனின்னருளார்சென்மப்
பெருந்துயர்நீங்குமாறுபெற்றிலேன்சிவயோகத்திற்

றிருந்தியதவத்தோரோஞ்சேர்ந்திலேன்சிவனையெற்கு
மருந்தன்னகருணைதந்தாண்டருளெனவழுந்தல்செய்தான். [ருo]

இன்னவாறேத்திவீரேசுரனருளெய்தப்பெற்றே
மன்னியகாசிவாசம்பெற்றனன்மறையோன்றனை
யுன்னருஞ்சிவனைப்பூசையுஞற்றினோர்பெறுதொன்றுண்டோ
தன்னிகரிலாதகீர்த்திச்சதானந்தவரசரேறே. [ருக]

ஆதலானீயுமாதர்மைந்தர்மேல்வைத்தவன்பை
மாதொருபாகன்பாலுமன்பாதரமிடத்துமவைத்தே
போதருஞ்சிவதன்மஞ்செய்துயாகதைகேட்டிப்போதுன்
றீதெலாந்தீர்ப்பையென்றுசூதவனுரைசெப்பினனே. [ருஉ]

நாற்பத்தேழாவதுவீரேசுரச்சருக்கமுற்றிற்று

ஆகத்திருவிருத்தம்-௧௯௪௪.



நாற்பத்தெட்டாவது

# சூரசேனச்சருக்கம்



வேறு

வேதநாயகன்விபுரர்நாயகன்விரைமலர்க்கமலாசனமின்னனூரிருவோர்க்கறைபநவெனவேறுநவங்கொடே,சோதிநாயகமாய்வளர்ந்ததன்னடியுநீள்சுடர்முடியுமெதொடாந்துவாறனைகெலைமுற்றநடந்துகிழ்நிலைதுருவியே, வாதினாலவரோடிநாடியுணர்ந்திலாவொருநாயகன் வானநாயகன்ஞானநாயகன்மன்றிலாடல்செய்நாயகன், பூதநாயகனாதிநாயகன்பூவைபோன்மொழிப்பாவைதன் பொருவிறுபகன்பாதமேத்தினர்புவனநாயகராவரே. [க]

ஞானமாமுனியானவாக்கினவற்கியோகிசொலவர்ன்சதானந்தராசன்வணங்குதன்சூரவன்பகர்ந்தநலந்தெரிந்,தானனங்களோரைந்துடைக்கடவுட்கியன்றிடுபூசனை யாற்றுமாறுதன்னேற்றமாமுளத்தன்புபூண்டனனுமரோ,வீனமாகியமக்கள்பெண்டிரிடத்தில்வைத்திடுமென்பொழிந் திறைவர்பாதமிறைஞ்சுவோரவருய்பதாண்மலரேத்துவோ, ரூனமாநரைதிரையினோடுறுமூப்புசாவெனவேயிட ருற்றிடுஞ்சனனத்தில்வந்தலைவுற்றிடார்கதியுறுவரே. [உ]

மடந்தைபாகரைப்பூசைசெய்பவர்செல்வமேசெல்வமாகுமான் மக்கள்பெண்டிர்மயக்கெனுங்கொடுவாளராக்கவர்வுற்றிட, விடந்தலைக்கொடிறக்குமன்னவர்சிவகதாமிர்தவாரியின் வீசுகின்றதோர்திவலைகிட்டினும்வீடுசேர்வதுதிண்ணமே, யடங்கலர்ப்பொருசனககேள்சிவகதையினோ

முதக்கட லஞ்ஞைபெற்றிடுமோர்தருக்கதடுப்பதற்கதி தூரமாந்,திடம்பெருங்கடலதனிலேவருதினகரோதயகோடிபோற் சீவமாமணிகோடிபோற்சிவனேசர்கோடியர்செறிவரே. [ங]

அந்தமாதியிலானையேயுணுமறிவினர்கடம்மகிமையை யாரறிந்துறுவார்கண்மூவுலகத்தினும்மரிதாமவர், சுந்தரத்திருமேனியின்கதிர்கண்டபோதுடனேகடற் சூரியர்க்ககலாவஞானவிருட்குழாந்தொலைவுற்றிடு, மெந்தையார்திருவருளின்மேன்மைவிளக்குஞானவிளக்கென வின்பமேபெறுமன்பராகியவிரதர்கோடியுண்டாக்கினோர்,பந்தமற்றிடுமவர்கடம்பதபூசைசெய்துவணங்கிடும் பாக்கியஞ்சனனங்கடோறுமியற்றிடுந்தவபலனரோ. [ச]

அனையதொண்டர்கணோக்கினுற்றிருவாக்கினுற்பரிசத்தினு லானமூன்றினுமேயடுத்துளவவர்கள்பாவமகற்றுவா,ரினையர்தமபததூளின்மூவுலகெங்குமேபுனிதஞ்செய்வா ரினியதொண்டர்களெதிர்கொளத்தரிசனமுறத்தொழுநன்மொழிப்,புனிதம்விண்டவர்செய்யமேனியின்மருந்துறப்பெறுவோரெலாம் புனிதராகுவரிவற்றினோர்கதைபுகலுவேனதுகேட்டியான்,முனமிலங்குசெழுந்தமிழ்த்திருநாட்டின்முத்திபழித்திடு முத்தமாநதிதீரமேன்முதுகுன்றமொன்றுளததனிலே. (ரு)

சிந்தையிற்சிவபத்திபெற்றவன்மிகவுமேதருமஞ்செய்வோன் ஸ்ரீராசகுலத்தில்வந்திடுஞ்சூரசேனனெனச்சொல்வோன், முந்துமுத்தநதிக்கரைக்குளநேகமாலயமாக்கினன் முதல்வனார்தமிலிங்ககோடிபதிட்டைசெய்துமுடித்துளா,னந்தமேவு மிலிங்கபூசனையாற்றுவித்தனனொடாறுமழகனார்பழமலையர்முன்னமமைத்துளான்மணிமண்டபஞ்,சுந்தரத்தொளிர்தீபதோரணமாலைபூமணமாலையுந் தூக்கினனுமைபெரியநாயகிதுணைவர்பூசைதொடங்கினன். (சு)

அருணனுருதயாதியேதொடுத்தாற்றுபூசைமுதற்றிரு வத்தயாமவரைக்குமேசெயுமாறுகாலமெய்ப்பூசையி, லுரிமையேகொடுமாதர்சேயரசுரிமைமற்றுமுன்னுமலே யுய்யுமாறுளபத்தியாலவைசெய்யுமாறுசெலுத்துவோ,னிருணலம்பெறுகண்டராகியகருணையங்கடல்பூசனைக் கினிதவன்கொணர்புனிதநன்பொருளிவளவென்றெவர்புகல்வரே,யொருவரும்பெருதற்கருந்திருவுடனளந்திடவரியதோ ருண்மைநற்குணமுடனரன்பெயரோதுநாவையுமுடையனே. (எ)

அவனயந்துறுபரிசனங்களுமனையர்சங்கரநாமமே யறையுநாவினர் தூபதீபமோடலர்கண்மஞ்சனமாதியா, நவமுறும்பலகுடைகள்சாமரைவிசிறிமற்றுளவரிசைக ளொடாறும்புரிபூசனைக்குறுதிரவியங்கள்கொடுத்துளார்,தவமிகுந்திடுமரசனுக்கனபதியெனும்பெயர்சார்ந்ததாற் சங்கரற்குநிவேதனம்புரியன்னராசிகடம்மையே, யுவமையற்றிடுமன்பர்தாம்

பெறவுதயவத்தமவரையுமே யூறுமாறுசுவைப்பதார்த்தமோடுதவிடுங்கொடையநலரோ. [அ]

தனதுடைக்கசரததுரங்கமதாளியோடுபகாணமாந் தவலைசெம்புடனுடையாபரணங்கட்ண்டிடைக்கன, மெனதலச்சிவனுமமுற்றதெனச்சொல்வான்பினைவேறுபேரிந்தலோககடத்தகாமமியம்பிலானவன்வைத்திடும்,வனமதிற்புறவதனிலுற்றமரங்கள்பைங்கொடிசெடிகணன் மலர்கள்காய்கனியாவுமாமறையறையும்வள்ளறனுமமே, புனைகுவானவனுட்டிலுற்றசனங்களியாவருமன்னதே புந்திவைத்திடுபாவனைச்செயல்புரிகுவார்புவியரசனே. [க]

அரசனன்னவன்மருவலார்களநேககோடிவல்லமர்பொர வவணடைந்திடுபொழுதிலிங்கதைவெலலுவார்பிறிதில்லையாம், பரசிடும்பதியேயெனக்கொளுமன்னபோதிலெதிர்ந்திடும் படையுடைந்திடுமவனுளத்தினினைத்தகாமியமியாவையும், வரமெனும்படிசிவனதானையின்வாநிடும்படியதுகொள்வான் மன்னனிப்படியிச்சையுற்றதுவாய்த்திடச்சிவபூசையி, னுரமதாகியவாசையுற்றனனுண்டியாசையுமற்றனனேதுபூசையிற்போதுபோக்குவன்மாலையர்ச்சனையுவகையான். (கo)

பூசைசெய்திடுபோதுபாதமுதற்சிரமபரியந்தமும் பூதிதூளன்மாவணிந்துளபுண்டரங்கள்வயங்கவே, யாசையன்பர்களுடனிறைந்திடவரன்மகிழ்ந்திடுகண்டிகை யணிகிரீடமலவாகுமாலைகள்கந்தரத்தணிமாலைக,டேசுசேர்தருசன்னவீரமோடங்கியின்னதிலககமாச் செப்புமாமணிதுப்பொடாரமுடன்கலந்தணிசெய்கையான, பேசுசுத்தனிலத்தினிற்சுகவாசனத்திலிருந்தரன் பிரியமாதமிலிங்கபூசனைபெருகுமன்புடனுற்றுவான். (கக)

சங்கரற்கபிடேகமுற்றிடுதிரவியந்தனின்மிக்கபா றயிர்நெய்தேனொடுபலகனிக்குறுசாரமாரமுறுங்குழம, பங்கமாகியமந்திரங்கொ நேகவெள்ளமதாகவே யன்பினுலபிடேகமுஞ்செய்தருச்சனைக்குளவகையெலாந், திங்கள்போலொளிமுல்லைமல்லிகைவில்வநல்லனதேடியே சிந்தையன்பொடணிந்துதண்புழுகோடுகுங்குமக்கலவையு, மெங்குமேகமழ்தரவணிந்தொளிர்குவளைமாமணியாரமோ டிறைமகிழ்ந்திடுநிறைபணித்திரளிண்டைமாலிகைசாத்தியே. (கஉ)

அன்னவெற்புறுகறிவளந்திடராமபூபதிவேதன மாற்றியேற்றமதானசோடசமாகுநல்லுபசாரமுஞ், சன்னிதிக்கணியற்றிவீழ்ந்துவணங்கியேயிருகண்கணீர்த் தாரையோடிடத்தோத்திரம்பலசாற்றிக் கூத்துநின்றுவொன்,மன்னுபல்லியமாதராடல்கள்பாடலாலரன்மகிழவே வாய்த்திடும்பல்சிறப்பமைத்தருண்மன்னவன்பிரதோடநா, ளென்னையாளரனலயங்களிலதிகமாகியபூசனை யினிதுசெய்திடயோகர்சித்தர்களுவகையுவந்துவணங்குவார். (கங)

அனையதோர்பிரதோடவேளையிலரியயன்றிசைகாவல ரமரரியாவருமவனிமீதினில்வந்துகங்கையையுந்தலவாம், புனிதமாநதியாடிநீறொடுகண்டிமாலைபுனைந்தரன் பொருவில்[illegible]டொருமிலிங்கவருச்சனைப்பணிபூணவே,வனைதருந்திருவாணி[illegible]ராணிவிண்ணரமாதரார் வந்[illegible]சோடசவரிசையோடபிடேகபூசைவழக்கெலா, மினையகைப்பரிசாரகத்தொழிலதுபுரிந்தியல்வீணையி [illegible]யின்றிநாடகஞ்செயவினியபூசனைபுரிவரால். (கச)

அந்தவேளையிலெந்தைபூசனையன்றியொன்றுமியற்றிடா ரரிமுழாவயன்றாளமிந்திரனுயர்தங்குழலூதவே,யிந்திரைக்கொடிநாமடந்தையொடிந்திராணியும்வீணையி னிசைகள்பாடிடவானநாடர்களினிதுநின்றுகொண்டாடவே, மூன்றுழுவுலகத்துளோர்களும்வந்துகூடிடநதிகளின் முதன்மைபெற்றிடுகங்கைமங்கையுமுன்னர் நின்றுநடிக்கவே, நந்திவாகனனிமயமேவியநங்கைகொங்கைகளசையவே நாடகஞ்செயல்கண்டுவந்தருநடனமுற்றிடுவானரோ. (கரு)

புனிதமாம்பிரதோடபூசைகள்புரிபவர்க்குறுபெருமையும் பூசைகொண்டிடுபெருமையுமவர்பொருவிலாதுயர்பெருமையு, மினையதென்றெவர்புகலுவார்களிவ்வேளையிங்கிதின்மறைவலோ ரினியபூசைசெயாதிருந்திடிலினர்தங்குலமாவரே, மனிதர்தங்களிலியாவராயினுமெந்தையார்திரையோதசி மாலைவேளைசெய்பூசையுந்தரிசனமுநெஞ்சின் மகிழ்த்திடார், தனுமயக்கிமெதுவருந்திடுபுலையர்தந்திடுமைந்தரே சாற்றுமாலதிபாதகஞ்செய்தசாரன்மைந்தருமாவரே. (கசு)

பின்னுமங்கவர்மன்பதைக்குலமல்லர்வெங்கரமாகுவார் பெய்யும்வெய்யநறாதுகர்ந்திடுதையல்குய்யமுகந்ததிற், றன்னுமாமுகம்வைத்துகந்திடுமன்முகத்தவனென்பராற் றுய்யவையமடந்தைநையவுறுஞ்சுவைப்பரமாவரே, யன்னபாதகர்தம்மையீன்றிடுதாயர்தந்தையர்நரகுறவாற்றுவோரவர் குலமனைத்தையுமாழ்குழிக்குளழுத்துவோர், மன்னுமங்கவர்கற்பகாலமுவெந்நரகிலுற்றுவருந்தியே மகிதலந்தனில்வந்திறந்துபிறந்துதுன்புறுவார்களே. (கஎ)

சம்புவின்பிரதோடபூசைதனைப்புரிந்திடுமன்புளோன் றன்னையீன்றிடுதந்தையேசிவதருமமாற்றுதவத்துளோ, னம்பியங்கவனைப்பயந்திடுமங்கைகற்புடைநங்கையே நாடுகின்றசகோதரங்களியாருநன்னெறியாளரே,யம்புவிக்குளவன்பயந்திடுசந்ததிக்கிளைமல்குமா லனையனன்மனைதாணியந்தனமதிகவர்த்தனையாகுமா, லெம்பிரானடியானவன்பததூளியென்றலைமேலதா,மெதிர்புகுந்திடிலவனையேதொழுதேத்துவோர்பெரியோர்களே. (கஅ)

[illegible]ரகூராசிவசங்கராகிணசங்கமத்தினலுருவமா யடியன்முன்வரவே[illegible]மென்றருநடனமன்பொடுபுரிகுவேன், பாமனுர்பிரதோடபூசனைசாங்கமாகவியற்றுவோர் பாங்கரிற்சகவாசமேவுறுபாக்கியம்பெறவேண்டு

வே, னுரகலோகமதுற்றவாசுகியாதிசர்ப்பவிராசர்தா மூரியமாதர்களோ டும்மேபிரதோடவேளையிலாடகப், பெரியவீசர்முனெய்தியே யவீடேக மோடுனைவேதனம் பெருகுமோடீசவரிசையோடவர்பிரியபூசனை புரி வரே. (௧௯)

அப்படிக்கரனன்புசேர்பிரதோடபூசனைசெய்துளோ ரவர்கட்கு ருமையைவறிந்தெவர்சாற்றுவாரனையாற்றிடா, ரிப்படிக்கணின்வந்த மேபினிறந்துதீங்குடலெய்தியேயென்றுமேசெறிகுமபிபாகமமுழ்ந்துவார் கரையேறிலார், செப்புறுஞ்சிவனன்பரோடுகலந்துளாராசிவபாவனை சிந் தையன்பொடுபுரியவுமபிரதோடபூசனைபுரியவுந், தப்பிலாதமுயற்சிபெ ற்றிடுவார்கள்சங்கானருளையே சாரவரங்கவரேகிறைந்திடுதாவில்பாக்கிய வாளரே. (௨௦)

கற்பகாலமனந்தகோடிதவங்கள்செய்தவராயினும் கருதருமபிர தோடபூசனைகாதலித்திலராமெனி, லற்பமாமவர்செய்தபுண்ணியமியா வுமேயவமாகுமா லரிவையாக்குறுகற்பினல்விரதத்தின்மிக்கதுவாகுமா ல, வெற்புவிலலிதன்விரதமின்னதுசெய்தலாற்கெடன்மெய்ம்மையே மி க்கதோதிரையோதசித்திமாலையுற்றிடுமவேலைவி,லற்புடன்புரிபூசையி ற்பரனற்புதந்தரமகிழுவா னகமகிழ்ச்சியவ்வளவுமற்றவர்ச்சனைக்க ணுவந்திடான. (௨௧)

எனறுசொலலியிவ்வாறுமுன்னுரைசூரசேனனெனச்சொலு மிறை வனைப்பிரதோட பூசனையினியநல்லுபசாரத்தாற், றுன்றுதொண்டர்க ளோடிருந்தினிதாற்றினெலந்தநாளுமே தொலைவிலாச்சுகமெய்துமுத்தி யையெய்தலாமெனகிதமுமே, சென்றியற்றிநல்வாழ்வுபெற்றனனென் றியாக்கினவற்கியாஞ் செம்மைவேதமுணர்ந்திடுஞ்சிவயோகியாமியமாத வ,னறில்வந்துறைசோலைசூழ்தருதுன்றுமாளிகைமிதுலைவா ழனகனு கியசனகராசனகநதெளிந்திடவோதினன். (௨௨)

நாற்பத்தெட்டாவது சூரசேனச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம-௧௫௦௫



நாற்பத்தோன்பதாவது

# இராசேந்திரச்சருக்கம்.



வேறு

தோடுங்குழையுஞ்சூழ்ந்தாடச்சுடருங்குழையின்பிறைச்சடையின்
காடும்பவுரிகொண்டாடக்கனகசபையினின்றாடித்
தேடுமறைகள்கொண்டாடவாரூர்ச்சிங்காதனத்திலிருந்
தாடும்பெருமான்புகழ்பாடுமவரேயெனையாளுடையாரே. (௧)

இசைப்பான்முனிபாக்கினவற்கிராசன்சூரசேனனென்பான்
றிசைப்பாவுடையான்பிரதோடபூசைநாளுஞ்செய்துவந்தான்
புசைப்பான்மிருகதவவாவுடையபவசாகரத்தேவீழாம
னசைப்பான்மையதாங்கதிகொடுக்[illegible]விரதமிதுவென்று. [௨]

இந்தவிரதமகிமையும்பூசனையின்விதியுமீசைவேத
முந்தவுரைக்குமவ்விதியைமொழிவாஞ்சனககேட்டியாற்
சிந்தைதமகிழ்ந்துசந்ததமுந்திரிகாலமும்பூசனைபுரிவோ
னந்திப்பூசைபுரிந்தன்றியன்னமருந்தலாகாதால். [௩]

அரியபிரதோடப்பூசைபுரிவோன்றனக்குமதுவன்றே
பரியும்விரதமதுபுரிவோன்பானுமறைதற்கோரைந்து
தெரியுங்கடிகையெனவெளியிற்சென்றேயுடலந்தனிற்சுத்தி
புரியுங்கருமமுடித்தான்றன்புனிதநீர்த்தந்தனிலாடி. [௪]

பூதியுத்தூளனம்பூசிப்புரியுமனுட்டானஞ்செய்வோன்
வேதிபூதிதரியாமன்மிருமாசமனஞ்செய்தானேற்
நீதியன்றவவனேயிந்திரியநுகாந்தானெனலாமா
னீதினெற்றிதனினீறுதரித்தேதகியமஞ்செபல்வேண்டும். [௫]

நானம்புரிவோன்றனக்கியன்றநாறுந்தண்புனலைச்சிவதீர்த்த
மானதெனவேபாவனைசெய்தாடிக்கருமஞ்செயல்வேண்டு
மேனிவருத்தமுறிலதனைவெந்நீராக்கிமூழ்கியரன்
றேனின்கொன்றைமுடிதோய்ந்ததிருமஞ்சனமுந்தெளித்திடுவான். [௬]

வெண்ணீறுத்தூளனம்பூதிமிக்கதிரிபுண்டரமபுனைந்து
பண்ணூர்விரலிற்பவுத்திரமுநதரித்துச்சந்திபண்ணினபி
னெண்ணூர்சிவமந்திரசெபமுமியன்றமுடித்துப்பூசையில்விற்
றண்ணூர்கிழக்குமேற்குவடக்கேனுமபார்த்துச்சார்ந்திருந்தே. [௭]

மானுமழுவுமபயமுடன்வரதந்தாங்குஞ்சதுர்ப்புயமுங்
கூனவிளவெண்பிறையணிந்துகுடிலமுடியுங்குண்டலமோ
டானசருவாபரணமுமேயணிந்தவழகும்பெறுஞ்சிவனை
யீனந்தீர்க்குஞ்சிவலிங்கத்திடையேபாவித்தேத்தியே. [௮]

கருத்துமினைத்தபின்னுவாகனந்தாபனமுந்தான்செய்தே
யருத்தியுடனேபாத்தியமாசமனர்க்கியமுமேகொடுத்தே
திருத்துபஞ்சாமிர்தமுதலாமபிடேகத்தின்றிரவியங்கள்
பொருத்தமுடனேவெவ்வேறுபுனிதவபிடேகம்புரிந்தே. [௯]

சுத்தசலத்தாற்சிருத்திரமனுவைச்சொல்லியாட்டியபின்
சுத்திபாகன்றனக்கேயொற்றுடைசாத்திச்சந்தனமும்
புத்தியுடனேசாத்தியருச்சனைப்பன்மலரும்பரிந்தணிந்தே
சித்திபெறுதூபந்தீபங்காட்டிநைவேத்தியங்கொடுப்பான். [௧௦]

அன்னவகையுங்கறிவகைகளபூபவகையுமேயரன்றன்
முன்னரேத்திநிவேதித்தேயடைக்காயமுதுமுதலேத்திச்
சொன்னதூபந்தீபஞ்சோடசமாமுபசாரந்தொகுத்தே
யென்னையாளுமெம்பெருமான்முன்வீழ்ந்திறைஞ்சியேத்துவான். [௧௧]

புத்தேளிர்கடமதிபதியேபூதபதியேபோற்றிமறை
வித்தேசந்திரமவுலியேவினைநோய்மருந்தேபோற்றியருட்
சத்தேசித்தேயானந்தந்தானானவனேபோற்றியணி
முத்தேவருமோர்வடிவானமுதலேபோற்றிபோற்றியே. [௧௨]

என்னைபுரப்பாயருள்விசுவநாதாபோற்றியேழையே
னுன்னைச்சரணமென்றடைந்தேன்காப்பாயுன்றாமரைத்தாளைச்
சென்னிப்பூவாயணிந்துதொழுநினைந்தேமனதுசெல்வநிதி
மன்னுற்றிடுமுன்சிவலிங்கபூசையென்றேமதிக்கின்றேன். [௧௩]

நிலத்திலயாவருனைப்பணிந்தாரவர்கணிதியின்பதிகளன்றோ
குலத்திலெனையுநின்பாதபூசைபுரியக்குறித்தருள்வாய்
சலத்தின்முளைத்தபலபுட்பஞ்சாராதருந்தாமரைசாரு
நலத்தவளிபோலென்னெஞ்சம்பிறரைநாடாதுனைநாடும். [௧௪]

இதயமுனையேநினைத்திடுகவென்றுமுனதுநன்மை
மதனையெப்போதுந்துதிக்கக்காதுன்சரிதமதுகேட்கப்
புதியமலராலெனதுகைநின்றுணைத்தாண்மலரிற்பூசைசெய்க
விதிமாலறியாவிப்பரிசுமேனாட்செய்ததவமன்றோ. (௧௫)

வள்ளலேயுன்பூசையினால்வருங்கல்யாணநன்மையெலா
முள்ளபொருளேசங்கராவீராவுமையாண்மணவாளா
தெள்ளுமமுதேயருட்கடலேசிறியனேனைப்புரந்தளிப்பாய்
பிள்ளைமதிசேர்முடியானேகாசிப்பதியெம்பெருமானே. (௧௬)

காலகாலாவினிமேலென்கருத்தும்பாவந்தனிற்செல்லா
தேலவருள்வாய்பலயோனிதன்னிற்செலுத்துமிருவினையுஞ்
சாலமாதர்துர்க்கந்தயோனிவிரும்புஞ்சஞ்சலமும்
பாலவிழியாய்தீர்த்தேயுன்னருட்டேன்பருகப்பணிப்பாயே. (௧௭)

அடியேனெஞ்சம்பிரமபதமமரர்பதங்கள்விண்டுபதம்
படியேழ்புரக்குமிறைபதமும்பற்றிற்றிலதாலெந்நாளு
நெடிதாம்பிரதோடப்பூசைநிகழ்த்திநின்பானிவேதித்த
வடிபாலனமுன்னடியருடனிருந்தேயருந்தமதித்துளதால். (௧௮)

சென்றநாளெல்லாமவமேசெலுத்திச்சிவனேவீரேசா
வுன்றன்பூசைதனைப்புரியேனுனதாலயமுஞ்சூழ்போதேன்
குன்றமுலையார்மயற்கோட்டிகுறித்துக்காலம்போக்கிவிட்டே
னின்றதறிவாயதுபொறுத்தேயெளியேன்றனைக்காத்தருள்வாயே. (௧௯)

சீராருனதுதொண்டருடனெனையுகினைவாய்சிறுபூனை
காரார்மத்தமெருக்குவில்வங்கங்கைப்புனலாலுன்பதத்தே
யாராதனைசெய்திலனொருவில்வத்தாற்பிரதோடத்தினத்தி
லேலாருன்பொற்பதத்தணிந்தாலீரேழுலகுந்தருவாயே. (உ0)

வித்தேதசிவபூசையிலுள்ளவிசுவாசஞ்சேர்பலன்பூசை
பத்தியுடையனிதயவயற்பதியாதவமாய்ப்போயினதாற்
சித்திதருகின்சிவலிங்கபூசையெனுஞ்சஞ்சீவியென்னைத்
தொத்துபிறவிப்பிணிதீர்க்குமருந்தென்றுளத்திற்றுணிந்திலனே. (உக)

இளமைப்பருவந்தனின்மைந்தரென்னகுறைகள்செய்தாலும்
வளமைத்தாகத்தாய்தந்தைபொறுப்பருன்றன்மலர்ப்பாத
முளம்வைத்திறைஞ்சிநினையாமற்பேதைமதியாலுனைமறந்து
களவிற்றிரிந்தவெனதுபிழைபொறுத்தேகாத்துக்கொள்வாயே. (உஉ)

பிறப்புமிறப்புமில்லாமலருள்வாயலதுபிறக்கிலுன்னை
மறப்பதில்லாவரந்தருவாயென்றுவேண்டிவணங்கியே
சிறக்கும்பிரதோடப்பூசைசெய்யுக்கடவன்செய்துடனே
யிறப்பில்லாததிருவத்தயாமப்பூசையுமியற்றி. (உங)

இயன்றசெபமுந்தான்புரிந்தேயியல்சேர்காலைமாலையுட
னயஞ்சேரோமந்தான்செய்காதன்றனக்குநிவேதனஞ்செய்
பயன்சேரன்னமன்பருடனடுக்கப்பகர்வைசுவதேவ
முயன்றவிருபோதும்புரிகபிரதோடத்தோர்முறைபுரிக. (உச)

அன்னமருந்திப்பின்னிருகடிகையேனுமரன்காதை
பனனிப்பொழுதுபோக்கிடவேவேண்டுஞ்சில்லோர்பண்ணவர்கண்
மன்னுதிரிகாலம்பூசைபுரிவோர்மத்தியானத்திற்
றுன்னும்பூசைமுடித்தருந்தியந்தப்பூசைதொடங்குங்கால். (உரு)

உடுத்தகலையைவிடுத்துமற்றோர்புனிதகலையையுடுத்துடல
மடுத்தநீறுத்தூளனமாவனைந்துபூசைபுரிவதென்றே
யடுத்துப்புகல்வார்பிரதோடபூசைதனக்கப்படியாகா
வெடுத்தபிரதோடத்திலுண்போனவர்செய்தோடமெனல்வேண்டா. ()

தெரியுந்திரையோதசிவிரதஞ்சிவபத்தர்களாமறையோர்கள்
புரியும்பொழுதில்விசேடமதாப்புரியவேண்டுமிதற்கிணையாய்
பரியும்விரதம்யாங்காணப்பகரக்கேட்கப்பட்டதின்று
லரியவிவற்றிலோர்காதையரசசனகேட்டியால். (உஎ)

உலகமெல்லாந்தனதுசெங்கோலோச்சிப்புரக்குந்தனியானை
யிலகுந்திகிரிராசேந்திரனெழில்சேர்பிரமாவர்த்தமெண
நிலவுந்தலமொன்றதிலிருந்தானிகரில்செல்வத்தளகேசன்
புல்வர்க்கரசனிந்திரனும்போற்றுஞ்செல்வப்புரவலனே. (உஅ)

அனையோன்மிகுபுண்ணியம்புரிந்தானப்போதவனைக்காண்பதற்கே
வினைதீர்தவத்துமறையோனும்வியாசமுனிவன்வந்தனனான்
முனைவன்றனக்கேயெதிர்கொண்டுமுறையால்வணங்கியாசனத்திற்
பனிதோய்பிறையோனெனவிருத்திப்பரிந்தபூசைபுரிந்தனனால். [௨௯]

இறைவன்வாதராயணனைப்பார்த்தேயிசைப்பானிசைநான்கு
மறையுமறைதத்துவஞானமுறையினுணர்ந்தமாதவத்தோ
யறையுமாசாபாசத்தினபாயநீங்குமுபாயமெந்தத்
துறையிற்செயலாமெனயோகத்துறையுமுனிவன்சொல்லுவான். [௩௰]

நல்லகருமத்தெரிந்தனையாலரசஞாலத்தோரிந்தச்
சொல்லையுணர்ந்துதருமபுத்திசேர்ந்தேயுய்யத்தொடங்கினையா
லல்லல்புரியுங்குடிவாழ்க்கையாசையொழித்தோரரிதறந்தான்
மல்லல்புரியும்பிரபஞ்சவசத்தோர்க்கெங்கேவருமன்றே. [௩௧]

மிக்கதருமவாசனைதான்பெற்றோன்விரத்தியாவனென்றே
தக்கவிரத்தனல்லாதான்றருமஞ்சாரிலவைவில்லா
தொக்கவிரைந்தேநீங்கிடுமீதும்பர்தமக்கும்பொதுவன்றே
மக்கடருமஞ்சாரில்வினைவாரிநீந்தப்பெறுவாரால். [௩௨]

அந்தத்தருமமேதெனிலெப்போதும்புரிவதநேகமுண்டால்
வந்துற்றிடுமோர்தருமத்தாற்றருமம்வாய்ப்பதெனமொழிந்தா
னிந்தப்புதுமைதனைக்கேட்டவரசன்புகல்வானிருந்தவத்தோய்
முந்துற்றிடுமிங்கிதனைநானறிந்திலேனீமொழிகென்றான். [௩௩]

முனிவன்புகல்வானரசகேளிதனையறிந்துமொழிவரிதாற்
றனைநேரில்லானறிவனிதுதானேதெனிற்சிவஞான
மெனுநற்சிவபூசனையாகுமிதுவேதருமத்துக்கரமா
மனையதமரர்க்கிறைசிவன்போலறங்கட்கெல்லாமிறையாமால். [௩௪]

இதனின்மனந்தான்புகலரிதுமற்றைத்தருமத்திடைச்செலுமான்
மதனைக்காய்ந்தோன்பூசனையாற்றருமமெவையும்வளர்ந்திடுங்காண்
சிதமுற்றிடுமெய்த்தவயோகயாகஞ்செனனகோடியிற்செய்
முதன்மைப்பலத்தினாலன்றோசிவன்பாற்பத்திமுயல்வதென்றான். [ ]

பத்தியதுதான்பெறின்முத்திபலிக்குமன்றேதிரிகாலஞ்
சித்திதருமெய்ச்சிவபூசைசெய்யவேண்டுற்றவைதன்னின்
மத்தியானபூசனைதான்விசேடமெக்காலமும்வரையா
தத்தியுரித்தோன்பூசைதனைச்செய்யவேண்டுமெனவறைந்தான். [௩௬]

அரசன்புகல்வான்திரிகாலமல்லாலெக்காலமும்பூசை
புரியவேண்டுமென்றுரைத்ததேதென்றிடலுமுனிபுகல்வான்
பெரியவிலிங்கத்தினிற்பூசையிடைவிடாமற்பெரிதியற்றிற்
றெரியுந்தாராவபிடேகமாகுமதுசெப்புதுமன்றே. [௩௭]

வடிகொள்சீதச்சுகந்தநறுமஞ்சனத்தாலிலிங்கேசன்
முடியின்மீதிலிடைவிடாதபிடேகஞ்செய்முறையியற்றிற்
கடிகொண்மலர்களறுகுவில்வங்கலந்தேயருச்சித்தேத்துதலாம்
படியிலிவைசெய்தோர்வினைபோய்ப்பரமன்பாதஞ்சேர்குவரால். [௩அ]

பரமானந்தவமுதசாகரமாம்பரமனொருகுடங்கை
வரமாம்புனலோடறுகுவில்வமகிழ்ந்தேயழியாப்பதங்கொடுக்குந்
தரமாரறிவாரதிசயமேயன்றேவணையனருள்பணியா
ருரமாஞ்சனனசாகரத்தின்கரைசேர்நதுய்யமாட்டாரே. (௩௯)

நாற்பத்தோன்பதாவதீராசேந்திரச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஙசச.



ஐம்பதாவது,

# வீரசித்துச்சருக்கம்



வேறு.

பூதிகண்டிகைபுனைந்தவரேனுமேசைவ
நீதிகொண்டிடுநியமத்தராய்ப்பத்திபூண்டே
சோதிசேர்தருசிவலிங்கபூசைசெய்துயோ
ராதிசேவடிசேர்குவரல்லலொன்றிலரே. (க)

முனிவன்யாக்கினவற்கிதான்மொழிகுவான்வியாச
னினிதுரைத்திடுவாய்மைகேட்டரசர்கோனிசைந்தே
யனையபூசனையாற்றுவோர்யார்பலனென்கொல்
புனையுமங்கமேதுரையெனமறைமுனிபுகல்வான். (௨)

ஓதும்வன்னநான்குள்ளவர்சங்கரர்க்கென்றே
வேதமோதியவிதிப்படிபூசைசெய்திடலா
மாதியார்சிவ்பூசையாற்றுனெவனேனுஞ்
சீதநீருண்டோன்வீரியநுகர்ந்திடுந்தீயோன். (௩)

உண்டிவேண்டினேன்மலநுகர்பன்றியொப்புறுவான்
பண்கொதையொன்றுளததுபகருவன்கேட்டி
மண்டலத்தினிற்சாத்தகியென்றோர்மன்னவன்றுன்
கண்டகத்தர்துன்மார்க்கர்மந்திரரொங்கலந்தான். (௪)

அவன்புரந்திடுநாட்டியலோர்ந்திலானவமாஞ்
சிவந்தவாய்ச்சியர்கோட்டியிலேமனந்திகைத்தா
னிவந்தகொங்கையின்னுரையெந்நேரமுநீங்கா
னுவந்தநித்திரையுறுங்கனவிலும்பிரியாதோன். (௫)

காவலன்புணர்காதன்மின்னார்களிலொருத்தி
பூவைபோன்மொழிப்பூங்குயில்பூவனம்புகுந்தா
ளாவலாலரன்பூசைசெய்போகிபாங்கயர்ந்த
தாவிலாவிளவரசன்முன்சார்ந்துகண்டனளால். [௬]

கண்டிபூண்டுமெய்ப்பூதியுத்தூளனங்கலந்தே
யுண்டரந்திகழ்நெற்றியான்பூசைசெய்வானைக்
கொண்டலோதிகண்டேகுறுமூரல்கொண்டனளான்
மண்டுகாதலாளவன்முனஞ்சென்றுரைவகுப்பாள். [௭]

எந்தநாடுநீரெப்பொழுதிங்குவந்தடைந்தீர்
வந்தகாரியமேதுநுங்குலமெனவாரஞ்சேர்
தந்தைதாயெவர்மணஞ்செய்துளீர்கொலோசாலப்
புந்தியாசைகொண்டேன்சொலுஞ்சொலுமெனப்புகன்றாள். [௮]

என்றுகேட்டவளழகுநல்லிளமையுமவடன்
குன்றுபோலுயர்கொங்கையின்பொலிவையுங்கண்டா
னன்றிநன்றெனநாணினன்முகங்கவிழ்ந்துரைப்பான்
மன்றலோதிநானரயர்தம்மரபுளேனென்பான். [௯]

வீரசேனனென்றந்தைதாய்வீரசூவென்பாள்
பாரின்மேம்படுகமலலோசனையென்றன்பாரி
சேருமென்செல்வமிகர்க்குமோவளகையர்செல்வஞ்
சாருஞ்சாதுரங்கந்தனக்களவுசாற்றுவதோ. [௧௦]

மாமணிப்பொலன்மண்டபஞ்சித்திரமாடங்
கோமுறைத்தனிபரசுவீற்றிருந்திடுங்கூடம்
பூமகட்குறையுள்ளெனும்பொருளறையறைகள்
காமரிந்தரன்முதன்மைசேர்சுதன்மைபோற்காணும். [௧௧]

என்றுகூறலுமதிசயமெய்தியேயிரண்டு
குன்றுபோலுயர்கொங்கைபாள்கூறிடுகின்று
ணன்றுநன்றுநீர்தந்தைதாய்தமருறைநன்று
டொன்றுசெல்வமுமனைவியும்பரிசனத்துடனே. [௧௨]

அனைத்துவிட்டுநீரயலவருடலங்கார
வனத்திலேயிவண்வந்துறைகாரணமென்னே
தனத்தின்மிக்கநீர்தனியொருவரியர்போற்சார்ந்தீர்
நினைத்ததோர்மனத்துறும்வயிராக்கியநிகழ்த்தீர் [௧௩]

இளமைமிக்குளீர்திருவுநல்லுருவுமேயியைந்தீர்
தளவவார்குழற்றருணியாளநலந்தனைவேட்
டுளம்விருப்புறுபோகநீத்திவணுறலாமோ
வளமையுளவனத்திவ்வனத்தெவ்வணம்வந்தீர். [௧௪]

காளையம்பருவஞ்சென் றழப்புறிற்கடைபாய்
வாளைவென் றகண்ணார்மயக்கெங்ஙனம்வருமே
யாளுநுந்தமதிளமையோமெய்புறமழகோ
நாளுநானெங்குங்கண்டிலேனற்புதநலமே. [கரு]

இந்தநல்லழகெய்தினேரொருவருமில்லை
வெந்தவேளரன்வரங்கொடுமெய்யடைந்தனனோ
வந்தமன்மதன்றுணைவனோவழகுடனிளமை
முந்துமோகத்துக்குறையுடானல்லவோமொழியில். [கசு]

இளமையோரிடமழகோரோரிடத்துறுமிரண்டு
மளவியுற்றிடன்மூவுலகத்தினுமரிதாற்
களவன்யாருடன்கலந்திவண்போந்துளிர்கடிதற்
குளமகிழ்ந்திடுதந்தையுந்தாயுமுற்றிலரோ. [கஎ]

அல்லதூடலுற்றீர்கொலோவகத்துறுமனையா
ளல்லளல்லளோகோபத்தானணுகினீர்கொல்லோ
வல்லியாங்கவடனைவிடுத்தென்னுடன்மருவீர்
புல்லுபெண்மணியென்பெயரென்றனள்புகல்வாள். [கஅ]

என்னுடன்கலந்தீரெனிலிப்புவியெல்லா
மன்னுநும்மரசாட்சியாச்செய்திடவல்லேன்
றுன்னுபோகங்கள்யாவுமேநுமக்கெனத்தொகுப்பேன்
மின்னுபூணினீர்நுமைக்கண்டென்புருடனைவெறுத்தேன். [கக]

என்னைக்கூடினீரெனிற்கடிதேகியேயிரவிற்
றுன்னியன்னவனுயிர்விடத்தாற்றொலைத்திடுவேன்
பின்னரோர்கவலுற்றிடப்பெறுவதின்றுமான்
மன்னுமிப்புவித்திருவுநும்வசமுறச்செய்வேன். [ந0]

இளநிலாத்தவழ்செய்குன்றமெழுநிலைமாடந்
தளவமல்லிகைப்பூம்பந்தரஞ்சணைச்சயனங்
குளிருந்தென்றல்வந்துலவுசாளரம்படர்குடிசை
களபங்குங்குமம்புழுகுநெய்பொற்கிண்ணங்கலவை. [உக]

தாசிதாசர்களிவையெலாநுமக்கியான்றந்தேன்
பேசுவீர்நெஞ்சிற்பிரியமேதவையெலாந்தருவேன்
கூசலேதெனையுமுடைமனைவியாக்கொண்டா
லேசிலாப்பொருளேதுதான்கிடைத்திடாதுமக்கே. [உஉ]

எனதுநன்மனைதனிற்புலிப்பாலிருந்துளதான்
மனதுவந்தெனைப்புல்லின்மெய்தளர்ச்சிவாராம
லனையதும்முடைநாவினினைத்திடவளிப்பேன்
பினையும்வேண்டியபொருளெலாந்தருகுவன்பேசீர். [உந]

வேறு.

இந்த•ந்தவனத்திலின்பசுகந்தநன்மலருற்றவா லிதுவுநானினிதுடையனாலிவணெய்தியேவிளையாடவே, சந்திரன்பொருபட்டுமெத்தைகட மூவணைத்திரளுள்ளவாற் றனியருந்திடுமிரசவர்க்கமமைத்திடும்படமாளிகை, வந்திருந்துநுபாருநீரெனதாமதித்துமயங்கிநீர் வாரும்வாருமனத்திலேயணுவொப்பதோர்பயம்வைத்திடீர், புந்தியுற்றகலக்கமேனொரு புருடரிவ்விடைவந்துறார் போற்றரம்பையர்போற்செயுந்தொழின்மாதரார்வந்துபுகுவரே. (உச)

அனையமாதர்களுமதுசிந்தைமகிழ்ந்திடும்பணியாற்றுவா ரருள்புரிந்துநும்முகமெடுத்தெனதானனத்தினைநோக்குவீர், மனதிலுற்றிடும்விரதம்விட்டெனைமருவுநாமிருவோருமே மதனபோகவிதந்தருங்கலவிச்சுகந்தனைமருவுவோம், கனகதாமரைமலரினங்கையொடமரர் மங்கையர்யாவரும் கடிதுவந்தெனதழகுகண்டுகண்ணேறுபட்டனர்போயினார், தினகராதிவிணோர்கள்கண்டிடல்விட்டுநீங்கிலரென்னையே செய்யமாணிடர்கண்டுளோர்கடிகைத்திலாதெவர்போவரே. (உரு)

அகிலமீதினின்மனிதர்பெண்ணெனுநாமமுற்றோரசேதன மதுவெதிர்க்கினுமாசையுற்றிடுவார்கணீரெனகாணுநா, னகிலமாதர்கண்மணியெனப்பெயர்கொண்டுளேனிளநலமுளே னாடுமென்றனைநாடுவோர்களினச்சிலார்களுமுளர்கொலோ, புகலுவீரெனதிளமைசுந்தரமிலகுதேகமதும்மையே போலும்வாலிபர்போகமிங்கிதபுருடருக்கிதமல்லவோ, விகலுகின்றதென்யானதிட்டவசந்தனாலுமையெய்தினே னென்னைநோக்குதல்செய்திலீரவையென்னபாவமிதென்பதே. (உசா)

அல்லக்காணுமோர்வாய்மைநானிதுசொல்லக்கேளுமெனைக் கண்டாலவிதனக்குமுடம்புபுளகிதவாண்மையுற்றிடுமல்லவோ, நல்லசுந்தரமதனிலேமிகநல்லசுந்தரமங்கைநா னாகரீகவென்னங்கவிங்கிதநயனபார்வையிலுணர்குவீ, ரெல்லைதீருநல்லழகர்நீரெளியேனுமப்படியல்லவோ விளமைபெற்றிடுநலமுமொத்தனவிருவருக்குமியைந்ததால், வல்லமாதர்நிதிப்பெருக்கினின்மனதுவைத்திடுவார்களான் மருவுநானுமதிளமைநல்லெழில்வாஞ்சைவைத்துளனுமரோ. (உஎ)

ஒருவனாகியகணவன்பன்னரை யுடையன்சில்பொருளுடையனேலோதுமற்றவனொடுமகிழ்ந்துறைவார்களோவியமாதரார், பெருகுசெல்வமோடிளமைசுந்தரமுறுபெறுந்தகைமணமகன் பேதைமாதர்கைவசமதாய்விடின்விடுவரோபெரிதாசைகூர்ந், துருகுவார்களவ்வெழில்கள்யாவையுமுடையவும்மையும்விடுவனோ வொளிநிறைந்திடுமதியமொத்திடுமுமதுவத்திரநோக்கியே, பொருமதன்கணையால்வருந்தினனும்மைவிட்டயல்போந்திடேன் போகவேண்டியதெவனுமக்கவண்யானுமேயுடன்போதுவேன். (உஅ)

என்றுசொற்றமடந்தைமுன்னரிராசவன்பயத்தொடு மெழின்முகங்கவிழ்வுற்றான்பதமிதபமீதிலிருத்தியே, நன்றுநன்றிதெனுநகைத்துமெலச்சொல்வார்சிலநன்மொழி நாறலூறன்மலஞ்செறிந்திடுபாண்டமாகுமுடம்பைநீ, நின்றுநச்சிபதேதெனக்குமடந்தைமார்கண்மணந்துளோர் நீணிலத்தினில்லையென்றுநினைத்திடேனிகாற்றுளோர், மன்றலோதியர்தாமநேகரென் மாளிகைக்குளிருந்துளோர் வாளைவென்றகண்வேலைவென்றசொன்மதியைவென்றமுகத்தினர். (உ௯)

அவர்கடம்மைவெறுத்துளேனழிவுற்றிடுஞ்செல்வம்யாவையு மாசையற்றுவெறுத்துளேன்மிகுமாசையுற்றசுத்தையு, மிவர்தலுற்றிடுமோகமின்றியிதீனமென்றுவெறுத்துளே னெவ்வனத்தினிலாவதென்னவதின்றுநாளையொழிந்திடுஞ், சவமெனப்படுமுடலிராததுசடுதியிற்படிசாரும்வீண் சாற்றுகின்றனையேற்றமானசவுந்தரியமெனச்சொலி, யுவகையுற்றதிலொன்றுமில்லையுன்மனதிலுற்றமயக்கமே யுற்றுநோக்குதி பொத்தையூன்பொதிதோலெலும்புநரம்புமே. (௩0)

ஆதலாலிதிலாசைவைத்திலர்நாசமுற்றிடுபோதினி லரியதுன்பமெய்துமென்றறிஞோர்வெறுத்துளரறிதியால், பேதையாயுதரத்திலேமலமூத்திரத்தொடுசுக்கிலம் பித்தமாமோடேபுழுத்திரள்பேசொணுமுடைநாற்றமே, போதுகின்றமுகத்தின்வாயுமிழ்கோழைகண் வழிபீழைகாதுறுகுறும்பியிரண்டுகீணிலைவாயிலூழலுமைப்பதோ, வேதமுற்றதுவாரமொன்பதுமேவுகின்றசரீரமா மிதுநன்மேனிமினுக்குகின்றதோர்தோலின்மூடியிருந்ததே. (௩௧)

மலத்தில்வந்திடுகிருமியங்கிதனுக்கொர்சுந்தரமென்னபல் வகையதாகிய துக்கமுற்றிடுகர்ப்பசுக்கிலசோணிதங், கலத்தல்பெற்றதோர்மூத்திரத்தினிறைந்தயோனியின்வயலிலே காட்டுமிந்திரியத்தின்வித்திடுகாலைவந்துமுளைத்ததா, மூலத்தலுற்றிடுநிம்பவித்தினிற்பாரிசாதமுளைக்குமே ஊழலுற்றவுடற்குமேயழகுண்டெனச்சொலலாகுமா, னலத்தைமேவியவிளமைசுந்தரமென்றுநீகலுழ்கின்றியா னுடலங்கதெவர்க்குநின்றதுநாட்டிலற்புதமாகுமே. (௩௨)

சிட்டருக்குமிவ்வுடலிலாசைகடோர்ந்துருவகையாலுறுந் தெரிவைமார்கள்புணர்ச்சியேமிகுசெல்வமென்றுபுகன்றியாற், கெட்டதாகுமம்மாதராருடலத்திலுற்றதுர்க்கந்தமே கேள்வியுற்றுமறிந்துமேபுணரார்கடாமதிகேடர்தா, நட்டமாகிபநாறலுற்றவுடம்பைநானெனவெண்ணிடுநரகனுக்குரைநின்சொலென்னிடைநண்ணிடாதகன்றேகுவாய், துட்டபுத்தியைவிட்டிடாயமலோகமுற்றபயங்கரஞ் சொல்லுவோர்சொலக்கேட்டிலாய்கொல்சுடர்க்குள்வீழளிபோன்றுளாய். (௩௩)

ஆசையுற்றெவனேனுமேயயன்மாதரைப்புணர்வெண்ணுவோ னரியதன்பிதிர்வர்க்கமோடெரிகும்பிபாகமதடைகுவா, னேசமுற்றவர்வதனநன்றுறுகின்றதென்றெதிர்நோக்குவோ னெறிகளற்றெருநகற்பகாலம்

வெங்கிரையமுற்றுவருந்துவான், சீசிமற்றவர்மலசலக்குழியானயோனி யிலிச்சைகூப செய்துளோன்பரலோகசிந்தனையற்றபாமரனாகுவா, னாசி காதுகண்முலையுருண்டுதிரண்டுநீள்சதைக்கட்டியா நகமுறும்பொழுத வைசெந்நீருறுநச்சுவாரழகென்கொலோ. (௩௪)

கலவியுற்றுவிடுத்தமாதர்கள்யோனிபன்றியின்யோனிபோற் காண் பதற்குவழங்குமோவிதிலாசைகொள்வதெக்கன்மமோ, வுலகினல்லதி தல்லவென்றுணராதவன்மதியோர்செய லுன்னுவாரிதுபன்றியினுடலு தவுமிவ்வுடலுந்தவிடா, மலமதாமதிலுற்றவுள்ளுறுமூழமுழனோக்கிலெவளி யிலே மாதர்மேனியைநோக்கியேயழகென்றுசொல்லிமயங்குவா, யிலகு மானிடவடிவிலேசுசியில்லையோவெனநவிறியே லிசைகொள்வேதியர்வ டிவமேசுசியென்றுசொற்றிடும்வேதமே. (௩௫)

அதனிலுஞ்சிவபத்தர்மேனியததிகமாகியபுனிதமா மண்ணல்பூதி த்ரிபுண்டரத்துடனரியகண்மணிமாலைபூண்,மதியுடைப்பெரியோர்கடம் வடிவதிகமேயதுவருதனுன் மதியிலாய்சனனங்கடோறுமியற்றுமாதவ மல்லவோ, கதியளித்திடுபரமனன்பர்கள்வேடமேகலியாணமாங் கடவு ளாரருளாலெனக்கிதுவந்ததாலதுகாண்டியால், விதிவசத்துறுசனன வாசனையாமலத்தையகற்றினோன் மீண்டுமர்தவழுக்கெடுத்துறுமேனிபூ சுதன்மேன்மையோ. (௩௬)

ஈனமாங்குடிவாழ்க்கைசெல்வமிறக்குநாளுடனொள்ளள வெய்து மோசெய்தவிறைவர்புண்ணியமொன்றுமேவருமேழைகே, ளானதோர் பசுநிறையுளேகிடுகாலையாங்கதிலுற்றகன் றுதரித்ததையீன்றதாயைய றிந்துபின்றொடர்வாறுபோற், றனமேவியசெல்வமுற்றிடின்மாமன்மை த்துனனண்ணனந் தம்பியுற்றவர்பெற்றுளோரெனவந்திருந்து தருக்கு வார், போனகாலையில்யாவருந்தொடர்வார்களில்லையிறந்தவப் போதுமா தர்புணர்ச்சிபோயதெனப்புரண்டழுவார்களே. (௩௭)

மகனமக்கெனவந்ததேசெல்வமெனவுளத்துண்மகிழ்ச்சியான் மா நிலத்தவர்காணவேயழுவார்கள்போலலமருவனு, லகமதுற்றிடுதாசிதாச ர்களுறவுளோரயலோர்களு மரும்பொருட்கழுவார்களன்றியையோவிவ ன்றவமாற்றிலா, னிகந்தனிற்சுகமுற்றதன்றியிறந்தகாலையிலுடன்வரற் கேய்ந்தகாரியமொன்றுமே செய்திலானெனக்கவல்வாரிலை, மிகுந்துகா லரன்றுள்வெகுண்டுவெருட்சிசெய்திடுபயமலால் வேறுசற்றிலையால்ய மாந்தகனற்பதந்தொழவேண்டுமே. (௩௮)

வேறு

காலகாலர்கருணைவாரியானவள்ளலவர்நமைக் காக்கவல்லகடவுளா மதன்றிவேறுகண்டிலோ, ஞாலமீதின்மனிதர்தங்களிளமைமாதாகோட் டியா னுதர்பூசைசேவையின்றிநாளவத்தமாக்குவார், சூலபாணிபாதமங் தமுற்றபோதுநினைவுறிற் சொல்லொணாதமுத்தியின்பசுகங்கிடைத்தல்

திண்ணமே, கோலமாதரிளமையின்பமதுநினைந்தழுங்குறுங் கோரபாவமதுநினைந்தகொடுமையாளர்நெஞ்சமே. (௩௯)

அந்தமேவுபோதுமாதரழுகுரற்பெருந்தொனி யரன்றனுமவமுதவாரிசெவிபுகாதடைக்குமே,யுந்துசீவனேகுகின்றபோதிலாதிபூதியே யுருத்திராக்கமாலை பங்கமெங்குமேயுறப்புனைந்,தெந்தையாரிலிங்கமாட்டுபுனிதமஞ்சனந்தெளித் தினிதுவில்வமாலையுந்தரித்திடச்செய்தார்களே,னநதுமந்தவேளைவந்துகருணைசெய்துநாயக னந்திதன்றன்வடிவலாற்றன்றதரூபமருள்வனே. [௪0]

பூதிகண்டிமாலையும்புனைந்தான்றனுமமும் புகலுநாவினோடுகண்கள் புனிதலிங்கதரிசனத்,தாதிநந்திநடுவினிற்றன்றுவிநீங்குவான்றன்முன் னம்பையோடுநாயகனடுத்தெடுத்துமடியினின்,மீதில்வைத்துடுத்தவுத்தரீகம்வீசிமேனியின் வேர்வையாற்றித்தாரகத்தைமென்செவிக்கணுதவியே,கோதிலாதமான்மழுத்தரித்தசெங்கைமூன்றுகண் குலவுகின்றதன்னுருக்கொடுத்தளிப்பன்கயிலையே. [௪௧]

ஆனதன்மையாலெனக்குவாழ்வுபெண்டிர்மக்கண்மே லாசையில்லைபண்ணல்பூசைசெய்துசந்நிதிக்கணே, யூனமுற்றவுடல்விடத்துணிந்துளேனவ்வேளையி லும்பர்தம்பிரான்றனுமம்பைபாகசங்கரா,ஞானநாதநீலகண்டகாலகாலசம்புவே நம்பவென்பதென்றனுவினடனகின்றுபுரியவே,யீனமற்றவென்கைவில்வமிறையிலிங்கமணியவே யெனதுசென்னியீசர்சந்நிதானமுற்றிறைஞ்சவே. (௪௨)

கண்களண்ணல்வடிவுகாணவடிகளென்றனெஞ்சுறக் காதுகாதைகேட்கவிப்படிக்கலமைந்தகாலையி, லெண்கொளும்பிராணவாயுவேகவென்றுநான்சிவ லிலிங்கபூசைசெய்துமேளெனன்றுவிரசித்தென்றான், பண்கொள்சொல்விராசதேவியாசையுற்றநெஞ்சகம் பக்குவிட்டுடைந்தரன்பதத்திலன்புபாரவே, தண்கொளப்பகர்ந்தவாறுசனகராசனுக்குமுன் சைவமோனஞானியாக்னவற்கிசாற்றினனரேர். (௪௩)

ஐம்பதாவது விரசித்துச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கருஅசு.



முதற்காண்டம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவரகசியம்

கிரியாங்கிசை

## இரண்டாங்காண்டம்.



முதலாவது,

## பூசாயோக்கியவனச்சருக்கம்.



வடிவெலாந்திருநீறணிந்தேகண்டிமாலை வடிவுறப்புனைந்திலிங்கபூசனைசெயவல்லேன், கடிகொள்கொன்றைசேர்வேணியாய்கருணையங்கடலே கடவுளேயெனுநாமமல்லாற்பிறிதறியேன், படியெலாந்திரிந்தேதகவியான்மெலிவுற்றேன் பாவியேனுனதுருவினைப்பாவியேனெஞ்சி,லடியனேனுன்றன்சரணமல்லாற்சரணறியே னுண்டதொண்டரோடுறவுறவருள்புரிவாயே. (௧)

அண்ணல்யாக்கினவற்கியாமுனிவரன்புகல்வா னரசன்வீரசித்துரைத்திடுமுண்மைகளனைத்தும், வண்ணவார்குழற்பெண்மணிகேட்டவளகத்தின் மையறீர்பத்தியுடன்வயிராக்கியமுற்றே,திண்ணமாங்குடிவாழ்க்கையின்சனனவாசனைதான் சிவனைப்பூசனைசெய்யில் விட்டொழிந்திடுமெனவே, யெண்ணமாம்பொருண்முன்னுங்கேட்டிருந்தனனிறைவ வீசன்பூசனைசெயும்விதியியம்புதியென்பாள். (௨)

மெய்யிலுற்றதூர்க்குணமெலாஞ்செய்யனீநன்று விளம்பக்கேட்டனன்மெய்யுணமுற்றுமேதெளிந்தேன், ஐறயல்பாகன்றன்பூசனைக்குதவுமேலிந்தச் சடலந்தான்சவுபாக்கியம்பெற்றதென்றிடலா,மையனேயினியேனுமிவ்வுடலதுகொண்டேயமலன்பூசனையாற்றியேகதிபெறவேண்டும்,பொய்யிலாவிந்தப்படிவமுற்றிடுமெனதான்மாப் புனிதன்பூசனைப்பலன்பெறப்புரிந்தருளென்றாள். (௩)

இயமனார்பயமிதயத்தை தவிர்ந்திடுமென்றே யியம்பினீரதியானு
முன்கேட்டிருக்கின்றேன், நயவினாற்சிவபூசனை செயும்படியெல்லாஞ்சா
த்திரப்படிதப்பிலாதின்றுசாற்றிடுவீர், மயல்செயுஞ்சன்மபயந்தவிர்த்தி
டுங்குருநீயேவாய்த்திடுஞ்சைவசீலம்பெற்றோர்நும்போல்யாரே, யுயர்த
ருங்குருவெனக்குநீரருளுதிரென்றே யோதும்பெண்மணிவார்த்தைகேட்
டரசனுமுரைப்பான். [௪]

காலகாலரர்ச்சனையினால்யமபயநீங்குங் கருதிடிற்பின்னரொன்றினு
ந்தீர்த்திடாகண்டா,யேலவார்குழலுனக்குந்துசெல்வங்களுளவா லீசன்
பூசனைகுறைவின்றியியற்றிடலாமாற், சாலமெய்ப்பொருள்கொண்டலா
ற்சங்கரன்பூசை தான்செயற்கியலாதோவென்றுசாற்றுவையே, லால
மூண்டவன்பூசையோர்குடங்கையிற்புனல்கொண் டாட்டியர்ச்சனைசெ
யிற்கதிகாட்டியாள்குவனால். [௫]

அன்னதேனும்யாம்பெற்றுஞ்செல்வம்பயன்பெறவேண்டு மடைந்தி
டுஞ்சடந்திருவுமேநிலையலக்கண்டா,யின்னதன்மையவிவைசிவபூசனைக்
குதவிலிவைகளாற்பெறும்பயன்றனைக்கேட்கவேண்டுவதோ, சொன்ன
தோர்சிவபூசனைக்குதவிடாப்பொருளைச் சுடுவதேநலன்சித்திகள்கொடு
த்திடும்பூசை, தன்னையேசெயான்சனனவீணென்றிடத்தகுமாற் சாற்
றுஞ்செல்வங்கள்சிவனருளால்வருந்தானே. [௬]

அவன்றரும்பொருளவன்றனக்கேயெனவாக்கி லனையதன்மைகண்
டருங்கதியளித்திடுவானாற், றவமுன்செய்திலான்றனக்கரன் பத்திவரா
தாற் சங்கரன்பத்தியற்றவனுடன்சகவாசமுமவமையற்றதோரவமெனலா
குமப்பாவி யுதவிடும்பொருளாலறஞ்செயினலமின்றே, பவமகற்றிடவே
ண்டினோர்பவமதுபெற்ற பயன்பெறச்சிவபூசைசெய்பயன்பெறுவாரே.

பரமன்பூசைசெய்வான்றனைப்பூசைசெய்வார்கள்பாபகோடிகணீங்
கியேபரகதியடைவா, ருரமதாகியபாவவெங்கானகந்தனக்கே யுற்றகண்
டகோடாலியேயாகுவரவர்காண், டிரமதாகியமோகநீத்தேதிருவனாய்
சிவனையேதினம்பூசனைசெய்திடுகண்டாய், கரமுங்கால்களுமுடலெழுந்தி
டமுறுமிளமைக் காலஞ்செய்திடும்பூசனைப்பலன்கணக்கின்றே. [௮]

அன்னதாலுனக்கிதமுறும்பூசனைபுரிவா னதற்குநானெறிசொல்லு
கேன்கேட்டியாலணங்கே, சொன்னதோர்சிவதீர்த்தத்திலாடிவெண்ணீ
று தூளனஞ்செய்துசிரநெற்றியுரமுடனாபி, பன்னுசானுவோடிரு புயம
ணிக்கட்டுமுன்கை பகர்தருஞ்சுவல்பின்மருங்கேகளங்கன்ன, மின்னப
ல்வகையிடத்தினும்புண்டரஞ்சாத்தியெழில்கொள் கண்டிகைமாலிகை
தரித்திடல்வேண்டும். [௯]

களத்திலேயறங்காதினிற்கதிர்த்தொகைதலையிற் கட்டுமெய்பிகை கோணத்திலொன்றொழிதொகையாம். வளர்த்தகொந்தளந்தனிலொன்றுமார்பின்முந்நூலின் மன்னுகின்றமுன்னூற்றினன் மூன்றதாமாலை, இளர்த்துதோள்களிற்சோடசமணிக்கட்டிலிரண்டு கேதந்தீர்த்தமோசியின்றொகைகணூற்றெட்டா, யுளத்திலோதுறுமந்திரமாலையாக்கொண்டேயுண்மையஞ்செழுத்தோதுநிற்சிவமடைவாயே. [க0]

பூருடர்போலவேயாசமனஞ்செய்தேபுனிதன் பூசைத்தானத்திற்குசப்புல்லுப்புல்லதளேனு, மருவுமாசனத்தினில்வடக்கொடுகுணக்கேனுமதிமுகம்பெறவிருந்துமந்திரம்பதினொன்று, லருமைமேவுறுமஞ்செழுத்தெனுமனுவதனை லண்ணல்பூசனைபுரிதியாற்சிவலிங்கமதற்கே, தருபஞ்சாமிர்தமைந்திரவியங்கமழ்தருமஞ் சனம்பயந்தயிரெண்ணெய்மாக்காப்புடனெல்லி. (கக)

நெய்யதற்குவெந்நீரொடுசந்தனக்குழம்பு நின்மலோதகமிவையபிடேகங்கள்புரிந்தே, தூய்யவெண்பட்டுச்சுகந்தசந்தனம்வில்வமாலை சொல்லுகின்றதிலட்சதைபலபுட்பஞ்சாத்திச், செய்யதூபதீபங்கள்கற்பூரத்தின்தீபந் திருமுனம்பணிமாநிவேதனவகைகள், வையமெங்குமேமணக்குநெய்யொழுகுசுத்தான்னம்வாய்த்திடுங்கறிவர்க்கமபூபநற்கனிகள்.

கமழ்தருங்கிர்தகுளபரமானத்தினொடுதேங் காய்கரும்பிளநீரடைக்காம்புபானீய, மமிழ்தமாமன்னமெவ்வகையுளவவையெல்லா மத்தனார்முனம்வைத்துநைவேதனமமைத்தே, யுமைமணோகரர்க்கிரண்டுநான்கெட்டுபசார முவகையாற்செய்துவாய்குழறிடத்துதியெடுத்தே, யிமையவர்க்கிறைமுன்னர்வீழ்ந்திறைஞ்சிக்கண்ணீரோடினியதேகத்தின்வேர்வையுமாடநின்றுடி. (கங)

நாதனார்திருப்பூசனைமுடித்தன்பர்தமக்கு நயந்துபூசைநைவேதனங்கொடுத்துநீநுகர்ந்தே, யோதுறுஞ்சிவகதைவிநயப்போதுபோக்குதியாலுயர்தருங்கதிவிரும்பினோர்நாடொறுமிவைசெய், தாதியாரந்திப்பூசையில்விசேடமதாக வாற்றியேயத்தயாமபூசையுஞ்செயிலணங்கே, சோதியோடுறுசோதியாய்விடுதனிச்சயமாந் தூயதோர்பிரதோடகாலங்கள்வந்திடிலே. (க௪)

மாதுபாகனார்சிவலிங்கதரிசனஞ்செய்வோன் மன்னுகோடிதன்கிளையொடுஞ்சிவபதமடைவான், பாதகங்களைந்தொழியுமிப்பூசனைபுரியான் பாக்கியங்களற்றவனரகத்தினிற்படர்வா, ரேதுமிப்பொருள்குறுமுனியுரைத்திடவுணர்ந்தே னுவகையாவையுந்தருமிந்தப்பூசையென்றுரைப்பப், பேதைபெண்மணிவணங்கியென்குரவர்நீரடியேன் பேசலுற்றவப்பிழைபொறுப்பீரெனப்புகல்வாள். [கரு]

குரவர்நீருமதடியனேன்பிறவித்திக்கடலுட் குளித்திடாதுமதருட
கரையேற்றுவீரென்றே, பரவுகின்றதுகண்டருந்துறவுபூண்டானப்பத்தி
சேர்தருவீரசித்தரசனுமவளை,விரவுதங்கையாப்பாவித்துப்பெண்ணரசே
நீமேவுமுன்னுடைக்கணவன்றனனுமதிபெற்றே,யரனைப்பூசனைபுரிதியா
ன்முல்லைநல்லாருக் கறங்களாற்றுதல்கணவன்சொல்லன்றியாகாதால்.[ ]

தனிவனத்திலேகாங்கியாயிருக்குமென்னருகே தையனீதனிநிற்ப
துலோகசம்மதியோ, மனதுதான்பரிசுத்தமாயிருப்பினும்பார்த்த மாந்த
ருக்கிதுதான்விபரீதமாமன்றே, யெனதுநெஞ்சகமாதரைப பழக்கவே
காய்ந்த விருப்புத்தூணெனக்கிட் டிடினடுங்கிடுங்கண்டா, யனலசெறி
திடும்வாரியிலெவர்புகினைப்பா ரதனையொக்குமாலரிவையாமுயக்கமா
ரணங்கே. [கஎ]

அந்தமாயையிற்புகுந்தவன்றன்யமலோகத் தடைந் திண்ணமாமொ
ருகணத்தின்பமாதரித்தே,பாரூற்றிடுஞ்சுந்தரமாமபாதாரப் பாவைமா
ரொடுங்கூடினேன்பலகற்பகாலம, வெந்துயர்கடொகோரகவேதனையுழ
ன்றிடுவான் மேவுமாங்கதிற்பசுவினதிறைச்சிகள்ளுடனே, சிநைசவைத்
தருந்துதலெளிதாம்பிறா தாரஞ் சேர்தருனதிபாவத்தினதிகபாதகமே.[ ]

தாகத்தோடுதன்மேல்விழுந்தாடனைத்தள்ள றருபனறெனபபிறா
மனைபுல்லினென்குமபி, பாகத்தேபெய்துவானறிண்ணமப்படிவரினும்ப
யந்துபுல்கிலானேபுருடோத்தமனவான, போகத்தாபரபாதரைப்புண
ர்ந்தவன்மேலாம் புண்ணியததவனுகிலுமபஞ்சபாதகனுய்ச்,சோகத்தா
தருநிரையச்சூழ்வளியதனிற் சுழலுமபஞ்சிபோற் பறந்திடுவானவனா
ருனே. [கக]

காலவேலவிழிபன்னியமாதரைக்கலந்தக் காலவேலையிற்கணமொ
ன்றிற்கோர்கற்பகால, மாலநீயுமேகூடியதெனுங்குமபிபாகத் தவை வ
னுங்கவனன்னியனுலவந்தமகனு, மேலவார்குழலெனக்கந்தபபுந்தியின
ருமா லெனமுனின்றுநீபேசுதலும்புத்தியன்றுற், சாலநீட்டித்துநிற்பது
முறைபலக்கடித்தைதபலேயுன்றன்கணவன்பாற்சாருவையெனருவ.

உதாத்திற்பசியுற்றநற்கேபலபேச்சா லுண்டியாகுமோதாமதமே
ன்புரிகின்றுப், மதனைக்காய்ந்தவன்பூசையைத்தாமதித்தெந்த வார்த்
தைபேசினுமஙகைநலலாயவமன்றே, விதனமுற்றுவாளுளவம்போக்
குதனன்றே விபாசமுந்தடியுங்கொண்டேயமன்பின்னே,பதனமென்
றுநின்றுனிதுபோதும்வீண்பேசும பாழ்த்தபேச்சினிலாவதென்பாவை
போவென்றான். [உக]

அன்னமன்னமென்னடையினுயிரண்டதாங்காலத் தரியபூசனையா
ற்றிடவேண்டுமாலெனக்கே, யென்னையாண்டருளிறைவன்பூசனைக்கு
விக்கினமா விருந்துதாமதஞ்செய்திடாதேகிலங்கதுவே,பன்னுகின்றமா
பாக்கியமாங்கதுகண்டாப் பரமன்பூசைசெய்வார்க்குவிக்கினஞ்செய்பா

வியாக, ளின்னிலத்தினிலிடர்க்கடரனிற்கிடாதிறந்தேயியமலோகத்தி னாகினிற்குடியிருப்பாரே. [உஉ]

பரமன்பூசனைக்குறுமுபகரணங்கடமக்கேபார்த்துவிக்கினம்புரிந்தி டுகின்றவப்பாவி, காஞ்செங்காப்பன்றிகாகயோனியிற்செனித்திடுவான்க ருதுமங்கவனிருகணுங்கெட்டவாகதகனும், திரமதாம்பத்தியுடனிந்தப் படிசிவபூசை செய்யுநீரிங்குவாகதேதென்றியேபற்சொலகேன், வரமதா ஞ்சிவலிங்கமாலயஞ்சிவதீர்த்த மனனுட்பலவனங்களுமவாய்த்துள விவணே. [உங]

எங்குமிலலதோர்பூசையினுபகரணங்க ளிங்குமேவினவிவைகொடு பூசனைபுரிந்தாற்,றுங்கமாமுத்திகைகவசமாமென்றுதுணிந்தேன் சொல்லு மிவ்விலிங்கத்தினையருச்சனைபுரிந்தோரா, பங்கமாமபவக்கோடைக்குப்ப ரகதித்தனாமிப பங்தாமரன்பதநிழலசோர்துப்குவாரான்,மங்கையே ருதிபூசைவிக்கினஞ்செயேலென்றே மன்னன்பத்திசேர்வீரசித்துரைத் தனனமாதோ. [உச]

முதலாவது பூசாயோக்கியவனச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உச.

இரண்டாவது,

# வீரசித்துவிரத்தவயிராக்கியச்சருக்கம்

வேறு.

பிரமனுரைத்திடும்ந்தமொழி பயிறபதி
லுரமதாகவந்துதித்தவருட்லமுள்ளளவும்
புரமெரித்தவனிலிங்கபூசனைபுரிந்தாரேற
பரவுறுநதனுபபடைத்ததாற்பயனபடைத்தாரே. (க)

பொருந்தயாக்கினவற்கிமாமுனிவரன்புகலவா
னிருந்தவீரசித்தெனுமிறைசைவவாய்மையினன்
மருந்துபெண்மணிதன்னுடனமாற்றஞ்சாற்றுங்கா
றிருநதுமாங்கவள்சேடியர்தேடியாங்கடைந்தார். (உ)

வந்தமங்கையர்மதனுருக்கொண்டுவநதானென்
றந்தவீரசித்தநசனைக்கண்டருகடைநதா
ரிநதவேளையானுடன்மருவுதுமெனவே
சிந்தைசெய்தனர்வனைந்தனர்தெரிவைநல்லாரே. (ங)

ஒருத்திவந்துதன்கணவனென்றுவகையாலொருகை
பொருத்தமாப்பிடித்திழுத்தனண்மற்றொருபூவை

யருத்தியோமேற்றொருகையைப்பிடித்திழுத்தலைத்தாள்
வருத்தமாயொருமானனுண்மடிபிடித்திழுத்தாள். (௫)

பொறியிழுத்திடுமோறெனப்பூவையர்கூடி
நெறியிழைத்திடவிழுந்திடும்போதினுநேசஞ்
சிறிதுமுற்றிலன்செறுத்திலன்சிவன்செயலென்றே
யுறுதிபெற்றிடுமெனத்தொடும்வீரசித்துறைந்தான். (௬)

அதிலொருத்திதன்முலைபுயத்தழுந்திடவணைத்தே
மதிமுகத்தொடுமுகமவைத்துமுயங்கினள்வாங்காள்
புதியவாயிதழ்பருகினள்புட்குரல்கொண்டாள்
கதிவிரும்பினோனதனிலுங்கலங்கிலன்மனமே. (௭)

ஒருத்தியைத்தள்ளியொருத்திவந்தணைத்தணைத்துவப்பாள்
வருத்தந்தீர்க்கிடுரெனவந்துமடியின்மேலேறிப்
பொருத்தமாங்குறிபொருத்துவள்பூரித்தல்காணு
ளருத்திதீர்ந்தனளகன்றனளொருத்தியாங்கன்றே. (௮)

நமைமயக்கிடவந்தவனிவனெனநாடித்
தமைமறந்தனராயிரமடந்தையர்சார்ந்தா
ரமைவுறச்செய்தசாலங்கள்வீரசித்தறிந்தா
னிமயநாயகிபங்கன்செயாடலென்றிருந்தான். (௯)

என்னகன்மமிப்படிவந்துவளைந்ததிங்கெனக்கே
முன்னர்யான்சிவன்றனக்கபராதமென்முயன்றேன்
மன்னுநன்மனைவிடுத்தூறுதுறவியாய்வந்தேனை
றன்னையிப்படிமயக்குதல்சிவன்செயறானே. (௧௦)

அரிவைமார்கடம்முயக்கஞ்செந்தீக்கடலன்றோ
பிரியமாதவர்தொழுமண்ணலேபிழையடியேன்
புரியுந்தீவினையென்னையித்தினம்விடிபோதிற்
றெரியுஞ்சைவரல்லார்முகந்தெரிசித்துளேனே. (௧௦)

காலைபூதியுங்கண்டியுந்தருக்ககிலேனோ
சாலவில்வத்தின்றளிரருச்சனைசெய்தேயிலிங்கத்
தேலவேயபிடேகநைவேத்தியமியற்றிச்
சீலமாம்பத்திசெய்துபூசித்திலேன்கொல்லோ. (௧௧)

இறைவன்பூசைக்குவிக்கினமாதரென்றிகழ்ந்தே
மறைவனந்தனிலுறையெனைப்பினும்வளைந்தனரா
லறையுமிங்கிவராலெனக்காவதொன்றிலையா
லுறையுமிங்கிவருடலுறனெருப்பையொத்தனவே. (௧௨)

பரமனேசிவனேயெனைப்பரீட்சிக்கும்பொருட்டோ
வரிவையரிவர்தம்மையுண்டாக்கிவிட்டீரா

லெரியுமென்னுடற்கட்டைக்கேனிவ்வழகமைத்தீ
ருரியவீங்கிதுபிறரிடஞ்செலவுஞற்றீரோ. (கங)

உம்மைநம்பினேற்குறுந்துன்பமீங்கிவையொழிப்பீர்
செம்மையற்றவரிவரும்பூசைக்கிடர்செய்வார்
கொம்மைமாதராரிவர்க்குநாண்குலைந்ததுகொல்லோ
வெம்மையாள்சிவனருச்சனைக்கிடருற்றதின்றே. (கச)

பரமன்பூசனைப்பலனளவில்லதாவிதற்கே
விரவும்விக்கினமெங்ஙனமிருந்துமேவியதோ
பெருமைப்புண்ணியத்துறுகண்வந்துறுமெனப்பெரியோர்
திருவுளம்புரிசொற்படிசேர்ந்ததாலின்றே. (கரு)

எங்கணேகுவேனிவ்விடர்தீர்க்குமாறெவனே
சங்கரன்செயல்யாவரேதவிர்த்திடற்பாலா
ரங்கமிற்றிடுநெடுக்கசாதனவிபத்திதுவா
மங்கையர்ப்புணர்ப்பொழித்தன்றேயிவ்வனம்வந்தேன். (கசு)

இங்குவந்தெனைத்தொடர்ந்ததாலெனக்கவல்வுற்றேனன்
சங்கைதீர்தருமுறுதியாற்குற்றிபோற்சார்ந்த
சிங்கமன்னவன்றனைப்பின்னுந்தெரிவையர்தொடர்ந்தே
யங்கம்யாவையுந்தெரிந்திடக்கலைவிடுத்தடைந்தார். (கஎ)

புழுகுபூனைபோற்புகுந்தொற்றியொற்றியேறகட்டித்
தழுவுகின்றனர்தோளினின்மார்பிற்றுண்டவங்கள்
பழுதிலாதிதம்வரவரப்பாபெட்டனரா
விழுதுநெய்யெனவுருகினரென்செய்வாரவரே. (கஅ)

இன்னவாறவர்செய்யவுமெரிபுகுபதங்க
மன்னவாமெனமதித்திருந்தானிறையவன்றன்
பொன்னனீரிவன்புஞ்சகன்புறம்புகுவோமென்
றுன்னியாலயம்விடுத்துடனெழுந்துபோயினரே. (ககூ)

இந்தவாறுபெண்மணிகண்டேயதிசயமெய்தா
வந்தமாதர்களித்தனைபேர்கலைமாற்றி
முந்தமேல்விழுந்திடவுஞ்சற்றேனுமேமுயங்கான்
புந்தியாலிவனலியனோவொழிவுபூண்டனனோ. (உய)

உலவுநாய்க்குறிகாணினம்புருடர்நெஞ்சுவப்பார்
குலவுமிங்கிவனிளமையுமழகுமேகொண்டோ
னிலகரம்பையர்போன்மின்னாரித்தனைபேர்செய்
கலவியிற்கலங்கிலனிவன்போலுங்காண்பரிதே. [உக]

உலகிலுத்தமகுணத்துளானொருவனிங்குற்று
னிலகுமிங்கிவன்றரிசனஞ்சேர்ந்துய்ந்தேன்யானே.

புலமைபோன் சொலிற்புத்திரனையெனக்கொழிந்தென்றே
நிலவுபோன் றொளிர்முகத்தினணிதனைந் துமின்றனளே. (௨௨)

அந்தவேளையிற்சுந்தரநிதிதனையளித்த
தந்தைதாயருங்கிளைஞருமனைவியர்தாமும்
பந்தமுற்றுளரதகசதுரகபதாதி
தந்திரத்தருமந்திரத்தரும்வந்துசார்ந்தார். (௨௩)

சார்ந்தகோடிவெந்தானைபோரங்கர்க்கொருசார்
சேர்ந்தபூவனமாலயந்திகழ்வதைக்கண்டார்
நேர்ந்தவாங்கதிற்சவுந்தரநிதிசிவநெறியே
கூர்ந்தவீரசித்துறைந்திடுவானெனக்கொண்டார். (௨௪)

அவன்விரத்தனிம்மதன்படையிநந்தகாவடையான்
சிவன்விருப்புறுமாலயமிருந்ததாற்சேர்வா
னிவணிருந்திடப்பெறினமதிட்டமாமென்றே
கவலுநெஞ்சினர்கடிபொழிலதனில்வந்தடைந்தார். (௨௫)

னென்னனம்முடைமாளிகைநீத்தகன்றனனு
வின்னந்தூரஞ்சென்றிருப்பசந்நேககாளிலதா
லன்னதேயிவணுலைபமுற்றநாலநலான்
மன்னுவானெனவிச்சயித்தருகினில்வந்தார். [௨௬]

வந்துளோரவண்மாதர்தங்கூட்டத்தைக்கண்டா
நந்தங்காதலனிங்கிரானயன்மடநல்லார்
முந்துறக்கண்டானைக்குறுன்முகங்கவிழ்ந்துறுவான்
புந்திகூர்நல்லபுண்ணியவானவனன்றே. (௨௭)

தனயர்தேவியர்தம்மையுமிச்சைபாரைக்கான்
கனதைசேர்தருசெல்வமுங்கடிந்தான்பூசை
யனகனிச்சித்துச்சிவத்தியானஞ்செய்வானயலார்
முனமுறில்விருத்தவத்தைமின்னுரையுமுன்னான். (௨௮)

மரங்கடோறுமாமயிலிருந்தாலெனப்போலச்
சரங்கள்போன்றகண்ணார்வனஞ்சார்ந்தமைகண்டா
ரிரங்குநூபுரத்தார்களிப்போதுவந்தவராந்
திரங்கொளாலயங்காலையிற்சேர்வனஞ்சேர்வேம். (௨௯)

வைபரிவர்புகாரகனிகள்

சோலையிற்புகுந்திச்சையாற்றுருவுகின்றான்
மாலையோதியராயமுநிறைந்தனமைந்தன்
காலையிற்சிவபூசைசெய்கருத்தனுங்குறைவான். (௩௰)

பண்ணைசேர்தருமிடத்திலும்படர்குவதன்றே
பெண்ணினல்லவரிடத்தினிற்பெண்கள்சேர்ந்திடலாகு

பேசுநித்தியவிரதரிங்கிவர்பிரதோடப்
பூசைசெய்தபின்சிவனடியாரொடும்புசிப்பா
ராசையாயருளுதயமுதனிசியளவாக்
காசிநாதன்றன்பூசையிற்காலம்போக்குவரால். [௪0]

இந்தமைந்தர்களிடத்தினுமிச்சையின்றிவர்க்கே
தந்தமைந்தர்தாமேகதேசந்தனிற்சார
வந்துளாரெனிற்சைவராகுகவென்றுமதிப்பா
ரந்தமாங்கண்டிபூதியுமணியுமாசையினர். [௪௧]

சந்தனங்கலனுதிகளரசியற்றருமம்
புநதிவைத்திடாருட்டிணகாலம்புத்திரர்க்கே
கந்தம்பூசிமுன்விடிலதைப்புனல்கொடுகழுவி
யெந்தையார்திருநீறுமெய்யெங்கும்பூசிடுவார். [௪௨]

புதல்வியர்க்குமெம்புத்திரர்தமக்கும்பொன்மணிப்பூ
ணதிகமாவலங்கரித்துவிட்டாலவையெல்லா
மிதமிலாவிவற்றுவதொன்றிலையெனக்கழித்தே
கதிகொணீறுகண்டிகைவடத்தாலலங்கரிப்பார். [௪௩]

நெருனலிங்கிவர்தீர்த்தயாத்திரைசெயநினைத்தார்
கருணையங்கடல்கணபதிகுமரனந்தீச
னரிவைபாகனங்கவர்தமக்காலயமமைத்தார்
பெரிதுபூவனந்தடாகங்கள்பெருகச்செய்தாரால். [௪௪]

குடையிடக்கயமாபரணுதிகள்கொடுத்தார்
சடையவன்றிருப்பெயரலாலொருபெயர்சாற்றார்
கடைகொள்வேல்விழிகட்டின்மெத்தையிற்றுயில்கருதார்
விடையவன்றிருநீற்றின்மெய்ச்சயனமேவிருப்பார். [௪௫]

அரிவையேயெங்கண்மணிப்பணியதனிடையிடையே
பரியுங்கண்மணிசேர்த்தலாற்பரிக்கவொண்ணுதாற்
பிரியமாவிவர்பூசைசெய்பெருகுமண்டபத்தி
லுரியபாடலுமாடலுமுவந்துசெய்வோமால். [௪௬]

இளங்குமாரர்களிவர்களுமிவரருளதனுல்
வளங்கொளுஞ்சிவபூசனைமகிழ்ந்துசெய்வார
லளந்திடாதவஞ்செழுத்துருவேற்றுமன்பர்களோ
டுளந்தயாவொடுகூடிவீற்றிருப்பரொண்டொடியே. [௪௭]

யாங்கள்காந்திருவர்க்கரசின்றமெல்லியலா
ரோங்கும்வேலிந்தவரசர்தாஞ்சுயம்வீரத்துற்றே
பாங்கின்வேட்டனர்பரமனைப்பரனடியாரை
யாங்குப்பூசனைபுரிதராபதியிவராமால். [௪௮]

இவரைக்காண்பதற்காகவேயிமையவர்சித்தர்
தவர்கள்சூழ்திருவத்திஞேரடிக்கடிசார்வார்
துவரிதழ்க்குயிலேயெனச்சுந்தரப்பதிதன்
ஞவகைத்தேவியர்பெண்மணிக்குரைத்தனரன்றே. [சக]

**இரண்டாவது விரசித்து விரத்தவயிராக்கியச் சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-௭௩.



மூன்றாவது,

# மறலியுத்தாச்சருக்கம்.



வேறு.

சத்திகூர்விழிகளித்திட மணிப்பணிநிமல சாக்கிரங்கொள்வியாக்கிரங்களிக்கநின்றுடும், பத்திகூர்தருநவமணிப்பரிபுரப்பதத்திற்பத்திகூர்தரப்பாவியேன்பாவியேற்கருள்வாய், துத்தியேறியபன்னகந்தரித்தவேணியனேசோதியேறியவின்னகந்தரித்தபாணியனே, யத்தியீருரிபோத்திடுமணிகொள்காத்திரனேயாடல்வேடனைப்பொடித்தருள்பாலநேத்திரனே.

அண்ணல்பாக்கினவற்கிமாமுனிவரான்புகல்வானரசன்வீரசித்தருந்தவன்சரித்திரமனைத்தும்,வண்ணவார்குழலவன்றிருமனைவியர்பகர்ந்தவார்த்தைகேட்டனள்பெண்மணிபதிசயித்துரைப்பாள், வெண்ணிலாநகையீருமைச்சுயம்வரந் தன்னில்வேந்தன்வேட்டவாறென்கொல்காந்திருவர்தநகரந்; தண்ணுலாமிமயத்தருஞ்சாரலி லன்றேசார்ந்தவாறெந்தப்புண்ணியத்தவைசொலுமெனவே. [உ]

அன்னமங்கையர்தங்களிலொருத்திவலைமைசேரறிவுளாள்பதுமாவதியாமவளுரைப்பாண், முன்னவன்சிவனன்பராமிவர்மின்னேயிறந்தமுற்பிறப்பினிலிருபிறப்பாளர்நல்குரவா, லுன்னருங்கோடிந்தானங்கள்வாங்கியுமுண்ணுவொருவன்வீட்டினிலுண்டிவேட்டருந்தியும்வருந்திப், பன்னரும்பலிக்குழன்றுமேயழன்றிடுங்கொடும்பாதகஞ்செய்து பற்பகல்போக்கினுரன்றே. [௩]

இனையவாறுழன்றேமனைவருமிவர்வழியிலிறைவரம்பலவாணர்தங்கோயிலொன்றுளதா, லனையவாலயந்தனிற்சென்றுதரிசனம்புரிவாரந்திவேணியர்சந்நிதிச்சிறப்பெலாம்பார்ப்பார்,நனைகொள்கொன்றையார் தூபதீபங்கணாடிநன்றுநன்றிதுவென்றுதஞ்சிந்தனைநயப்பார், மனையில்வந்தனமருந்துறும்போதிலுமதனைமனத்திருந்துவரிப்படிநாள் செலமாண்டார். [சு]

தருமன்றூதர்கொண்டேகினரவன்முனம்விடுத்தார்சார்ந்தவிங்கி வன்றான்புரிபாவபுண்ணியங்க, ளொருமையாப்புகல்வீரெனச்சித்திரகு த்தரோதுவாரிவன்புரிபவமுரைக்கவொண்ணாதா, லருமைசேர்தரும்ப னவர்தங்குலத்தினிலுதித்தானாற்றுகின்றநற்கருமங்ளொன்றையு மறியா ன், பருவமாரமலான்மனைபாணலநுகர்ந்தான்பாபஞ்செய்திடக்கூசிலா ன்பரபொருள்கவர்வான். [௫]

இனையதீவினையெண்ணிலபுரிந்திடுமிவன்றானிறந்திடற்கொருமதியெ னவொருமதிசெய்தா, னனகராநடராசர்தங்கோயிலையடைந்தானந்திக் காப்பினிற்சந்தித்தான்பூதியுமணிந்தான், பனகபூடணர்பூசனையின்சிறப் பினைத்தினமும்பார்த்துவந்தனனிறந்தனனிவனெனப்பகர்ந்தார்,மனமு வந்தனர்பூசைகண்டானெனக்கேட்டமறலிதான்பயந்தெழுந்தடிவணங் கினனன்றே. [௬]

தன்றனாசனந்தனக்கிணையாகியசிங்காசனத்தில்வைத்தனன்மனந் தினாற்பூசைசெய்துரைப்பா, னன்றுசெய்தனைநான்மறையோய்சிவபெ ருமானயந்திடுந்திருவந்திக்காப்பினிற்றரிசனந்தான்,றுன்றுமோவந்திவே ளையிற்சேவைசெய்திடுவர்தூயரங்கவர்தேவரெல்லாந்தொழுநலத்தோர், வென்றிசேர்பவரரும்பெரும்பாவங்களீங்கி மெய்வருந்துறாமெய்க்கதி பெற்றிடுவாரே. [௭]

அந்திவேளையிற்பரமர்சந்நிதியிடபேசனாரியபீசமோர்கையினிலனைத் தொருகையா, ' னுந்துகோட்டினிற்கோட்டிடைவெளியதனாலு மைமணாளர்தமிலிங்கத்லைதயுற்றுநோக்கிடுவோர், முந்துநற்பலனனந்த னன்மொழிந்திடலாமோமுன்னைத்தீவினையொழிந்துபர் முத்திவீடடை வார், வந்தோர்பிரதோடவேளையிலவைசெய்வோன்மகிமைவேதமுஞ் சொலவரிதாற்சிவனவனை, [௮]

மபல்புரிந்திடுமொளையயால்வருங்குடிவாழ்க்கைவலைக்குண்மூடர்தா மண்ணலார்மகிழ்பிரதோடப்,பயனுமங்கவர்மகிமையுமுணர்கிலாருணர் ந்தோர்பாசெலாந்தனிபுரந்திடும்பாக்கியம்பெறுவார்,நயமுறுங்குலமானி டப்பிறப்பரிததனிஞன்மறைக்குலத்துதித்திடலரிததிலுதித்தோ,ரியை யும்வேதசாத்திரம்பெறலரிதவையிசைந்தோரீசன் பூசனைப்பத்தியும்பெ ரின்முத்தரவரே. [௯]

பூதிகண்டிகைபுனைந்தருட்கயிலைநாயகனைப்புத்திபூருவமாவருச்ச னைசெயலரிதா, மாதிபூசனைபுரிந்தவன்சேவடியிதபக்தழுத்துவோனடி க்கனந்தமாம்வணக்கம்யான்புரிவே, னீதிசேர்தருங்காசிவீரேசுரன்றிரு த்தாளினைக்குபோற்றுவார்கின்மலவான்களாமவர்க, ளோதலாற்சிவக தைகேட்டலாகுவாரவரையுதவுறப் பெற்றதாய்தந்தைபெருமையாருரை ப்பார். [௧0]

மங்கைபாகனைப்பூசிப்பானிகத்தின்பம்வேண்டின்வையம்யாவையும்புர ந்துநாந்திருவர்தங்குலத்து, நங்கைமாகடங்கேள்வனுமாகுவனென்றே

நாட்டுக்கெந்தன், மிசைநாட்டரசவையினிலிருந்தோ, ரங்கவன்றிருத்தாண் மலர்வணங்கிப் புகன்றவம்மலனார்கதையமுதமாம் வாரியினனைந்தே, யிங்குபாங்கனெல்லோர்களும் புனிதமாயினமா லிந்தவேதியன்றனக்கிலைய புரிவதேதென்பார். [கக]

மறைக்குலத்தினில்வந்துமேயிவன்சவுசாதிமன்னுகின்றிலன்மிருதி நூல்வழியென்னசெய்வா, னிறைக்குந்தேவர்க்குமுரியவாமக்கினிட் டோமமுபாகமாதிகளெங்ஙனஞ்செய்திடப்பாலா, னுறைக்கும்புத்திபாபத் திலேயிருந்துஞான்பத்தியொன்றுமின்றியேபோகையில் வழியிடைக்க ண்டே, பிறைக்கொளுஞ்சடையான்சிவாலயத்தினிற்புகுந்துபெருகும் வேடிக்கைபார்த்ததல்லாற்பிறிதிலையால். [கஉ]

சிந்தைவைத்துநாஞ்செய்திடிற்செல்வமுங்கதியுஞ்சேரலாமென்றுது ணிந்திவன்செய்ததுமிலைபா, லந்தணாளனிங்கிவன்சிவன்சேவடிக்கடியா ரடிகள்பூசனைபுரிந்துசேவித்துளானல்ல, னிந்தநீர்மையான்றன்னைநீராச னத்திருத்தியிறைவனையெனப்பூசனைபுரிந்தவாறென்னே, முந்துமற்புத மற்புதமாகுமாலீதுமுன்னங்கண்டிலோம்யாமெனமொழிந்தனரன்றே.

என்றுசொற்றலுமந்தகன்கேட்டனனிசைப்பானேழைகாள்சிவதரு மத்தினுண்மையையுணரீர், புன்றொழிலுடைநாயினுங்கடையர்யாரென் னிற்புகலருஞ்சிவபத்தியில்லாரெவரவரா, மன்றுளாடுவார்புண்ணியத்தி றமொன்றுந்தேராமந்திபோலவேநீவிர்கள்பின்மிவ்வுரைவகுத்தீ, ரொன்று மவ்வுதிகமிருநிகன்மங்களாலாவதொன்றுண்டோவுலகியலுணர்வீருண ரீரே. [கச]

எந்தையார்பிரதோடத்திற்பூசனைகொள்ளுமிலிங்கநாதன்றன்றரிசன மொருகணமேனும், புந்திவைத்ததன்பாதியேனுங்கண்டுதொழுவோர்பு ண்ணியந்தனக்களவையார்புகலுவரன்றே, யுந்துறும்பரசெறிதல்போன் மொழிதல்செய்வீரென்னுடன்புகன்றிடவெங்குவந்தீரடெடுவீர், வெந் தழற்செப்பிணுணியைச்செருகினீர்செவியில் வெளியிற்போமெனமிகச் சினந்தேயுரைவிடுத்தான். (கரு)

அரியாரற்பிரதோடபூசையுந்தரிசனமுமாற்றுவானவன்சன்மசா பல்லியனன்றோ, பெரியதோர்முத்திமாபடர்ந்தையுமவன்றனக்கேயுரிய மாகியேகைவசமாகுவளன்றே, யுரியதாகியமிருதிநூற்கன்மங்கள்யாவுமு ற்றதோர்பிரதோடத்தின்பலன்றனக்கிணையோ, புரியுமற்றுளதருமங்கள் பொருட்செலவல்லாற்புனிதன்பூசைபோற்கதிதரற்கவையுமோ புகல் வீர். (கசு)

நரகசேடத்தராகியபாவிகடமக்கோதன்பூசனைதரிசனங்கிடைக் கவாராவாற், பரவிபேகதிபெறுவதற்குயிர்க்குபகாரப்பான்மையாற்சிவ லிங்கமுண்டாக்கினான்பரமன், கருதியச்சிவலிங்கபூசனைபுரியாமற்கயரில் வீழ்வதுபோனரகெய்துவாரந்தோ, வானனுதாட்சகன்றிருமாலயன்முத லோரருச்சனைபுரிபாதனென்றுயிரறிந்திலவே. (கஎ)

மலருமீனான்முதற்றேவர்க்குந்தந்தையாஞ்சிவனைமனதில்வைத்தில ராலவன்றருமழுமதியார், பலனறிந்தடிபணிகிலராயினுநிந்தைபண்ணும் பாதகரோவருச்சனைப்பயன்றேர்வா, ருலகிலிங்கிவர்பன்றிநாய்கழுதை கீடாதியுற்றசன்மங்கள்பெற்றெழுபாநரகுறுவார், சலமுடன்சிலவறுகு ங்கொண்டேபரன்பூசைதனைச்செய்தேகதிபெற்றிலார்மூடர்களாமே.

கூவிளந்தளிர்பழந்துதிர்சருகதன்றாள்கள்குறுகுகின்றதுகொண்டே ரனருச்சனைசெய்யின்,மேவுகின்றசற்கதியெனுந்திருமடந்தையேமி கவுமேயெளிதாமணம்புணர்ந்திடுவானு, லேவனுகிலும்வழிநடந்தேகு வோனேனுமிடருற்றுயினுங்கோயில்சென்றேசிவலிங்க, தேவநாயகன்ற னைப்பிரதோடவேளையினிற் றெரிசனஞ்செய்வோன்சிவபதம்சேர்தல்ச த்தியமே. (கசு)

வருத்தமாத்தவஞ்செய்துழவாமலேகதியையன்னுதற்குநீருளமலர்ப த்திரமுளவாற்,பொருத்தமாமறுகுளமிருத்திகைலிங்கமாதிபுவியிலுள்ள வாயிருந்துமேயருச்சனைதனிலே, கருத்திலாதுநாள்வீண்பொழுதாநரகு றுவார்கருத்தனற்பிரதோடபூசனைசெய்வோன்பாதத், தருத்திபெற்று ளோனவன்பதஞ்சேர்குவனண்ணலடியரோடுறவாயினர்க்கரிதலயாவும்.

இறைபிலிங்கபூசனையிலாவதெனன்னென்றேயிகழ்ச்சியாவொருக ணமுனினுமவன்குலத்தோ, டுறையும்வெந்நரகத்தினிலுற்றிடுவானு லுண்மைசேர்தருதிரிவிதகரணங்களோடும், பிறையணிந்தவன்பூசனைபு ரிபவனடித்தூழ்பேசுநம்முடிச்சேர்த்துதுமெனமனம்வைத்தே, யறையு ம்வேதியன் மாலிந்திராதிதேவர்களுமாசையுற்றுவீற்றிருப்பராலனுதின மன்றே. (உக)

சுகந்தமாகுங்கத்தூரியின்வாசனைதனையேசுணங்கன்றானறியாதது போலவேபாவத்,தகந்தைசேர்தருசிவனடியார்தமதருமையறிவரோவந் தோதுட்டராமாந்தர்கள்கருணை, யுகந்தவாரியாம்பரமனையருச்சனைபுரி ந்தேயுத்தமம்பெறுநித்தியமுத்தராகாம, லிகந்தபாவங்கள்புரிந்தொழிவு ற்றிடாநரகத்தெய்தியேகிடந்தழுவராலிங்கிவர்கண்டீர். (உஉ)

நெற்றியிற்றிருநீறணிந்தேகளந்தன்னினிறையுறுத்திரன்கண்மணிமா லிகைபுனைந்தே, யுற்றசென்னியால்வணங்கிக்கையாற்பசும்பொன்னி னொளிகொள்கூவிளந்தளிரினலருச்சனைபுரிந்தே, பெற்றமூர்ந்தவன்ற னைப்பிரதோடமாங்காலம்பெரிதுறுந்தினந்தன்னிலேபூசனைபுரிந்தோ,ரி ற்றுருப்பரமானந்தவீட்டிலின்புறுவா ரெனறுதென்றிசையிறைமகிழ்ந் துரைத்தனனன்றே. (உங)

**மூன்ருவது மறையுத்தரச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-கூசு.



# வீரசித்து உற்பத்திச்சருக்கம்

கள்ளமதுற்றிடுசிந்தையொழிந்தேகாதலுடன்கசிவுற்றிருபோது,
முள்ளமதிற்சிவனேபரமென்னுமுண்மையுடன்கடிமாமலர் கொண்டே,
பிள்ளைமதிச்சடையான்விடையானம்பிகைமருவும் முடையான்றிசையு
டையான், வள்ளல்பதத்தைவழுத்துதல்புரிவோர்வானவருக்கிறையாகு
வரன்றே [க]

இயாக்கினவற்கிசொல்வானியமன்றனிறைசிவனின்புறுசரிதமியம்பும்,
வாக்கியறன்னைமதித்தவனருகேமன்னியிருந்தவர்தாம்பயமுற்றே, நோக்
கிமகிழ்ந்துறுமறலியைமறைதேர்நூலணிமார்பனையும்பணிவுற்றார், பாக்
கியம்வந்தெனச்சமன்மறையோன்பாதமலர்பரிபூசைபுரிந்தான். [உ]

பூசைபுரிந்துவிமானமதேற்றிப்புரந்தரலோகமதிற்புகவுய்த்தா [டே
ஞசைகொளிந்திரனுங்கதுகண்டேயரிதுறும்வரிசைகள்செய்வதுகொண்
தேசுறுபிரமனதுலகிலடைந்தான்பிறன்முனிவர்களுடனயனுபசார
மாசிலபுரிதரவேவெகுகாலமறையவனவணிடைமன்னியிருந்தான். [௩]

இருந்தபின்பெருந்திருவெய்துறுமாசனிசைபெறுபிரமபூவிலனுறை
நல்லாள், கருந்தடங்கணியவளுதரமதிற்றன்கருவெனவந்தனன்ஞான
மொடுற்றன், றிருந்திடுமருந்தவம்புரிந்திடுவாமதேவநன்முனியெனச்
சிவனைநினைந்தே,பொருந்திடுயோனியினெறியதுவாகப்போகிலனென்
றுறுபுந்திபுரிந்தான். [௪]

புரிந்துறுசிந்தையறிந்தனர்வானோர்பூபதிபிரமபூவின்மனைபுக்கார்,வ
ருந்துறுமவன்மனையவளருகுற்றார்வயினுறைமைந்தனை நோக்கியுரைப்
பா,ரருந்தவமாமறையோயயனூர்தாமாதியிலேயமைவுற்றதுவன்றோ, தி
ருந்துறும்யோனியின்வழியதுவாகச்சேர்தரல்யாரதுசெய்யகிலாதார். [ ]

செய்யதவம்புரிதந்தையர்தாயர்சிந்தைகலங்குதல்செய்யவுமாமோ,
மையலகன்றிடுசித்தரியக்கர்மாதவர்வானவரேமுதல்யாருந், தையலர்
யோனியின்வழியதுவாகச்சார்ந்தவரேசிவனொருவனுமல்லான், மெய்யு
டையுயிர்களெல்லாமனைகருவைவிட்டெவ்விடத்துமுதிப்பதுமுண்டோ.

உள்ளமதுற்றிடும்ஞானியர்யோகருளார்களுமவ்வழியேயுதித்தாராற்
றள்ளருமன்பதையாவையுமன்னசகலருக்குமிதுசம்மதிகண்டீ
ரெள்ளருநுமதுபிறப்பிதுவல்லாலினியொருசனனமெடுப்பது மின்றாற்
றெள்ளியமுற்சனனத்தினிலரனைத்திகழ்பிரதோடத்தெரிசனமுற்றீர்.

தெரிசனமுறுபலனதுதனிலன்றேதிடமுறுஞானச்சிந்தைபடைத்தீ
ரரிதொழுபரனதுதிருவருளுற்றீரமரரெமக்கிதடுத்துளதன்றே
பரிவுறுபிரதோடத்துறுபூசைபண்ணுறுகின்றவர்கண்ணெதிருறவே
கரியுரியுடையவன்மிகமகிழ்வுற்றேகணங்களோடாடல்புரிந்திடுவானல்

ஆடல்புரிந்திடுவோன்பிரதோடத்தரிதுறுதெரிசனதருமபடைந்தாற்
றேடியயாவுமளித்திடன்மெய்யேசிந்தையிலையமுளோனிதையுணரா
னீமெதன்பயனீர்பெறல்கண்டேநிச்சயமுற்றனமவ்விரதத்தை
நாடுமெருச்சனையின்பயனுணரீர்நாளுமரும்பவமேமுனஞ்செய்தீர். [௯]

உற்றகொடுந்தானங்கவர்வுற்றிருலகினிலீனர்களனநுகர்வுற்றீர்
சொற்றகஞறுநுகர்தோளைகொபாடுற்றீர்சுதைகளையவள்வயினிற்றருகுற்றீர்
முற்றருபாவமனைவக்களவுண்டோமுன்னுறுநல்வினையொன்றதனுலே
புற்றரவாபரணன்பிரதோடப்பூசனைநாடுநல்புந்திசெய்தீரால். [௧௦]

செய்திடுநல்வினையால்வெருகோடிதிநரகத்துறுதீமைதவிர்ந்தி
ருப்தருசிவபதபூசனைசெய்பானுறுகிளையொடுநரகுழல்வுறுவானுன்
மெய்தருசத்தியஞானமதுற்றீர்மிக்கதோர்சனனமுமேவுதிரன்றே
கைவருமிப்பலனலரசாளுங்காவலர்செல்வமுறப்பெறுவீரால். [௧௧]

பெற்றதோர்செல்வமதாலரனர்தம்பெரிதுறுபூசனைதனைமறவீர்நீர்
பற்றுறுபூசனைபலதிரவியமும்பரிவுடனேகொடுபுரிதருகிற்பீர்
மற்றதிலேயவமதிபுரிவார்கண்மன்னியயோனிகடோறுமுழல்வாராற்
சொற்றருசந்திரசூரியரளவுஞ்செல்லருநரகிற்சுழல்வுறுவாரே. [௧௨]

வீதலுறுதானர்பணிசெயவேமேவுதிர்யோனியின்வழியெனவிமை
யோர்; ரோதியவாறதுணர்ந்தனன்மறையோனுண்மையெனக்கொடுவெந்
தனனவர்தாட், போதுபணிந்துவிடுத்திதயத்தாற்பூசைபுரிந்தனனென்ப
தொடொன்று, மாதருமன்னைதனுநரம்வதிந்தேவந்தனன்யோனியின்
வழிதனிலன்றே. [௧௩]

அன்றுநல்லோரைகணலமுறவேயன்னைபிதாவுமகத்தின்மகிழ்ந்
தார், நன்றுளமைந்தனிலத்திலுறுங்காணுதசிவாமகதேவவெனுஞ்சொற்,
றுன்றுருமுற்றதெனச்சொலக்கேட்டேதோகையரங்குளர் யாரும்வெரு
ண்டா, ரின்றிதுபுத்திரனன்றொருபூத மென்றனரன்னையுமேங்கினளா
மால். (௧௪)

ஏங்கினர்பாங்கினராச்சரியத்தாலிறையவனுக்கிதுரைக்குதுமென்றே
நீங்கினர்சோபனமென்றரசன்பானின்றுபுகன்றிடுவோர்நிகரில்லா
யோங்குறுமுன்மகனுக்கிணையின்றுலுருவிலியுருவுகொடுற்றனனுமா
லாங்கவன்மெய்யொளியாலறையிருள்போயகன்று விளக்கொளியும்மட
ங்கிற்றே. (௧௫)

ஒளிபெருமுன்றிருமைந்தனிலத்திலுற்றவுடன்சிவனேமகதேவா
வளியெனவேயிடிபோலவுரைத்தானையவிதையமிதாயின்தாமாற்
களிபெறுதனையர்களிப்படியுண்டோகாதலிதானுமருண்டனளென்றூர்
தெளிதருசந்திவந்ததெனுஞ்சொற்செவிபுகலரசுசெழித்துளனன்றே.

உள்ளமுவந்துவகைக்கடலாழ்ந்தானுற்றிடுமெப்பொழுதத்திசை கற்
ருன், வள்ளலுவந்தியொழுமுனிவந்தான்வந்தமுனிக்கெதிர்சென்றடி

தாழ்ந்தே, தள்ளருநல் லுபசாரமியற்றுந் தாரரசன்றனையன்செயல்சொலவே, தெள்ளிசைநாரதமாமுனிவனவிச்சிரணைதமகிழ்ந்திவைசெப்பிடுகின்றான். (௧௭)

செப்பமிகுந்திமைந்தகின்மைந்தன்செய்திபயிந்திலைபானதிவேறு
லிப்புதல்வன்றனையேபெறமேனுளென்னவருந்தவமன்னபுரிந்தா
பொப்பிலரன்பிரதோடமதன்கண்ணுண்மையிலிங்கந்தரிசனமுற்ற
வப்பயனுனின்புதல்வனெனப்பாரதனிலுதித்தானந்தணனன்றே. (௧௮)

அந்தமிலாதோன்மகிழ்பிரதோடமதனிலுறும்பலனும்மிகுசெல்வமுஞ், சுந்தரமும்பெறுவாரவையின்றிச்சொல்லரு நற்கதியும்பெறுவாரே, சந்திரமவுலிதனைப்பிரதோடந்தன்னிலருச்சனைதரிசனமுறவே, வந்திடுவோர்கொணரும் பொருள்கண்டே யங்கனையோடுமெகிழ்ந்துரைசெய்வான். (௧௯)

கூவிளநற்றளிர்கொடுவருகின்றார்குளிர்தருதாமரைநெய்தல்கண் முல்லை,மேவுகுருக்கத்தியின்மலர்கொணர்வார்மிக்கதோர்தாம்பூலங்கனி வகைக, ளாவலுடன்றருகின்றனரபிடே கத்துறுதிரவியமதுகொடுவருவார்,நாவினினித்திடுகிர்தருளபாயசநல்லநிவேதனவகைகொணர்வாரால்.

வகைவகையாவவரவர்கொடுவந்தேமங்கனையேபிரதோடமதன்கண், புகையொளிர்தூபமோடேயுனைநெய்யும்பூசனைசெய்பவர்புண்ணியரிகரோ, குகையிலருந்தவநாவறளத்தான்கூறிடும்வேதமியாகபலன்க, டகைபெறுபொருளழிவுற்றிடுதானந்தமதுடல்வாட்டுவதனிவிரதமுமே.

விரதயாம்பிரதோடமதொருநாண்மிக்கதோர்பூசனைதரிசனமுற்றார்
சரதமகாமிகுபாதகமோடரிய தவசினிலுற்றபலன்கதிபெறுவார்
பரதநடித்திடுநம்பிரதோடப்பலனடைவுற்றவனேபரிசுத்தன்
வரதனவன்றனையின்றவர்தாமேவாய்த்திடுதாயொடுதந்தையராவார். ()

ஆமலனுறுகிளைபுனிதமதாகுபவனதுவேயழகென்பதுமாதே
காமமுறுந்திருவடையவனவனேகதிபெறுதற்பதியாவதுமவனே
நாமமதுற்றிடுமிமையவர்பணிவார்நமதுருவெய்துவனைமையகலானென்
றேமமுறுஞ்சிவனம்பிகையோடிவ்வகைமுற்றுமியம்புவனரசே. [௨௩]

இயம்பிடுமிப்பிரதோடமதன்கண்ணெய்தியசிவதரிசனமுறுகின் சேய், நயம்பெறுபெருமையைநான்சொலவெளிதோநரபதியென்றிசை நாரதமுனிவன், வியந்துரைசெய்தவைபிரமபூவெனுமவேந்தனுணர்ந் துமகிழ்ந்தனனென்றே, யயம்பொருதானுச்சனகனுளங்கொண்டன்பு றவேதினைவியாக்கினவற்கி. [௨௪]

நான்காவது வீரசித்து உற்பத்திச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௨௦.



ஐந்தாவது,

# நாரதருபதேசச்சருக்கம்.

முத்தனார்க்குறுமூன்றுகாலத்தினிற்பூசைமுறையிற்செய்பிரதோடத்தின்பூசையுநாளும், பத்தியாற்செயுமவர்களேபுனிதரப்பெரியோர்ப்பயந்ததாயருந்தந்தையும்பரிசுத்தராவர், சித்திசேரவர்தங்களைக்கண்டிடில்யமனுந்தேவர்யாவருநடுங்குவர்சேவடிபணிவா, ருத்தமப்பெரியோரவர்சேவடிப்போதென்னுளத்திற்போதில்வைப்பேன்முடிப்போதெனக்கொள்வேன். (௧)

புனிதன்யாக்கினவற்கிமாமுனிவரன்புகல்வான்புகலும்யாழ்முனிதன்னுடன்பிரமபூவரசன், றினமுந்தான்சிவபூசைசெய்மணிமயக்கோயிற்செய்யநந்தியேமுதற்கணஞ்சேர்ந்தமண்டபத்தி,லினிதுவந்திருந்தென்மகற்கொடுவருகென்றனென்றபோதுட னீற்ற[illegible]மைந்தனைக்கொணர்ந்தா, ரனையமண்டபந்தனில்வருமைந்தனுங்க[illegible]வாதிசோதிசேரணிமணியிலிங்கங்கண்டனனால். (௨)

வாசலுற்றிடுநந்தியைத்துவசகம்பத்தைமன்னவன்றனைநாரதமாமுனிதன்னைத், தேசுபெற்றிடுபிருங்கியேமுதற்கணந்தன்னைத்திருந்தநோக்கிச்செந்தாமரைமுகமலர்ந்தனனு, லாசையாகியேமெலமெலநடந்துள்ளுக்கோயிலண்ணலார்முனமாவலால்வீழ்ந்தடிபணிந்தே, யீசனேயிவணுறைந்தனையோவென்றுகண்ணீரிறைப்பரோமங்கள் சிலிர்த்திடத்தழுவிக்கொண்டனனே. [௩]

ஆங்குடன்றிருநீறுருத்திரன்விழிமணிகொண் டணைகவென்றனன்வாங்கினன்புனைந்துகொண்டனனு, லோங்குபூசனைபுரிந்திடவேண்டுமாங்கதற்கேயுற்றதோர் திரவியங்கொணர்வீரெனக்கொணர்ந்தார், பாங்கினாற்பஞ்சகௌவியமஞ்செனுமமிர்தம்பரிந்துசந்தனக் குழம்பபிடேகமும்புரிந்தான், றங்குதூபதீபங்களைவேத்தியம்வில்வார்ச்சனையுஞ்செய்தடிபணிந்துகூத்தாடினனன்றே. [௪]

அதனைக்கண்டனனாரதமாமுனிபகர்வானருமைமைந்தனீ யண்ணலார்தமக்குநாடோறு, முதன்மைப்பூசனையிப்படிபுரிந்துவீற்றிருந்தேமுனியுங்கூற்றெனுமிருத்தினைச்சயங்கொள்வாயென்றான், சிதமுற்றேசிரஞ்சீவியாய்வாழ்குதிமேலாஞ்செல்வ முற்றனைசிவபத்திபெற்றனையாமா, விதமுற்றோங்கியசைவனீயிளம்பருவத்தேயிந்த நற்புத்திவந்ததுமதிசயமென்றான். [௫]

முந்தையுற்றிடும்பிறப்பினிலறப்பயனதனான்முதல்வனைப்பிரதோடத்திற்றரிசனம்புரிந்தாய், வந்ததாலிதுநல்வினைப்பயனினிமைந்தாவள்ளல்பூதிகண்டிகைசிவலிங்கத்தின்பூசை, சிந்தையிற்சிதையேறிடபத்தியாச்செய்யிற்றீயஞானம்போஞ்சிவனருண்ஞானம்வந்திடுங்காண், பிந்திடாச்சலனக்கடலிருவினைமுதலைபிடித்தலைத்திடா துயர்கதிக்கரைபெறலாமே. [௬]

ஆதியாஞ்சிவனே சருவர்க்குமேலானென்றறிவுவக் துலருச்சனே ப்பலனும்வுந்துறுமா, லோதருஞ்சிவபூசையேகற்பகதருவாமுன்னுற்ற வையாவையுமுதவிடுமதனுற், கோதறும்படியருச்சிப்பான்றனக்கியலழு குங்கூறுகின்றநல்விளமையுங்குபகும்பந்தாங்கு, மாதர்கூட்டமுஞ்சாது ரங்கமும்பலதேவர்வாயில்காப்பதும்பெற்றிடுவானவன்மாதோ. [எ]

பூசைசெய்பவன்றனையெதிர்காண்குறிலதுவேபுவனநாயகன்றரிசன ங்கண்டதாமதனுலீசனென்பர்தந்தரிசனத்தாற்கதிபெறலாமிறைவனுக்கம மந்திரவித்தைதயரீங்கவர்பாற், றேசுபெற்றிருந்தொளிர்தலாலதுபுவிமீதி ற்செப்புமாமனுவினுக்கெலாமுதன்மையேயாகும், பேசுதற்கரும்பொரு ளதுசங்கரியிடத்திறபிள்ளையாகுஞ்செவ்வேள்சிவனருளினுற்பெற்ருன்.

அந்தமந்திரத்தாலெமமையாளமுருகேசனம்பிகாபதிதன்னையேய ருச்சனைசெய்தா[illegible]ந்தவபபொருள்கந்தவேட்குமையுநாயகனுமகிழ்ந் தளித்ததாலதன்[illegible]றமாருன்னற்பாலார், முந்துமாங்கதுயாவைக்குமூல மாமனையமுதன்மையாலதுபாவிகட்கெய்திடவரிதாற், சிந்தையெண்ண ரிதாமந்தப்பரமமாம்வித்தை சிவனைப்பூசைசெப்திறத்தினுற்சித்தியாம ன்றே. [௮]

அரனையர்ச்சனைசெய்திடுந்திறத்தினுலெய்தற்கரியநற்பொருள்யாதொன் றுமில்லையாந்திடனே, தருமமுற்செயாப்பாவிகடமக்கந்தப்பூசைதன்னி ன்மந்திரந்தன்னிலுஞ்சிந்தைசாராதா, னிருமலச்சிவபூசைசெய்யாமை யாலன்றேகிரையகான்கெழுகோடிவீழ்கின்றனவுயிர்கள், பானைபூச னைசெய்யவேவரியதொன்றில்லைப்பகர்குடங்கையிற் புனலறுகுங்கொ டுபெணலாம். (௧௦)

அனையதுமபெறலரிதெனிற்பத்தியினுலேபத்தன்பூசனைகீற்றினுற்றி னுமுத்தியாமா, வினையசெய்துவநதானெனிலதுவளர்ந்திடுமாலீசன்பூச னைவிதெத்தயற்புண்ணியமபுரிவோன், றனையறிந்திடாமூடனங்கவனுறுந் தாகந்தனக்குநற்புனலிருந்தும்பங்கத்தறனுகர்வான், வினையமற்றிடுமெவ ன்றனைப்பழித்தவமதித்நால்வேதநாயகன்றனக்கதுமகிழ்ச்சியாமன்றே,

அண்ணல்பூசனையாற்றிடாதறலுணலாகாதரியபூசனைபுரிந்தரனிவேதன த்தடிசில், கண்ணுதற்ருெண்டரோடிருநதருந்திடவேண்டுங்கருதியிப்ப ணிபுரிந்திடானகாலதண்டத்தாற், புண்ணுறப்படுவானருட்புண்ணியன் பூசைப்புண்ணிபம்புரியாதவர்தமைபமதூதா,நண்ணிடும்படிநரகத்திலய த்தம்பம்பிணித்தேநாடுகின்றதீரவுரவந்தனிற்றள்ளுவாரால். (௧௨)

மைந்தகேள்சிவபூசைதான்மிகுந்துளகாலமறலியூரிடைநரகம்பாழ் நரகமேயாகு,மநதவாய்மைசெப்பாதகாலத்தினிற்காலனைழைத்துத்தூத ரைச்சைவரல்லார்தமைக்கொணர்ந்தே,யிநதவட்டைகணிறைந்திடுமல க்குழியுடனேபீபக்கொப்பரை பெண்ணைபின்றொப்பரைநெருதிக்கு,

மூந்துமூத்திரக்குட்டமிந்திரியத்தின் குண்டமுறுஞ்சிதைக்கனற்றடாக மென்றினையனவுளவால். [௧௩]

அனையவற்றிட்டுச்செக்கினிலிட்டரைத்திடுவீரடுத்தபிண்டிபாலந்தனை யெடுத்தடித்திடுகீர், வினைசெயுங்கொடியோர்தமைத்தண்டனைபுரிவீர் வேதநாயகனளித்தவுத்தரமிதுவென்றே.கினை திரென்பனலைவமுற்றும திதியான்மதலாய்கீசிவார்ச்சனை குறைவின்றியங்கங்களுடனே, துனைவி னற்சிவமந்திரங்குருவின்பாற்பெற்றேதுணிவுறுந்திடபத்தியாற் புரிதியா லன்றே. (௧௪)

தெய்வநாயகன்பூசனையானேனையெனினுந்திடமுறும்பத்திகொண்டு சிந்தனைபிறிதின்றிச்,சைவநாயகமாகியஞானதேசிகன்றன்சாற்றுநல்லரு ண்மந்திரவுறுதியுங்கொண்டே,கைவருந்திறத்தாலருச்சனைசெய்யிலெம் மான்கருணைபெற்றுயர்காமியமுத்தியுஞ்சேர்க்தேவருமெனநாரத மாமுனியுரைத்தானுண்மையாமெனமைந்தனுட்கொண்டனனன்றே.

ஐந்தாவது நாரதருபதேசச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௩௫.



ஆறுவது,

# பாவநாசச்சருக்கம்



வேறு.

வேதநாயகனிலிங்கபூசனைசெயுமேலோன்
போதன்மாயவன்மூவுலகுந்தொழும்புனித
ேறதுமாங்கவன்பெருமையாருரைப்பரவ்வுரவோன்
பாததூளியைச்சென்னியிற்பலன்பெறத்தரிப்பேன். (௧)

இகலிலாநெறியாக்கினவற்கிசொற்றிடுவான்
மகதியாழ்முனிவார்த்தைகேட்டருளினமைந்தன்
றகுதிசேர்தருகுரவர்நீர்தமியனுக்கெம்மான்
றகுதிசேர்மனுச்சொல்குவீரென்றடிதொழுதான். (௨)

அங்திவேணியன்சிவவித்தைபகர்குருவரிதால்
வந்தடுத்துளீர்யான்செய்தநல்வினைவசத்தான்
முந்துநீருபதேசஞ்செய்தாலியான்முறையா
லெந்தையாரருட்கதியினையெய்துறப்பெறுவேன். (௩)

அண்டர்நாயகன்மனுவுபதேசநீரருளி
லுண்டெனப்படுமுண்மையேகைவந்ததாமாற்
பண்டுகொன்யமன்பணித்தசிங்காதனத்துறுங்காற்
கண்டசெப்திபொன்றுண்டதுகேட்டிராற்கருத்தால். (௪)

மறவின்மன்னர்பான்மன்னும்போதன்னமன்னவன்றன்
விறலுங்தூதர்களொருவனைக்கொண்டுவிடுத்தார்
திறல்கொளாங்கவன்சித்திரகுத்தரைநோக்கி
யிறைவன்மந்திரம்பெற்றனனோவிவனென்றான். (௫)

இல்லையென்றலுமியமன்றான்கோபங்கொண்டிடிபோற்
பல்லைமென்றனன்பாவியிங்கிவன்றனைக்கொடுபோய்
வல்லையேகும்பிபாகமாநரகத்தின்மடுத்துக்
கொல்லும்வேலினால்வாளினாற்குறுங்குறுமென்பான். (௬)

சின்னபின்னங்கள்செய்யுமின்சைவனல்லாத
பன்னுதுற்புத்திப்பாவியைப்பண்ணுமாக்கினைக
ளின்னதென்னுணராதடித்திடித்திடுமென்றான்
பின்னுமோ[illegible]சிவவித்தைப்பேறிலன்றனையே. (எ)

நிரைபகோடிபினீங்கிடாப்படியின்வீழ்த்திடுவீர்
வரைவில்லாமனமன்னிடார்தமக்கிந்தமட்டோ
கரையிலாநரகெய்துவர்கயிலையான்மனுவை
யுரைபெற்றோர்பலர்கணத்தரசாயினருண்மை. (அ)

ஓதுமாங்கதுவுற்றரன்பூசையுமுளதற்றி
வேதமாஞ்சனனக்கடனீங்குவரென்றே
வேதவாகமபுராணங்கள்விளம்பியவல்லாற்
போதவான்களுமிதற்கிணையிலையெனப்புகன்றார். (௯)

அந்தவித்தைதயைப்பெற்றுறுசைவனுகாத
விந்தப்பாவியைக்கொண்டுபோமென்றுரைத்தனனன்
முந்தையானதுகேட்டிருக்கின்றனன்முனியே
யெந்தையேயுபதேசஞ்செய்தென்னையாளென்றான். (௧0)

பேசுமிவ்வுரைக்குளமகிழ்பிரமபூவரச
னேசயாழ்முனியேயிவன்றானெவனிகழா
சூசமில்லையோவென்றலுநாரதன்சொல்வான்
றேசுறுஞ்சிவதெரிசனமிவன்முனஞ்செய்தான். [௧௧]

அன்னதாற்சிவதத்துவஞானியாயவனி
மன்னினனிவனுதலாற்சூதகமருவான்
பின்னர்யார்க்குச்சூதகமெனில்யானெனதெனும்பேச்
சுன்னுகின்றவஞ்ஞானிக்கேசூழ்ந்துவந்துளதால். [௧௨]

தருமரூபமாமிவன்றனைக்கண்டவர்தமக்கு
மருவுஞ்சூதகமிலையெனினிவர்க்குண்டோமன்னு
பரமனார்பத்தியில்லவர்சூதகம்பரிப்பார்
விரதசைவரைவிரவினோர்தமக்குமின்றாமால். (௧௩)

அண்ணலார்சிவதீக்கைபெ[illegible]றருளுபதேச
நண்ணுங்காலமவ்வள[illegible]தகநண்ணு
மெண்ணுமாங்கதுசெய்திடவேண்டுமென்றிதயங்
கண்ணும்பாவனையொளியிருள்போலதைக்காயும். (கச)

ஆற்றினேனவன்புனிதனுவதுவுமற்புதமோ
கீற்றினேன்றிறமுணர்ந்திலார்நித்தருதகராய்ச்
சாற்றுங்கன்மத்தின்பிரட்டராய்நரகினிற்சார்வார்
போற்றுமீங்கிதுநிச்சயமெனமுனிபுகன்றான். (கரு)

நாரதன்சொன்னவாய்மைமகேட்டரசனுநயநதான்
வீரமாகுர்தன்மகற்குத்[illegible]கையின்விதிவிளைப்பான்
சாரமாஞ்சிவன்சந்நிதிமண்டபந்தனையே
யாருந்தீக்கையின்மண்டபமாவலங்கரிப்பான். (கசா)

சிவபிரான்முன்னர்த்தீர்த்தத்தின்மூழ்கித்தா[illegible]செய்யு
மூவமைதீரான்பூசனையுய்த்ததன்பின்னர்
நவமதாமைந்தனுபிமுன்கொய்தபிற்சாதத்
தவமூறுங்கன்மமபுரிவித்துத்தண்புனலாட்டி. (கஎ)

ஆதிபூதிகண்டிகையினலலங்கரித்தணிசே
ரோதுமண்டபங்கொடுபுகுந்தோமங்களியற்றி
நீதிசேர்தரும்விதிப்படிநியமங்கண்முற்றிக்
காதன்மைந்தனைக்கடவுள்சந்நிதிக்கொடுபுகுந்தான். (கஅ)

அரசன்றன்புரியருச்சனைப்படிமகன்றனக்கே
விரவுநற்பொருள்கொடுவிதிப்படிசெயவிடுத்தான்
பரவுகின்றதுபார்த்துளமிகவுமேபரிநதா
னுரவுநாரதன்முன்விடுத்துதவுதியென்றான். (கக)

அதன்பின்யாழ்முனியருந்திறற்பெரும்புதல்வனுக்கே
சிதங்கொள்பூதியினமேமுதலியசெய்து
விதங்கொர்டீக்கையின்விதிப்படிவெண்ணெய்மெய்பபூசிப்
பதங்கொடன்னுருப்புனிதமாம்பாவனைபுரிந்தே. (உo)

அம்பிகாபதியுடன்கணபதியறுமுகவ
னம்பிநந்திபிங்கிருடியேமுதற்கணநாதா
செமபொனூர்திருவுருவுகள்சிந்தையிற்கொண்டே
யும்பர்கோன்சிவவித்தையங்கவன்செவிக்குரைத்தான். (உக)

அனையமந்திரந்தன்செவிப்புகுதலு[illegible]யா
வினைவிலுற்றனவப்பொழுதவனு[illegible]ம்
வினைகொள்பாவகோடிகளொரு[illegible]மேவித்
துனைவினாலவன்புறத்தினில்வருதலுந்தானியதே. (உஉ)

மேதிமெய்ங்கிறமுதுகுதோள்[illegible]னல்வெண்ணெடும்பல்
பாதிவெந்துநீள்செம்மயிர்குரு[illegible]படைத்தே
தீதிபட்டுறுபெண்ணுருக்கண்டிறைநிகைத்தா
ளேதுவாய்தழுதழுத்திடநாரதர்க்குரைப்பான். (உ௩)

இணைபபாவையாரிவ்வுருக்கண்டிலேனென்று
முனிவவென்றலுஞ்சொல்லுவானுனதுகான்முனிதன்
வினைபெலாஞ்சிவவித்தைதன்மேன்மையால்வெந்து
புனையுமோர்மடமாதெனப்புறத்துற்றவென்ருன். (உ௪)

அந்தவேளையிற்பாவமோர்மூர்த்தியாயமைந்து
வந்தபெண்ணுருநாரதமாமுனியோா
விந்தமைந்தன்றனெடுத்திடுந்தனுத்தொறுங்கலந்தே
முந்தைதே[illegible]னேனுனதுமந்திரத்தின்றுமுடிந்தேன். (உ௫)

கருகினே[illegible]னுடலினிற்கலந்திடமாட்டே
னுருகினேன்வெளிப்போந்தனனெங்ஙனுற்றிடுகே
னருகினேனென்றுபுகன்றதுகேட்டருகிருந்த
குரிசின்மைந்தன்மற்றுங்குளார்யாவருங்குலேந்தார். (உ௬)

புறத்தில்வந்திவைபுகன்றிடும்பாவப்பெண்ணுருவைத்
திறத்துநாரதன்பார்த்திவைசெப்பிடுகின்ற
னிறத்தலசெய்திடும்பாவத்துன்முகப்பெணேயிவனைத்
துறத்தல்செய்து*காறுன்னுலகேகுதிகடிதின். [உ௭]

என்றுசொல்லலும்பாவமாம்பெண்ணுருவிசைப்பா
ணன்றிசேர்சிவஞானியேநாரதமுனியே
கொன்றைவேணியானன்பர்ச்சேர்ந்திடிற்குறைவருமோ
வுன்றனைத்தரிசித்துளேனுறுகண்டீர்த்தருளே. [உ௮]

அனந்தகோடிகற்பங்களுண்டிவனைவிட்டகலா
வினந்தவெந்நரகத்துயருட்டிக்கொண்டிருந்தேன்
புனந்தசென்மங்கடோறுமிவன்புரிந்திடும்பவத்தாற்
கனந்தயானுநீங்காதுடன்கலந்திருந்தேனே. [உ௯]

பெரியவெந்நரகத்திவன்பிடுகெட்டுழன்று
மரியநாணமோரணுவளவேனும்பற்றிலனுற்
றெரிதருஞ்சிவபூசனைசிவகதைகேட்ட
லுரியவன்பர்களுறவுசற்றுற்றிலானிவனே. [௩0]

ஆலயத்தொடுகோபுரதரிசனமறியான்
சீலமாருந்தோர்தி[illegible]ச்சிறப்புங்கண்டிலனே
கோலும்பாதக[illegible]ங்கூடிச்சஞ்சரித்தே
யேலுந்தீத்[illegible]யேகாலம்போக்கினனே. [௩௧]

* கால்-யமன்.

கடுத்தாய்பன்றிகரமொடுகாகமேமுதலா
வெடுத்தவினையோனிகளவையெத்தனையென்கே
னடுத்தசன்மங்கடோறுமிவனரும்பசிப்பிணியாற்
படுத்ததுன்பங்கள்பட்டதல்லாலின்பமிலனே. [௩௨]

இப்படிக்குற்றசன்மத்தாலுழல்பவனேதோ
விப்பிரக்குலத்துதித்தனனவர்தொழில்விடுத்தான்
செப்புபாவிகள்செய்வினையமனறிவானே
யப்படிப்பட்டவவனுமிங்கிவன்பவமறியான். [௩௩]

கணக்கர்சித்திரகுத்திரரெழுதிக்கைசலித்தா
ரிணக்குந்தூதரிங்கிவனிழுப்பாற்சலித்தார்மெய்
தணக்குந்தண்டங்கடண்டனையாற்றகர்ந்தனவாற்
குணக்குன்றேயிவனெடுத்தசனமங்கள்கூறுவதேன். [௩௪]

வையமங்கையுஞ்சுமந்திளைத்தாளிந்தமறவோன்
மையப்போய்ப்பிரதோடத்திற்சிவலிங்கம்பார்த்தா
னையலிங்கிவனரும்பவகோடிவிட்டகன்ற
செய்யும்புண்ணியமளவிலையெனச்சிறந்ததுவே. [௩௫]

ஒருவன்மாண்டிடிலுடனின்றுசெய்தபாவங்கண்
மருவிடாதெவணேகுமாங்கவனெவண்வதிவான்
பரமலிங்கத்தின்றரிசனங்கிடைத்தபாக்கியத்தால
வருமிவன்பவமுடிந்ததாலியான்மருவிலனே. [௩௬]

நாயகன்றரிசனத்தினற்பாவங்கணசித்து
நீயிருந்தவாறென்னெனிலிவன்பக்கனீடுஞ்
தீயபாவத்தின்வாசனைசிறிதுறச்செறிந்தே
மேயதாலெட்டிக்கிருமிபோல்யானுமேயினதாம். [௩௭]

பெருமகீபுகல்சிவமனுப்பெருநெருப்பதனு
லிருளுமந்தவாசனைமுற்றுங்கெட்டிறந்தனவால்
வெருவியேவெளிப்புறப்பட்டேனினியெங்ஙன்விரவி
மருவுவேன்சிவனன்பரேயிங்குறைவாரால். [௩௮]

ஓடவுந்திடமில்லையாலுமதுகைப்பூதி
கூடப்பெற்றிடிற்கதியெனக்கெளிதினிற்கூடு
நாமெம்பூதியாற்றத்துவஞானத்தைதநண்ணி
வீடுபெற்றபேர்தமையெண்ணமுற்றுமோவிளம்பில். [௩௯]

பூதியன்றியேபுனிதமாம்பொருள்பிறி துண்டோ
வாதியார்தமையுடைந்திடவுதவுமாங்கதனின்
மேதகைத்திறமாசறிவாரதன்மேன்மை
போதமுற்றவர்சனனமாகரினிற்புகாரே. (௪0)

மனுவினலவருங்கற்பனீருயினுமற்றைப்
புனையுநீறெவையேனுமேபுகலிடிற்புனித
மனையமேதாரணுப்பெற்றிடில்வினையெலாமகலு
மினையுறக்கினிமேனாத்திரவிபூதிமிக்குளதே. [௬௧]

நீறெனும்பெயர்வந்ததுவினையைநீருக்கு
மாறுமேவினதாலதையடியர்க்குநீர்தாந்
தேறுசற்குருவாகவந்தீரருள்செய்வீர்
வீறுகொண்டதனற்கதியடைகுவேன்வினையேன். [௬௨]

புனிதனிறணிந்திடப்பெறிற்பொருவினிற்குணரா
மனகனுரெனக்கருங்கதிநல்குவரன்றே
யெனவுரைத்தபாவத்துருகோக்கியாழ்முனியாங்
கனதைசேர்கருணைக்கடலுங்கழறுவனல். [௬௩]

ஓதுபூதிக்குமுனக்குமேயெத்தனைதூர
பாதவப்புதல்வன்றனைக்கொடுமைச்சொல்வகுத்தாய்
பாதகத்தினையெரித்திடுஞ்சைவபாக்கியத்தின்
சேதனத்துண்மைசேர்ந்தவன்றனையிகழ்ந்தனையே. [௬௪]

உன்றனக்குமாநிரையமேயுறுதியதாமா
னன்றிசேர்சிவஞானிமுன்னுறவணங்கானுங்
குன்றிடாச்சிவவித்தையைக்குறையுரைத்தோனும்
பொன்றியேநரகத்தினிற்புக்குழல்வானே. [௬௫]

ஓதுமன்னதானரகமேயுன்றனக்குறுதி
போதிபோதியென்றனன்சிவனுமமேபுனித
மாதிநாமம்பெற்றரனடியாரையுந்துதிப்போன்
மாதவத்தினனென்றுநாரதமுனிவகுத்தான். [௬௬]

ஆருவது பாவநாசச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௮௧.



ஏழாவது,

## பாவரூபமோசனச்சருக்கம்



வேறு.

கவுரியோர்பாகன்பூசைகாதலித்தியற்றிநாளு
மவன்மகிழ்தொண்டர்தாளுமாதரித்தருச்சிப்போர்கள்
சவுரியமழகுகாந்திசந்ததிசெறுநர்வென்றி
புவிதனிலழியாச்செல்வம்புத்திமுத்தியுஞ்சேர்வாரே. [௧]

இசைக்கும்யாக்கினவற்க்யுன்றனிசைமுனிவார்த்தைகேட்ட
வசைத்திறமுடையபாவவடிவகின்றுஸரக்குமன்றே
நசைத்திறமுடையநீநாரதமுனியேயுன்றன
மிசைச்சரணடைந்தேனுயேன்வீடுதந்செய்வாயால. [உ]

அறிவிலாவொருவன்றனேயபராதஞ்செய்தானேனு
நெறிபெறும்பெரியோர்நெஞ்சிற்பொறுப்பர்கிச்சயமதன்றே
வுறுமதுவிலதேலன்னோர்க்குபர்தருமபெருமையின்றே
பொறிவிழியமனுஞ்சிலலோர்க்கருளதுபுரிகின்றனே. [௩]

ஆனதான்ஞானநாதவடியன்செய்யபராதங்க
ணீனலமுடையநெஞ்சினினைத்திடக்கடவதன்று
ஞானமிலுன்னைக்கணடாரக்குறுவினையொழிவதுண்மை
மானடராசனன்பாராலுருவரமுமுண்டோ. [௪]

எம்பிரானனபரோடிறைபபொழுதளவளாவில
வெம்பியவினைகணீங்கிமெய்க்கதிபெறுவரென்றே
சம்புவினூல்களெல்லாஞ்சாற்றிடுமநதமேலோர
செம்பதநூள்பெற்றோர்க்குநீவினைநாசமாமே. [௫]

கங்கையைக்கண்டபோதிற்கடுவினையொழிதலபோலச்
சங்கரனன்பாக்காணிற்சாற்றரும்பவங்கணீங்கு
மங்கதுகிடைத்தறனுமரிதன்றுவையகினை
யிங்குநானெய்தப்பெற்றேனிருமபவநீங்கினேனே. [௬]

இப்புதல்வனையுங்கண்டேனெனக்கபராதமுண்டோ
செப்பரும்பரமனன்பர்தெரிசனமகிமையாலே
முப்புவனத்தநேகர்முத்திபெற்றார்நும்பூசை
யொப்பறுமிலிங்கங்கண்டேனுறுகதிபெறுதலபொய்யோ. (எ)

கூறிடிலினியான்பாவக்குறியுடல்பரிப்பதன்றாற்
றேறுமிவ்விலிங்கமூர்த்திதெரிசனநதான்பெற்றேற்கு
மேறுமிப்பாவதேகமிருக்குமோகேடுறுதோ
வாறணிசடையானன்பர்தமையடுத்துய்ந்திலார்யார. [அ]

அன்பராஞ்சரலிங்கத்தோடண்ணலார்திரலிங்கத்தை
முன்புறக்கண்டாற்கின்பம்வளர்ந்திடுமெனமொழிந்த
துன்புறுபாவமூர்த்திவார்த்தையைச்சுருதிவலல
வின்பநாரதன்றன்கேட்டேதிருவுளத்திரங்கினுலை. (௯)

பெண்ணெனும்வெய்யபாவப்பேதுறுமுடலநீற
வண்ணலார்திருவெண்ணீற்றையணுவளவளித்திட்டானல
விண்ணமாமந்தநீறுவனத்திலங்கியிலுண்டான
தெண்ணருஞ்செல்வநீறேற்றிருநெற்றியிட்டதன்றே. (௧௦)

நெற்றியினீறுசேர்ந்தவுடன்கருநிறத்துக்கோர
முற்றிடுகின்றபாவமூர்த்தப்பெண்ணுருவநீங்கிச்
சொற்றதிவ்வியரூபஞ்சேர்சூரியப்பிரபைபோல
வெற்றிசேர்புருட[illegible]மாகவேவிளங்கிற்றன்றே. (௧௧)

பூதிகண்டிகைகள்பூண்டுபுனிதமாய்த்தண்டம்போல
வாதிதன்முன்னர்வீழ்ந்தேபடிபணிந்தருச்சித்தேத்த
னீதிசேர்பிரமபூவாசினியெத்தரசன்கண்டா
னீதிசயமேதென்றன்யாழ்முனிதனைக்கேட்கின்றான். (௧௨)

இவண்முனமுற்றசென்மமியாதிவள்விருத்தியென்னே
யுவமையில்புருடதேகமுற்றதேதுரைத்தியென்னத்
தவமுனிநாரதன்றான்சாற்றுவானிவ்வாறுநல்
லவனருண்மைத்துற்றவதிசயஞ்செங்கைவேலோய். (௧௩)

அரசகேளுயிர்கள்யாவுமநாதியவுயிர்கண்மத்தா
லொருவன்சேர்பலவோடம்போலுருவங்கள்வெவ்வேறுற்றே
விரவுமம்மேனிதூலஞ்சூக்குமமெனவிடாமற்
பரவிடுமிரண்டதாகும்பதப்பதாய்நிலவுமன்றே. (௧௪)

இலங்கியதேகமென்னுமிரண்டினின்மானதேகந்
துலங்குறுந்தூலமுன்னேசூக்குமவுடலமேவு
நலந்தருமுத்திசேர்காருசமாமுடலமந்தச்
சலந்தருதெய்வந்தானுஞ்சடத்துடனுசமாமே. (௧௫)

செப்பியமுத்திதானுமிரண்டதாஞ்சீவன்முத்தி
யொப்பிலாப்பரமமுத்தியென்னவேயுரைப்பதாமாற்
றப்பரும்பரமமுத்திதானனுநிந்தாபத்
துப்பாநஞ்சீவன்முத்திதுய்த்திடுந்தேகின்றே. (௧௬)

வேந்தகேள்சீவன்முத்திவிமலன்பாதத்தின்சித்தி
சார்ந்திடிலுண்டாஞ்சித்திசாருதலரிதேகண்டாய்
தோய்ந்திடும்பரமமுத்திசூழ்ந்திடுந்தேகமெல்லா
மாய்ந்திடிலுண்டாந்தேகர்பூதிபான்மாயுமன்றே. [௧௭]

சீவன்முத்தியதேதென்னிற்சிவவித்தைச்சித்தியாலு
மோவறுதவயோகத்தினுறுதியினுலுஞான
மேவியேயுள்ளதேகம்பெற்றுமேதினிவிண்ணோடுந்
தாவில்சத்தியலோகத்துந்தடையறச்சரிப்பதாமே. [௧௮]

சொல்லுமச்சீவன்முத்தன்சுத்தனாயிருப்பனூணு
மல்லுநன்பகலுமண்ணுமாமமிர்தமுண்பன்
புல்லுமற்றுளபோகத்திற்பொருந்துறுதயந்தானு
மெல்லொளிசேரத்தேகமிவனுற்றனரசரேறே. [௧௯]

எனவிசைமுனிவன்சொன்னகாலையினிமையோனுமிப்
புலைதருபாபரூபம்போயவன்சாற்றுகின்றா
னனகனல்லருளாற்பாவதேகம்போயமரனானேன்
முனைவனீதந்தநீற்றான்முத்தனுமாயினேனால். [உ௦]

அம்பிகைபாகனெம்மானருடனக்குரியனானேன்
கம்பஞ்செய்காலனார்தம்பயமுறக்கடவேனல்லே
னெம்பிரான்புவனமெல்லாநடந்துசஞ்சரிக்கவல்லே
னெம்பிரானவனுக்கென்றனிதபத்திவிச்சையில்லேன். [உ௧]

கொடுப்பதுமில்லையாதுங்கொள்வதுமில்லையான்றா
னடுப்பதுவிடுதற்றானுமிலைபற்றேகருமமெல்லாம்
விடுத்துளேன்காரணாதியிவையெலாமித்தையாமே
மடுத்துறானந்தவாரிமன்னினேன்றன்னினேனே. [உ௨]

ஒப்பிலாவிலிங்கநன்றெரிசனமுன்கைப்பூதி
தப்பிலாதுற்றுச்சீவன்முத்தனாந்தன்மைசார்ந்தேன்
செப்பருஞ்செல்வம்பெற்றேன்றிருமாறன்பதமும்வேண்டே
னெப்பொழுதினுமெம்மான்றனையேத்தெடுப்பன்யானே. [உ௩]

எங்கெங்கேசிவலிங்கங்களிருந்துளவாங்கணேகிச்
சங்கரன்சேவைசெய்வேன்சைவர்தம்முறவுங்கொள்வேன்
மங்களைபாகன்பத்திவழுவின்றியமைதல்வேண்டு
மங்கவன்பணியைச்சேர்ந்தேயருங்கதிபெறுவன்யானே. [உ௪]

திகழ்தருசிவன்முத்தர்சிவனருளாகக்கண்டே
யிகபரந்தன்னிற்கற்பகாலம்வீற்றிருக்கப்பெற்றே
பகர்தருமிலிங்கதேகசமாயப்பரமமுத்திச்
சுகநெடுவாரிசேர்ந்தேதுவிதமற்றிடுவாரன்றே. [உ௫]

இலிங்கதேகப்பற்றண்ணலினிதருணீற்றாற்றீர்ந்தேன்
றுலங்குமவ்வுருத்தான்யோனிதொறுஞ்செலுத்திடுமேயென்று
கலங்குதலொழிந்தேனுதன்கருணையாற்கல்விமாரி
பலந்தருஞானவாசான்பதமலர்க்காட்சிபெற்றேன். [உ௬]

அண்ணலேசைவர்பூதியணிந்ததேகத்திற்சேர்ந்த
தண்ணுறுமென்காற்சேரிற்சனனதுக்கஞ்சாராதென்
றெண்ணிமாலயன்விண்ணோர்களிச்சைகொள்கின்றதன்றோ
நண்ணுறுமதுநான்பெற்றேன்சுத்தநிலையுற்றேனே. [உ௭]

அவ்வுரைபகர்ந்ததெய்வமூர்த்திதன்னுழைவாய்மை
செவ்வியமைந்தவேந்தன்செவியிற்கொண்டதிசயித்தான்
சைவநாதன்றன்றேவசரீரத்தோன்றன்னைநோக்கி
யிவ்விடையன்னிலையோரிடஞ்சேரவிருத்தியென்றான். [உ௮]

இருந்தாலிவனுமங்கேளத்தியவிசையினாலே
பொருந்துறுபாசாசுவாலகிரகங்கள்போகுறாதே
வருந்துசாகினியும்பாதமிடாகினிமனத்தின்பீடை
யருந்துபரெல்லாந்தீர்த்தேபமாந்திடாயென்றானன்றே. (௨௯)

சிவனுமந்தாரகத்தாற்செப்பிலங்கவைகிட்டாவாந்
தவமேவும்பூதிபூசிக்கூவிளமாலைதன்னைக்
குவலாமல்வனைந்துமோந்துகடவுடன்பலிபன்னத்தை
யுவகையொடென்றுநன்றாவுண்டினிதிருத்தியன்றே. (௩௰)

தேவதீர்த்தம்விபூதிகண்மணிசிவனற்பூசை
போவிலாவிலிங்கம்வில்வமுறுநின்மாலிபத்திரனுண்டி
தாவிலஞ்செழுந்துச்சைவர்பூசைசங்கரன்புராண
மேவிபபத்துமுத்திவிளைப்பதற்குறும்வித்தாமே. (௩௧)

அதிகநின்மாலியபத்திரனுண்டிதானவற்றின்மேலா
முதவுமிப்பத்துநெஞ்சத்துறுதியாக்கொள்கலாதான்
வதைநரகத்தேபெய்துமன்னுவனிவற்றைத்தன்கை
முதல்கொடுத்துநின்முத்திபறந்தன்னைமுற்றுவிட்டால். (௩௨)

சொல்லுமிப்பத்தும்வாக்காற்றுதிக்கினுமுத்திசேர்வன்
வல்லசைவந்தரெல்லாமாறுமற்செய்யவேண்டு
நல்லமற்றிவைபோலில்லையிலையெனநவிலும்வேத
மல்லுநன்பகலுநீயிங்கிவற்றையேயாற்றுவாயால். (௩௩)

இதபத்திவிவைபற்றாரையிந்தகிராமவிக்காப்
முதன்மையாமிவைகள்செய்பார்முற்றுவர்நரகமன்றே
மதிபெறுமுனக்கேயிதுவாய்த்திடுமுபதேசங்காண்
கதிபெறற்கிவையேயன்றிக்காரணம்வேறின்றென்றான். (௩௪)

ஏழாவது பாபநபமோசனச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௧௫.



எட்டாவது,

## ஆயுத்தேவச்சருக்கம்.



வேறு.

வள்ளலெம்பெருமானுமைமணேசுகரன்வேள்வாரணமுகத்தனைச்செய்யு
வாரணமுயர்த்தகுமரனைத்தந்தோன்பால்விடையேறியகம்பன்
றள்ளருமுப்பான்மூன்றுகோடியாராம்விபுதர்கள்சாத்துமந்தாரத்
தண்ணறுக்கமழ்பூமாலையிளடியார்சாத்துபாமாலையேமகிழ்வோ

ளங்கதுதன்னுளிவன்சரக்கறையிலருர்பொருள்வாத்தனையாமா
லரசவென்றுரைத்தவார்த்தைகேட்டுளத்திலதிசயமுற்றனன்பகர்வா
னுங்கமாமுனிவேயித்திரையுடனேசோபமேலாடயர்ச்சியில்லாமற்
சொல்லருஞ்சிவபூசனைசதாகாலமானிடர்சூழ்ந்துசெய்குவரோ
ஙங்கணுய்யநீபுகலுதியென்னநாரதமாமுனிபகர்வா
னன்மணித்தூசம்பிற்பரிமளசீதநறும்புனலிறைத்திடப்பெய்தே. (சு)

அந்நகற்றகம்பிற்றுரைவிழ்தமமாரான்றனைத்தகுசிவலிங்கநாத
னணிமுடிமீதிலொழுகிடப்பணித்தேபருச்சனையொழிவுறுதாற்றிச்
சிந்தனைமகிழ்வைவேதனத்துடனேதீபதூபங்களியெட்டாஞ்
சேருபசாரவரிசையோடுள்ளசிறப்புறுபலவதனமியற்றி
மூர்த்துறுசைவவேதிபரநேகர்முறைமுறைபாகவேவபமைத்து
மொழிதரும்பூசைமுடங்குருவனைனமுழுநிதிக்குவைபலகொடுத்தே
சந்ததமிபற்றில்வேண்டிபயுசித்துச்சாயுச்சமுத்தியுமடைவார்
சங்கரனெறியிற்பற்றிலாதவரைச்சமன்றடிகொடுபிடர்தகர்ப்பான். (எ)

பத்தியுற்றிலனேற்பூசனைபுரிந்தபலனதுபெறுவதொன்றிலதாற்
பகர்மனத்துறுதியுடனரன்பூசைபரிந்துடன்புரிந்திடப்பெற்றோர்
சத்திமெய்பாண்மைதிருவுருவாளுள்சந்ததித்தழைந்திடுஞ்சென்பகுஞ்
சபலமாமிவற்றிலொருபெருங்காலந்தசாற்றிடக்கேட்டியாலன்றேசார்ச்
சித்திசேர்வாளுட்டொகையெலாமேனட்டிருவனொருருவுகொண்டொரு
சேர்ந்துகூடினவாலத்தவேலையினிற்றெனதிசைக்கூற்றுவன்கணத்தோ
டத்திசைபான்றனுமங்கள்பாடிபாடிச்சென்றுலகமெங்கணுமபோ
யடைந்தனனபனைக்காண்டலுமாயுட்குழாமிகமெங்கினவன்றே. (அ)

அன்னதுகண்டேநமனருந்தனைநசித்திரகுத்திரர்தமைப்பார்த்
தறைகுவான்பாரிலவகட்ரன்பாலுவமானங்கள்சந்திரவொளியாற்
சென்னிறத்தங்கிவன்னஞ்சிற்சிலவார்சிலவுந்த்திரளெனத்திகழ்வ
சிலதழந்தன்னவொளியொடுசெந்தாமரைவனயத்தினிற்றிகழ்வ
மன்னுறுமுற்கைபோல்வனாநந்தம்புன்சிரிப்பொடுஞ்சிலவதிந்த
மறைபயிலரன்றனுமமோதுவனகண்கணீர்வாரநின்றனவாற்
சொன்னவில்வீணைக்கானம்பாடுவனசூழ்ந்துகூத்தாடுவபலவாற்
சொல்லரும்பரமன்றனையுளத்திருத்தித்தூங்கியேவிழிப்பனசிலவால்.
சிற்சிலசிவனுமங்கமெண்ணுவனதெண்ணிலாவொளிதருநீற்றுற்
சிற்சிலதிரிபுண்டரங்கள்சாத்துவனதிகழ்தருமுருத்திராக்கத்தின்
விற்செறிவடங்கள்பூண்பனவில்வத்தளிரினுர்சிவார்ச்சனைபுரிவ
மிகுசிவகாதைபயிர்தபானங்கள்விரும்பியேநுகர்வனபலவா
னற்சிவலிங்கந்தனைக்கையாலணைத்துப்பரவசமடைந்தனபலவா
லம்பெறவிவ்வாறிலிங்கபூசனைபினண்ணுறுமிவையெலாங்கண்டே
கற்செறியெனநெஞ்சகமுருகிக்கருதருமகிழ்ச்சிபெற்றுடையேன் (சே
கண்கொண்டுதனிற்காலம்போக்கிடலேகருத்தொருமித்தனெனக்

இதிலதிசயமேமேதனைவிவைழிரேவிநம்பெரும்பாவக்காட்டெரிகூழ்ந்[வா
ய்தரித்திடக்கருவிக்கருத்தொறுப்புகுந்தேயிடைந்திடும்பாவிகளெல்
மதிதருஞ்சடிலத்தெம்பிரானடியார் தமைநினைந்திடலந்தவினைபோய்
மாய்ந்திடுந்துக்கபயமும்போமன்னமகிமைசேர்தொண்டரையின்று[ன்
கதிபெறக்கண்டேயித்தினஞ்சுதினங்கண்கள்பெற்றதிற்பயன்படைத்தே
கருதிடும்வாணாள்வளர்ந்தடுஞ்செல்வந்தழைந்திடுமிகவுமேகண்டீர்
சதிரொடுமெதிர்நிற்கின்றனபாரீர் தருமமாமிவற்றெதிர்மறையாய்ச்
சார்ந்திடும்பாவத்துக்கவாயுவின்றன் கூட்டங்கடாமிவையாமே. (கக)

காரிருள்வடிவாய்ச்சிவார்ச்சனைபுரியுங்கண்ணுதற்றொண்டரையடிக்கக்
கடும்பவங்கொண்டேயழுதுதுரதநிற்கலங்கிநிற்கின்றனபார்
ராரிவைபோல்வாரெவையெனப்புகலும்வார்த்தைகேட்டவற்றையுங்க
யுதிசயமுற்றுமனமகிழ்ந்தான்றவறைகுயர்சித்திரகுத்தா [ண்டே
பாருளிங்கிதுகேட்டவர்க்கான்பந்திபலித்திடுமன்னகேண்மேலாம்
பரனடியார்தமமுறவுதுதானேபகர்தருமமுதபானமதா
னேர்தருமயரைக்காணிலானந்நிகரிலாவமுதசோதியதா
நீதிசேர்தருமராசனேபாராயெனப்பின்னுநிகழ்த்துகின்றரால. [கஉ]

அட்டபுவிபதனில்பாவனையெனினுமம்பிகாபதிபதபூசை
யருமறைமுறையிற்காலமீட்டித்தற்கஞ்சிவிட்டியற்றிலாயுப்போ
மெம்பிராணிதுமிச்சயம்பணிபுரியில்வளர்ந்திடுமென்பவாகையினு
லிந்தவாயுவின்றன் கூட்டங்கள்பரவுமிடரொழிந்திறைப்பொழுதேனும
வம்புசெல்லாமற்பூசனைபுரிந்துமகிழ்சிவனுமங்கள்பாடி
வணங்கிபானந்தக்கண்கணீர்பொழியமாகடமாடுகின்றனவாற்
செம்பொனேர்சடையான்பூசைக்குவேண்டுந்திரவியநிறையவேயேற்றிச்
செயுமுபசாரங்குறைவிலாதாற்றுமவர்சிரஞ்சீவியாகுவரே. [கங]

அண்ணலார்காதையமுதமாமவாரிபவைநுகர்வோர்சிரஞ்சீவி
யாகவேகாயபலங்களோடுறைவரையனைசத்தியமாமால்
புண்ணியன்பூசைபுரியுமாயுத்தேவச்செயல்புகன்றனமப்பாற்
புகலரும்பாவிவாயுக்கூட்டங்கள்புரிதொழில்புகல்வதுங்கேளா
பொன்னூறுச்சூதுசூதூறல்வேசிமாதர்களொளிமுகப்பார்வை
யுற்றகள்ளுண்ணுஞ்சிற்றினமகளிருடன்கலந்தாடநீர்த்துறுதல்
கண்ணுநலன்பரலலவமோடுகலந்துபகாரங்கள்புரிதல்
காட்டுமிக்கருமம்புரிந்துவாணாள்களவம்புகக்காலம்போக்குதலே. ()

சிவகதைகேளாபரசிவனெவர்க்குமதிகனென்றுணர்ந்தவன்பூசை
செய்திடாபத்தியற்றவருடனேசேர்சகவாசங்களூறுவ
கவிலருஞ்சிவபூசனைதனையிகழ்வரல்லடியார்பதம்பணியா
நாதனுலையத்திற்றிருவிளக்கேற்றாலந்தருதுபதிபக்கள்
புவமகன்றிடவேதரிசனம்புரியாபரனுமைதிருக்கலியாண
பண்டிகை தானுவிழாக்கள்காணுபாவமேபுரிந்திடுதலிவை

னஞ்சாற்றினுனெனச்சனகராசன்கேட்பப், பாசிகுபெறுசைவதேசிகனு
ம்யோகப்பாக்கியன்யாக்கினவற்கிபகர்ந்தானன்றே. (௨௨.)

எட்டாவது ஆபுந்தேவச்சநர்கழற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௩௮.



ஒன்பதாவது,

## கீர்த்திகேதுச்சருக்கம்.



சத்தியலோகத்திருக்கும்பிரமனுதிவானவர்க்குமுணர்வரியதம்பி
ரானே,பத்தியுரிபோர்த்தாடுமரனேயுன்றனன்பருடனசகவாசந்தந்தாள்
வாயே, பத்திசற்றுமிலலாதாயேன்றீமேபன்பாவியேன்பாவிமேயனெனது
நெஞ்சம்,புத்திமுத்திகொடுத்தருளுஞ்செய்யபாதப்புண்டரிகத்தனிபோ
ற்றப்பொருந்தத்நானே. [க]

அருட்கடலாம்பாக்கினவற்கிபர்தாஞ்சொல்வாரந்தகன்சித்திரகுத்
தர்க்களறயுமபோதி,லிருக்குமிந்தவதிசயந்தான்பார்க்கவென்றேயிமைய
வர்கள்விமானமிசைக்கொண்டுபோந்தார்.திருக்குலவுசிவனடியராயுக்கூ
ட்டஞ்சேர்ந்தனகண்டேமகிழ்ந்துசெங்கைகூப்பி, யுருக்கமுடனசிவபூ
சைசெய்தோர்வாணுளுற்றபேருருவிவைபென்றுரைசெய்கின்றார். [௨]

இவைகளேயுடலெடுத்தபயனேப்பெற்றவிவைகளேயிகபரமுமெய்தப்
பெற்ற, வவனியின்மேருப்பொருள்கடானமீந்துாதிற்போதுபோக்கினு
மேயவத்தமாமா, லுவமையினுற்சிவபூசைபதனுற்காலமொருகணமாகி
லும்போக்கிலுறுதிபாமாற்,றவமதனுற்றன்றேமோயுப்பூசைதனக்குதவி
லதுசென்மசபலந்தானே. (௩)

மூன்னமியர்றிபதவந்தானிறைந்தவாணுள்பெற்றுளோனுயினுமெ
ன்முதல்வன்பூசை, தன்னிலொருகணமேனுமறுகுவில்வந்தண்புனல்
கொண்டேபோதீபோக்கப்பெற்றுே,னன்னவனேபுடலெடுத்தபயன்பெ
ற்றோனுமறநெறிதப்பாதவனுமவனேயன்றே, மன்னுசெல்வம்வாணுள்
பெற்றதற்குபபேறுவள்ளலார்பூசைபுரிமகிமைதானே. (௪)

கற்புரங்கூவிளமெளவற்செவ்வூமத்தைகரவீரம்வெள்ளெருக்குசெ
ண்பகப்பூ,பொற்புறுசெந்தாமரைவெண்டாமரைப்பூப்பொருந்துமிவை
கொடுசிவனேப்பூசைசெய்தே,நற்பொழுதுபோக்கினுனவனேசெல்வாய
ம்பெறுவாணுள்படைத்தபயன்பெற்றோனு, மற்பமுளபொழுதேனுமி
வைசெய்யாதானுயுள்செல்வம்படைத்தவெலாமவமதாமே. (௫)

இப்படிவேதங்கள்புராணங்கள்சொல்லுமீசன்பூசையிற்போதுபோ
க்கிடாதான், றப்பிதனுமெப்பொழுதுமதனகாலசங்கராசங்காாசனன

கோய்க்கே, பொப்பறியவபித்தியனேயுமையாள்கேள்வாவுயர்விசுவநா
தகணநாதாவென்னைச், செப்பருநின்கருணையினாற்புரப்பாயென்றுசிந்தி
ப்போனழியாதசெல்வன்றானே. (௬)

அன்னவேலதாயர்தந்தையுபசரிராலகட்டுறுகர்ப்பக்குழியிற்கட்டுப்
பட்டே, யெண்ணரியதுக்கங்களுற்பட்டேனியானென்னையுன்றனடிய
னெனவிநயந்தன்னிற், றண்ணளிசெய்வாய்சனனமரணமாகுந்தாவில்
கொடுநோயகற்றிச்சுகந்தான்றந்து, கண்ணருளாலொருவார்த்தைசொ
ல்வாயென்போனகடவுளருந்தொழுதேத்துங்கயிலைபெற்றானே. (௭)

எப்போதுங்கைப்போதுகொண்டே மேலாமிலிங்கபூசனைசெய்வேமென்
றுஞ்செய்வி, யப்போதுங்கர்மனமேயிறவிநோய்க்கோரமுதசஞ்சீவினித
னதாளியாதிமலகு, மெப்போவிலாதசெல்வங்கல்வியினானமுதவுவதுஞ்
சிவபூசைபென்றேசித்த, முப்போதுமிருநாளையேத்தலசெய்வோன்மு
த்திவீட்டினிலிருக்குமுதல்வன்றானே. (௮)

என்றுமனமகிழ்ந்துரைத்ததேவரெல்லாமீசன்பூசனையாயுக்கூட்ட
நதன்னை, நன்றுடனஞ்சலிசெய்தேதங்கடங்கணற்பதம்புக்கனர்பாவவா
யுக்கூட்டந, துன்றியிடுமவற்றைபெல்லாம்பாசத்தாரத்துச்சொல்லரியய
மதூதர்கல்லென்றார்த்துச், சென்றுரவுரவமுதலாநரகத்தீர்த்துத்தீப்பவ
த்தினனுபவந்தாற்றண்டித்தாரால. (௯)

எவ்விவற்றுமாராரேனுங்கணப்போதேனுமிகழாமற்சிவபூசையியற்ற
லவேண்டுமே, பாங்கறுசெய்யார்வானாள்வீணாள்பூசைபண்ணுமைதனை
க்கொல்லுமபாவத்தோடே, பேங்கமிறுகவாதலவேதியாக்கோறல்பசுவி
னிறைச்சிதனைநுகர்ந்திடுதல்தருதாரங்கூட, நீங்குதருமநுகருமாதர்
ப்போதலசெய்திடும்பாதகத்தினிலுநிமைதானே. (௧௦)

பிரமபூக்கேளென்பாழ்முனிவன்சொலவான்பெருகுமதிசயமிது
வேகலிகாலத்தும,வரம்வேண்டும்வாழ்வுநல்குஞ்சிவனைநாடிவழுத்தாமற்
பாவிகளாய்நரகிலவிழ்வா, ருரமுறுபத்தியிற்சோம்பலின்றிப்பூசையுஞற்
றினேன்சிவபதத்திலுறுதலிண்ணம், பரவுறுமிங்கிவற்றிலொருகாதை
கேட்டிபகாமகததேசவதிபதியோரவேந்தன். [௧௧]

புண்ணியத்தில்விருப்புடையோன்றொலையாச்செலவன்பூசையென
நோமும்புரிவோனிவேதனந்தான், பண்ணுமன்னநுகாதருமாகியமம்பூ
ண்டோன்பத்தியிலெப்படிபுரிந்தபான்மையாலே, யெண்ணரியசிவகணங்
கட்கதிபனாஞ்னெப்படிபூசனைசெய்துபெற்றானென்று, லண்ணலவன்ம
னையின்மாணிக்கச்சோதியரியலிங்கமொருகோடியமைத்திட்டானல். [ ]

ஆலயங்களமைத்தவற்றிற்பூசைசெய்யுமாசைசலவத்தான்பிரபூஞ்சவா
சைகீந்தான், சாலவேதான்றேம்பொருள்களெல்லாஞ்சங்கரன்பூசை

க்கெணவேதான்கொணடுய்த்தா, னேழுறுகாலங்களொருகணமதேனு
மலம்போகாதிரும்பூசையியற்றியிட்டான், சிலமிகுசைவசற்பாத்திரங்க
ள்பூசைதினஞ்செய்வான்வேண்டுவனதனமுமீவான். [௧௩]

வேறு.

மொழிந்தவிப்படியநாதிமுத்தன்பாலியற்றும்பூசை
யழிந்திடாவியமத்தாற்றுமரசனைக்காணவேண்டிக்
கழிந்திடாத்தவத்துஞானக்காசிபமுனிவன்வந்தான
வழிந்திடுகண்ணீரோடுமென்னவனெதிர்கொண்டானே [௧௪]

தெய்வமாமுனிவன்பின்னேவந்திடுஞ்சிவன்றன்னேசச்
சைவமாமுனிவரோடுமாசனந்தன்னிலேற்றி
மெய்வருமன்பினோடும்பூசனைவிதங்களாற்றி
வைவருவேலோனென்னமாதவன்மகிழச்செய்தானே. [௧௫]

கண்ணுதற்கன்பனானகாசிபன்றனைநோக்கித்
தண்ணளிக்கவிகைச்செங்கோற்றராபதிசாற்றுகின்றான
புண்ணியந்தனக்குமேலாமபுண்ணியந்தனைநாடிப
பண்ணுதற்கருளினாலேபகருதியடியேற்கென்றான. [௧௬]

காசிபன்சொல்வான்முன்னாகறைமிடற்றிறைவற்காற்றுந
தேசுறும்பூசைதானேயெவற்றினுஞ்சிறந்ததாமா
லீசனார்தருமந்தன்னையாற்றினோரெண்ணிலோர்கள்
வாசமார்சிவபதத்தின்மன்னிவீற்றிருக்கின்றரால். (௧௭)

யாவரேயெனினுமெம்மானிணையடிக்கமலந்தன்னிற்
றாவிலாப்பத்தியோடுஞ்சந்ததம்வந்திப்போர்க
ளோவிலாச்சனனத்துன்பவுவரிபைநீந்திபப்பாற்
றேவர்க்குஞ்சேரொணாதகதிக்கரைசேர்குவாரால. (௧௮)

ஒப்பருந்தருமஞ்செய்தபேர்களையுமையாள்கேள்வன்
செப்பரும்பூசைதன்னிலாயுளைச்செலுத்துவோர்க
ளிப்புவிப்பாவிவாணாள்வீணதாயேகுமன்றே
யப்பனைப்பூசிப்போரையாயுளைவணங்குவோமே. (௧௯)

அனையவர்தமைவணங்கக்கிடைப்பதுமரிதேயன்றே
தினமுநம்வாணாளன்னலபூசையிற்செலுத்துவோமா
லினையதேயன்றிவேதகருமத்தொன்றிலலையென்றன்
மனமுமங்கதனிற்செல்லுகினறதான்மன்னரேறே. (௨௰)

சென்னமாம்விரணந்தீர்க்குமருந்திதுவன்றியில்லை
யனமுடையவன்முன்னோர்க்குமபீட்டங்களளிப்பதிதே
யெனுமிதுதன்றால்யாமுமிதுபுரிந்திடவேவேண்டுங்
கனைதசேர்காசிபாசத்துயடிபைங்கரனைப்போற்றல. (௨௧)

பொருள்விசுவேசனன்னபூரணித்தாயைப்போற்ற
லருள்செய்வீரேசன்பூசையாற்றியேகாலம்போக்கல்
புரிதரக்கிடைத்தாற்சென்மகோடிசெய்பாவம்போக்கித்
தெரிதரும்புனிதவீட்டிற்சேர்ந்தினிதிருக்கலாமே. [௨௨]

மந்திரத்ததிகாரதன்மனுவந்தமனுவுக்குள்ளே
முந்துமைந்தெழுத்தேமேலாமதைமுன்னின்முத்தியாமா
விந்தமந்திரத்தின்மேன்மையாஞ்சொலவெளிதோவேதத்
தந்தணன்முதலோர்சென்மப்பிணிக்கருமருந்தென்பாரால். [௨௩]

ஓதுமிங்கிதுவேமுத்தியுறுவதற்குபாயமாகு
மாதுபாகனைப்பூசித்துமந்திரமிதுவேயெண்ணிற்
றீதுறுகாலன்றன்னைச்செயிப்பதற்கையமின்று
லாதியேமகேசமந்த்திஞ்செயவெனும்பெயர்களாய்ந்தே. [௨௪]

எனக்குநின்பூசையுன்றனெழுத்தைந்துமெண்ணுமாசை
கனக்கவுற்றுளதேயென்றுகருதுதல்காயசித்தி
மனத்துறுமபீட்டமெல்லாம்வந்தவாமந்தவாய்மை
நினைத்திடப்பெறுதன்முன்னர்நிகழ்தவத்தியைந்ததாமே. [௨௫]

சங்கரன்பூசையாகுந்தருவுறிற்கிடையாதுண்டோ
விங்கிதுவிடயாஞ்சிற்கின்னமுதென்னலாமா
லங்கதுபுரிதற்குற்றசாதனமதுதான்பூதி
துங்கமாமுருத்திராக்கந்துளிர்வில்வத்துடனியைந்தே. [௨௬]

அருச்சனைபுரியிற்சீவன்முத்தியந்தணர்களாவா
மரித்திடுகாறும்பூசைமாற்றிடாதாற்றல்வேண்டுஞ்
சரித்திரமிதனைச்செய்யானரககோடிகளிற்சார்ந்தே
தரித்திரம்பொருந்தித்தீயசன்மமுற்றுழல்வன்றானே. [௨௭]

அன்னையருதரவங்கிரர்குறற்கஞ்சுகின்றே
னென்னையாள்கவுரிபாகன்பூசனையியற்றுவானு
னன்னெறியிதனைச்செய்வான்ஞானவான்பாவிசெய்யான்
பன்னரும்பூசைசெய்யார்பன்றியோகரமோகாயோ. [௨௮]

பிரவஞ்சமலத்தையுற்றேன்பேசுறுப்பாவியீயு
*நரகமாகுஞ்சென்மகாடுறும்வெப்புத்தாகம்
பருகுநீராற்றீராதுபாசிவன்பாதம்போற்றுந்
திரவமுதத்தாற்றீருந்திரும்பத்தாகஞ்சேராதே. (௨௯)

பாருலகாதிவேகப்பாந்தளாற்கடியுணஞ்ச
மாரியன்பரமன்பூசையமுதலாற்றீர்த்திடாதா
லூர்வனமுதலாவுள்ளவிலங்குமுள்படவேதுன்பஞ்
சார்வழிச்செல்லாமாந்தர்சகப்பணிகடிக்கச்சார்வார். (௩௦)

---

* நரகாம்-நரகபாதலம்.

அற்புதமற்புதந்தானிதுவன்றேமணிகராவா
வற்புறுசனனமோடுமரணமாமபாரதன்சூழ்ந்து
முற்படக்கல்விக்கல்விக்கடித்திடமுடங்குகின்றார்
சிற்பரனெலலாமவலலசித்தனைநதேடிலாரே. (௯௧)

கடவுடன்பூசையின்றிக்கதிபெறற்கேதுவிலலைத்
திடமுதலின்றிலாபஞ்செட்டியாற்பவிப்பதுணடோ
விடயத்திற்புகுவதல்லாலரவணிமேவாரமாநதா
தடையுறமண்பெண்பொன்னினுசையிற்சாரநதுதானே. (௯௨)

ஆனந்தகனர்தம்பூசைதரிசனமாற்றுவோாகண
ஞானந்தான்பெற்றானநதமுத்திபுணணுவாராற
றேனந்தண்கொன்றைபாரசஞ்சேவடிபோற்றியின்ப
பானந்தேர்தொண்டாபாதமபரவுவேன்பரவுவேனே (௯௩)

அம்பிகாபதிதன்பூசைபமுதபானத்தைதமாநத
ரின்பமென்றறிபமாட்டாரிருணடடாபாபந்தாலே
யும்பர்கோன்பூசையேகதேசத்திலொருவாசெய்வார்
நமபியேபத்திபூண்டுபுரிதருநலத்தினரே. (௯௪)

ஆற்றுறுந்தன்மாதன்மமறிதருமக்கட்பேறெறப்
பேற்றினுமருமைபெறபபெறற்கருமபேறுபெற்று
மேற்றரன்பூசைசெய்பாபன்றியேயெமமனோக்குக்
கீற்றிளம்பிறையான்பூசைகிடைக்கொணுநியமாமே. (௯௫)

நரபதியிதுநமக்கேநவநிதியாகுமன்ன
திரமுறுதிதுவெப்போதுந்திரமுறுநிதியங்கண்டாய்
பிரமன்மாலாதிதேவாபெறுவதற்கரியதன்றோ
வாமுறுமிதுதான்வேதநிதிகதிவழங்குந்தானே. (௯௬)

இகலறுமிதுதான்கல்லாவிருந்தவனருளிலுண்டாந்
தகவுறுமீதுமேலாந்தருமமென்றறிதியென்றே
மகததேசத்திற்கீர்த்திகேதுவாமனனர்மன்னர்க்
ககமகிழ்ந்திடவேகாசில்காசிபனறைந்தானன்றே. (௯௭)

ஒன்பதாவது கீர்த்திகேதுச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௭௫.



பத்தாவது,

# சித்திரகுத்தர்பிரலாபச்சருக்கம்

வேறு.

உலகையீன்றவுமைதளராமுலையுடையாரையிமையோர்புடைமேவவே, யிலகுசோதியெம்மானொருபாலுற வெழில்கொள்வீரசிங்காசனத்தோங்கியே, நிலவும்வாலொளிப்பானுவைப்போலுறுநெடியமேருவையேவலம்வந்திடும், கலவமாமயிலேறியசேவகன்கமலச்சேவடியேகதியாமரோ.

முனிவன்யாக்கினவற்கியசொல்வான்மறைமுற்றுணர்ந்திடுகோசியன்றன்மொழி, யினியவாய்மைமகிழ்கீர்ந்திகேதுவாமிசைகொள்வேந்தனியம்புகின்றான்சிவன், புனிதலிங்கமகிமையருச்சனைபுரியுமேன்மைவிபூதிமுப்புண்டரம், வனையுங்கண்டிகைமாலைதரித்திடும்வகையுஞ்சொல்லெனமாதவன்சொல்கின்றான். (௨)

நன்றுநன்றுநரபதிகேட்டியானுட்டிலுற்றவறிவின்மையோர்களுமின்றுகேட்டெய்யுமாறுவினவினையீதுதானுத்தமோத்தமமாருமே [ததால
துன்றுமீங்கிவைகேட்டனையாலிவைசொல்லாநந்தமக்கானந்தஞ்சூழ்குன்றமன்னநல்லோர்சகவாசத்தாற்கூடுமிந்தவினைவருங்கொள்கையே.

சாற்றுமேலவர்தங்களுடன்சகவாசமைந்தருத்தமெனலாகுமாலேற்றமாகியபாவுந்தருகையாலிங்குணக்கிதுசொல்லத்தகுவதாற்போற்றுமீங்கிதுநற்கதிக்கேதுவாய்புகலுகின்றசிவகதைப்புண்ணிய [னா
மூற்றமாகவுரைப்பதற்கென்னுளமுவகையுற்றதென்றேதுதன்பேயினை

வாய்த்தவிக்கதைமங்களநல்குமால்வாய்திறந்துசொலுமிடத்தம்பலக்கூத்தன்வந்துகுடிபுகுவானென்றேகுலவுமம்பிகையையங்கரன்கந்தவேளாத்தனுநந்திபிங்கிமாகாளரோடருங்கணுதிபர்பாருமவந்திண்டுவார்தீர்த்தமாந்திபாவுஞ்செறியுமிச்செயலெம்மான்கயிலைக்கணுஞ்சேருமே.

பூவைபாகன்கதைபுகல்கின்றதேபுனிதமாகுஞ்சிவனைச்சிந்திப்பதே, மேவலாற்சிவபூசையுமாமுத்திவித்து மாகுமுயிர்க்குச்சென்மத்தைதயே, தூவும்வித்தைக்கெடுத்திடுஞ்சொதமுறாயவிந்தப் பொருள்கள்ளார்யோந்தராற், பாவமும்வெள்ளந்தீயிலழிந்திடாபரிந்துநல்க வளர்ந்திடுமுண்மையே. [௬]

நம்பனம்பைநம்முன்வரற்கேதுவாநல்லவித்தையிதுவலதில்லையே சம்புவந்தனையாலெளிவந்திடுஞ்சங்கரன்பததூளியின்மூழ்குதலெம்பிரான்சரிதத்தமுதத்தையேயிமயநங்கைகணபதிசெய்யவேளும்பர்நந்திகணங்களுமுண்பதேயுமைமணாளனருளும்வந்தோங்குமே.

அந்தநற்கதையின்னரமுதமேயானந்தப்பெருக்கத்தைப்பூரித்துக்கந்திடுமந்தவானந்தமேமுத்திசத்தியஞ்சத்பவித்தியமும்மதேவந்திடுமந்தவானந்தமேசிவானந்தமானமகானந்தமாகுமே [ரே [அ]
யிந்தவானந்தமுத்திக்குமேன்முத்திபில்லைபமிதுவேயுண்மையுண்மை

ஆனந்தந்தருகின்றகுணமலாலன்றியொன்றுமில்லைப்பவமாகிய, கா னந்தீத்திடுங்காலாக்கினியதாங்கருதுமிக்கதைத் தெள்ளமுதம்மெனு, ஞானந்தன்னையெல்லார்க்குஞ்சொலத்தகாநல்லசீலத்தவர்க்கு நவில்வ தே, வானமேவுறுமிப்பொருள்பெற்றுளோன்வடதிசைப்பதிவாழ்வுமதி த்திடான். [௯]

இனையமெய்ப்பொருள்சங்கரனன்பர்க்கேயெய்துமற்றையர்க்கெய் தற்கரியதே, வினையிலேசெலுமைம்புலத்தீயினால்வெந்துவெந்துமெலிந் திரந்தாகமு, மனைகருப்பந்தொட்டேசுடுந்தீப்பிணியிழலுமிக்கதையார முதத்திலோர், தினையளவுபெற்றுளுடன்றீருமேற்சீவன்முத்திபரமுத்தி சேர்வரே. [௰]

பிறவிசாகரநீந்தச்சிவகதைப்பிறங்குநாவாய்தனைப்பெறவேண்டுமே, யறவனார்கதையோமறையாகமமரும்புராணங்களுக்குமரும்பொருள், க றைமிடற்றெம்பிரான்சரிதஞ்சொலுங்காதையின்பெருமைக் கொருமட் டிலை, யிறைவனார்தம்மிலிங்கப்பெருமையையின்னதென்றெவர்சொல்ல வல்லார்களே. [௧௧]

உம்பர்போற்றுஞ்சிவக்குறிமேன்மைதா னோதுவார்மூன்றுலகினுமி ல்லையா, லம்பிகைக்குப்பதியிலிங்கத்தின்சிரகத்தில்வாங்கிலடங்குதலில் லையே, வெம்புமர்தகர்கந்தகன்மேன்மையைவேதம்யாவும்விளம்பவொ ண்ணாதகே, விம்பருற்றசனங்களெல்லாமுய்யவிலிங்கரூபமதாயினனெ ம்பிரான். (௧௨)

அந்தலிங்கத்திற்பூசனையாற்றிடிலகத்துவந்தருள்செய்வனெம்மா தியே, முந்துமங்களரூபமதாகுமான்மொழியுமங்களம்யாவுந் தருமென் றே, நந்துநாகர்களாதிபர்பூசிப்பார்நானுமப்படிபூசனைசெய்வனா,லெந்தை யுரிலிங்கத்திற்சிறந்துளதினியநின்மதைமாலிங்கமென்பவே. (௧௩)

வானான்பூசைமகாலிங்கத்தினில்வாய்த்தகூவிளநற்றளிர்மற்றுள காணும்பச்சிலையுங்கொடுபத்தியாற்காலையிற்றிருநீறுடுகண்டிகை பூணுமன்பிற்புனைந்தேயருச்சனைபுரிகுவோனவன்புண்ணியமூர்த்திதன் பேணுநல்லருள்பெற்றிமையோரொடும்பெருகுமாதவருந் தொழும்பெற் றியோன். (௧௪)

நமனுமாங்கவன்றன்னைவருத்திடானரையுமூப்புமின்றிக்கதிசேர்கு வா, னமருநற்றருமங்களியற்றியேயமரர்மாதர்தம்போகங்கணச்சுதல், க ணமயிலர்தசுவானப்புணர்ச்சியைக்காதலித்திடுங்காட்சியதாகுமா,லுமை யொர்பாகனிலிங்கார்ச்சனைசெய்வோனொழிவிலாமுத்தி வீட்டின்பஞ்சே ர்வனே. (௧௫)

நல்லசிந்தையுடையோன்சிவார்ச்சனைநாளுநாளு மெய்யுறுவான்பவ த், தல்லல்கூருமுனந்தேனெவிரும்புவானவற்றிலேயர் கதையுண்டதுகே ட்டியான்மல்லல்கூர்விக்கதனைச்சொலார்ச்சனைசெய்வான்றுமெய்ந்தனொருவன்

வடிவுளோ, னெல்லுமல்லுமரிவைபார்ப்புல்லுவோனெல்லையில்வைத்தல்
லல்செயிச்சையான். (௧௭)

இனையகாமமயக்கத்திளமைபோயிறுசேர்தரு மூப்பும்வந்தெய்திற்
று,லினையபோதுமிளநலமாதாராசைமேற்கொண்டுவிட்டிலன்மேவுத,ற
னையுந்தன்மனையன்றியின்மாட்சியிற்சாருமுல்லைநல்லார்கற்பழித்தனன்,
வினையினால்வருந்தீப்பிணிமேவிடவிரணமுற்றமெய்வேதனையுற்றுளான்.

மரணகாலமும்வந்ததடையலார்வந்தடைந்துவளைத்தனர்காட்டு
ளோ, ரரணமுற்றவெங்கானத்துப்போயினாரசன்றானு மவணடைந்தன
னரோ, கிரணமுற்றவெங்கோடையின்வெப்பமுங்கெட்டிலாப்பசித்தீக்கி
ளர்வெப்பமும், விரணமுற்றவுடற்பிணிவெப்பமும்வெதுப்பநொந்துவி
ழுந்துபுலம்புவான். (௧௮)

மனையுமாதரும்யானையுஞ்சேனையுமந்திரத்தவருந்தந்திரத்தரும்,வி
னைசெய்தாசியர்தாசர்கள்கூட்டமுமெத்தைகட்டிலின் மேல்விளையாட்
டமுங்கனருமப்பசுக்கோட்டமுமித்திரர்காவலாளர்களுட்டமுமேடை
யும், புனையுமாடையுமாபரணங்களும்போனவெங்கென்றுநின்றுபொரு
முவான். (௧௯)

பசிக்குந்தாகந்தனக்குந்தணியவேபரிவினன்னம்புனறருவாரின்றே,
பொசிப்புத்தானிலைவேளைக்குதவவேபொருள்கட்டிப் புதைத்தவம்
போயவே, பசைக்குமாடைகழித்துப்புனைந்திடவாடைவேறொன்றுதா
னுமற்றேனரோ, விசைக்குமித்துபரொப்பியுமாதாரின்பநாடுமென்னெ
ஞ்சென்றிரங்குவான். (௨௦)

இனிபிறந்தொழிந்தேகுதலின்றியேபெய்வழித்துறற்கென்றென்று
நோக்குவான், றனியமன்புரம்போம்வழிதன்னிலேசாற்றிரும்பின்முள்
வாணிரையென்பரே, பனைகள்போனெடும்பாம்புகள்வாயையங்காந்து
பார்த்துப்பகைத்திடுமென்பரே, முனைகள்சேரிருப்பாணிமுனைகளுமுதி
ரக்காய்ந்தநெருப்பெழுமென்பரே. [௨௧]

அறுத்திடும்பிண்டிபாலமநேகமாமசிகளோடும்வசிகளநேகமாம், வ
றுத்துக்கொட்டுமணற்பரப்பாநெருப்பாற்றுடன்மயிர்ப்பாலமுண்டாமை
போற், கறுத்திடுமிருண்மூடும்வழியுண்டாங்கடினமங்கதிலெப்படிசெல்
குவே, னொறுத்துக்காலபடரடித்தீர்ப்பரேயுறவுசேர்நண்பருமொழிந்தார்
களே. [௨௨]

ஐயகோவினியென்செய்குவேன்கெட்டேனன்னையேயப்பனேயெ
ன்றரற்றியே, வையமாண்டிடுமன்னவன்முட்செறிவனமதிற்புகுந்தேயுற்
றுமாண்டனன்,மெய்யிலுற்றவிரணதூர்க்கந்தத்தால்மின்னனார்களும்விட்
டொழிந்தேகினார், தையல்பாகனிலிங்கசமீபத்திற்றழுவுங்காலவன்மேல்
வந்துசார்ந்ததே. [௨௩]

அம்புயமதனின்மேவுமன்னமுமளிகடாமு
நம்பெயர்முழக்குமாங்கட்செல்வதுநாரியாங்கே
பைம்பொற்சங்கிலியினூசலாடுதுமெனப்பகர்ந்தே
யெம்பிரானவள்கைப்பற்றியெழில்வனமதனில்வந்தான் (௩௪)

வந்தவாகிரணம்வீசுமாணிக்கவுப்பரிகை
முந்துசிங்காதனத்தின்மஞ்சமேன்முறையினேறி
புந்திமேயுந்தியாடுமூசலினேறியாடிப்
பந்தடித்தாடினார்கள்பிரளயமபலவாயிற்றால. (௩௫)

ஆங்கதிலநேககோடிசிருட்டிகளமைந்தவன்றே
பாங்குறுபரைதனோடிப்படிபரனமகிழ்ந்துதானே
தாங்குறுவிளையாட்டாகியிருந்தனன்றன்மைபாக்கி
லோங்குமானந்தக்கூத்தர்க்குற்றிடுமெவிளையாட்டென்னே. [௩௬]

இருந்தயசத்திரூபரெழிற்பரப்பிரமரூப
ரொருபுராதனாநீலமபொன்னிறமபெற்றோருருலோகாதீதா
வருமவிரூபாக்காவில்வவடிவாமெய்ஞ்ஞானந்தச்
சொரூபராமிவர்க்குமுணடேசுகவிளையாட்டுத்தானே. (௩௭)

அக்கினிபானுதிங்களனிலமினமருந்துவாதி
முந்நானிணைதன்னான்முறைதவறாமலுற்றா
தக்கவனிறஞ்சோஞானசாத்திரமயாரேதோவா
புக்கவனருளான்மாபோனுதிமேபார்புனிதானோ. (௩௮)

சங்காரகாலந்தன்னிலரிமுதலவானோதாங்க
ளிங்காருமிலாமலவீட்டுமினியவானந்தக்கூத்தா
சிங்காரரவர்தம்பாதஞ்சரணெனச்சேர்ந்துளோமபார
மங்காரணர்கடாட்சத்தாளைரமரணமற்றேம. [௩௯]

சிவசிவவென்றொருக்காற்செப்பிமெவனேயண்ண
லுவகைசேர்கோயிலாவனுரைமறையவன்சீர்தேரார்ப
பவமுதலியசெய்தாட்டுமெபராபரசறுவோர்க்கிட்டர்
நவாடரென்றுமேவதநவிலுவார்ப்பணிவனயானே. [௪௦]

வளர்சடைமுடியின்வில்வமாலையான்வோவையாலே
கிளர்தருகங்கையாதிகேடிலாநதிகளாக்கு
மளவிடற்கரியான்பாதவம்புயத்தளியென்னுள்ள
முளமிசையவனைத்தியானமூனுற்றிலான்புலையனாவான். [௪௧]

அன்னவன்கற்பகாலநரகினில்வாழ்வனன்றேன்
றுன்னியகுலமுமீனக்குலமெனச்சொல்லலாகு
மென்னையாளிறைவன்பாதத்தியானநாமங்களைத்தல
பன்னரும்பூசைசெய்தல்பணியவர்ப்பணிவர்வானோர். (௪௨)

அன்றியுமவரேசெல்வமனைத்தையுமுடையராவர்
துன்றியவவர்தம்பாதநூனோக்தலேமேற்கொள்வேங்
கொன்றைவேணியர்க்குவில்வக்கொழுந்தளிர்சாத்திப்பூசை
நன்றுபசாரத்தாற்றிடணமுஞ்செய்துநாளும். (௬௩)

நருமதைக்கரைக்கண்வாழ்வோர்நரனில்த்தோர்கட்கெல்லாந்
திருமிகுமுடியிற்சூடாமணியெனுஞ்செல்வரென்றே
பருதிசொற்கேட்டபன்மாவதிமிகப்பரிந்தேயீசன்
றருகதையிரவிநீயேயிரவெலாஞ்சாற்றுயென்றாள். (௬௪)

அன்னவாறுரைத்திருந்தேகாலையிலகன்றான்வெய்யோ
னன்னதிமுழ்கிப்பூதிகண்டிகைநயந்தணிந்தே
மின்னனாள்பூசையாற்றவிரும்பினள்கோயிலுற்று
முன்னியபூப்புத்தோன்றத்துயரொடுமனைக்கட்சேர்ந்தாள். (௬௫)

போயினாள்பூசையாசைபொருந்தினண்மனத்தாற்செய்வா
ளாயினாணன்குநாளுமயின்றிலாளேந்தாநாளிற்
றூயநீர்மூழ்கிக்கோயிறுன்னியைந்தினத்துமாற்று
மேயபூசனைகளெல்லாமொருங்குடன்விதியிற்செய்தாள். (௬௬)

அந்திப்பூசனையுமாற்றியாங்குற்றாளநதப்போதில்
வந்துற்றான்பரிதிகண்டான்வணங்கினாடந்தைதாயு
முந்துற்றகுருவுநீயேயருச்சனைமுடங்கினோர்க்குப்
பந்தித்தவிதிகளோதுகதியேய்துபகர்தியென்றாள். [௬௭]

வினவிடவெய்யோன்சொல்வான்விளங்கிழாய்விமலன்பூசை
தனையிழந்துய்ந்தாருண்டோசஞ்சீவிதன்னைநீத்துப்
பினையொருமருந்தாலாவிபிழைத்தவருளரோனுண்டா
நினைவிலாமூடர்நீப்பரவர்களேமரநிகர்ப்பர். (௬௮)

கடவுளர்ச்சனைவிடுத்தறன்னினுங்கல்விலேதன்
முடியினைமோதிச்சாதன்மொழியினன்றுங்கோகத்தி
கொடியதோர்பிரமகத்திகுருபன்னிநலங்களுண்ட
லொடிவில்பூசனைவிடுத்தோன்பவத்தினுக்கொப்புறாவே. (௬௯)

சங்கரன்பூசைதன்னைவெளிதறஞ்சாருமன்றே
யங்கதுசார்கலார்தூற்சனரவராகுவாராற்
றிங்கள்வேணியனைப்போற்றவொட்டாசெய்பவங்களென்ப
புங்கவன்றனைச்சிந்தித்தாற்போகுமப்புன்மைதானே. (௭0)

பவவினைகற்பகாலஞ்செய்யினும்பவமின்றுமாற்
சிவனருச்சனைவிட்டோனைத்தெரிசிக்கிற்பயமக்கே

யுவமையிலானைப் போர்கா லருச்சிக்கி லுவரியான
புவியினிற்பிறப்புநீங்கும்பவவெற்பும்பொடியாமன்றே. [௫௧]

நன்மைவர்த்தனை பெற்றோனேயருச்சித்துநலத்தைச்சேர்வான்
புன்மையாலிழந்துளோனே பதிதன்புண்ணியனை பூசிப்போன்
றொன்மைசேர்புதுமைக்காளுதயிதிவெலான் றுதொல்லுவங்கேளாய்
பண்மைசேர்பாவநீங்குமிவைகேட்கும்பரிவினோர்க்கே. (௫௨)

வேறு.

சாரலோங்குமிமயத்தடவரைச்சாரணனொருவன் சஞ்சரித்துளான்
மாரனுர்வசத்தாற்றன்னிளநலமாதினோடுமயங்கிமுயங்குவான்
நீரவேணிவென்றனையருச்சியான்சிவலிங்கந்தெரிசித்திலன்கூவிள
வாரமீதிலுஞ்சேர்ந்திலன் றொண்டரைமருவிலானவரோடுறவாகிலான்.

சுரதலீலையரிவைதன்றோணலந்தோயுமின்பந்தனையேசுகானந்த [லான்
விரதமாக்கொண்டுகாலங்கள்போக்குவான் மின்னனையொருகணநீங்க
சரதமாஞ்சிவபூசைசிந்தித்திடாச்சாரணனொருநாளவ்வனத்தினில்
வரதனுர்மகிழ்கூவிளநீழலின்மாலைவேளையின்மாதொடும்வந்துற்றான். [ ]

ஆங்குவந்தனர்தொண்டரொருவர்தாமந்திவேளையின்மாப்பிரதோ டத்திற், பாங்கிலாத்துட்டப்பாவியவன்றனைப்பார்த்தனர்மடப்பாவை யோடுற்றுளா, னீங்குவந்தவெனைக்கண்டுநாணமேயெய்ந்திலான்பயமுஞ் சற்றுமெய்திலான், நீங்குசேரிந்தப்பாவியைக்காணயான்செய்ததீவினை யென்னெனச்சிந்திப்பார். [௫௫]

போவதெங்கினியிந்தவில்வத்தின்கீழ்ப்பூவைபங்கினிலிங்கமொன்றே ய்ந்ததே, மேவியேகொய்தருச்சனைசெய்திடமிக்கமென்றளிருந்தழைந் துற்றதே, யாவலாய்பீடகஞ்செயக்கங்கையாறுமஞ்சனமும்மருகுற றதே, தாவில்சானுவிக்கூலத்தருச்சனைசங்கரர்க்குப்பிரியமதாகுமே. [ ]

இந்தவில்வமந்தாகினிவீசுகாற்றேய்ந்தவாரித்திவலையினிக்கவே, மு ந்துபூந்தளிர்வாடாதிருந்ததிம்மூலத்தேமறைமூலத்தைப்பூசித்தா, லந்த மற்றிடுமங்களமாகுமென்னதிட்டமெப்படிப்போவதறிந்திலேன், வெந் துயர்ப்பவமுன்னமென்செய்துளேன்விக்கினஞ்சிவபூசைக்குமேவவே.

இனியதோர்பரன்பூசைக்குவிக்கினமெங்கிருந்துவந்தெய்தியதெ ன்செய்வேன், றனிவருந்தலைத்தன்மங்கட்குத்தடைசாருமென்பர்சிவா ர்ச்சனைலாபந்தா, னனிவரற்கிவர்நீங்கிடவேண்டுமானலலகாலமக்குவ ந்தெய்திடிற், பனிவருந்திங்கள்வேணியன்பூசனைப்பாக்கியங்கள்பலித்தி டுமென்பவே. [௫௮]

இந்தவேளையிற்பூசைக்குவிக்கினமெழுதிடும்விதியைச்சுடவேண்டு மான், முந்துபுண்ணியமெய்திலிக்காலத்தின்முதல்வன்பூசனைவாய்ந்திடு

ம்வாய்க்குமேற், பந்தமற்றிடுபாசங்கணீங்கிடும்பாக்கியஞ்செய்திலாவெனக்கெய்துமோ, வந்தமற்றதருமத்திஞேர்கட்கேயந்திப்பூசைபுரியக்கிடைக்குமே. (௫௯)

சனனந்தோறும் பகல்களிழைத்துளார்சாயங்காலத்தருச்சனைசிந்தியார், மனமயக்குறுபாவத்தவைவயர்மலநிறைந்திடுபொண்டவுடலுக்கே,யினிதினிச்சைகொள்வோரந்திவேளையி லீசன்பூசைக்கெங்கேவிருப்பெய்துவார், புனிதன்பூசையிமிர்தமுண்டுய்ந்திடார்பூவைபோகவிடந்துய்த்துமாய்வரே. [௬௦]

அரியபுண்ணியமாமஞ்சனத்திஞலண்ணல்பூசைநிதானங்களைக்கொள்ளலா, முரியபூசனைமஞ்சனமின்றியேயோதுமுத்திநிதியங்கிடைத்திடா, தெரிதரும்விசுவேசனருச்சனைசெய்யவிக்கினஞ்சோர்ந்ததெப்பாவமோ, பிரியமாப்பிரதோடதரிசனம்பெற்றுளார்சன்மசாபல்யராவாரே.

அண்ணலார்சிவலிங்கதரிசனமருச்சனையொடுதோத்திரமாற்றலார், கண்ணிஞெடுகைகரக்கிற்பயனென்னுமென்றுகாதல்செயன்பர்கவலுற்றே நண்ணிநின்றிடும்போதினிற்கூவிள நன்னிழற்கணுறைசாரணன்மகிழ், பெண்ணினல்லவள்காதலன்றன்ஞெடும்பேசுவாளந் தரத்தில்வந்தோமென்றே. [௬௨]

குளித்திடுந்தண்புனல்வத்திரமெங்கேகுளிருஞ்சந்தஞ்சுகந்ததாம் பூலங்கா டளிர்த்தபுட்பசயனம்பணிவகைசாரமா மன்னவர்க்கங்கடாமெங்கே, யளித்திடப்பெறுவார்தமைக்கண்டிலேனுமெனப்புகர்ந்தாளந் தப்போதினிற், களித்தசேடியர்நீகவலேலெனக்கைக்கொண்ட வன்னவையாவுங்கொணர்ந்துளார். (௬௩)

அந்தப்போதிறகற்பூரசசுடம்
வைகாட்டியே, யிந்தப்போதங்குமிங்குந்திரிந்ததாலின்றுபாணித்தவாபொறுப்பீரென்ருர், வந்துசாரணன்ருன்வில்வமூலத்தில்வைத்தயாவையுநோக்கியம்மாதரைப், புந்தியால்வெகுண்டே தன்மனைவிக்குப்புகுந்தியாவையும்பார்த்துக்கொள்வாயென்ருன். [௬௪]

என்றபோதிலுடனெழுந்தேயவளித்தனைப்பொழுதுந்தாழ்த்ததென்னென்றே, நின்றசேடியர்தங்களைக்கோபித்தேநிறைந்ததீபத்தொளிகள்பரப்பிஞள், சென்றுபார்த்தவையற்பமெனக்கொடேசெறுத்தம்மாதர்தம்மேல்வெறுப்பாலிவை,யொன்றுங்கொள்கிலேனென்றுருகுடச்சலமுறுஞ்சலத்தோடிலிங்கத்திலூற்றிஞள். [௬௫]

கலவைச்சந்தனச்சேற்றையிறைத்தனள்கமழும்பூந்தொடைகைக்கொண்டெறிந்தனள், சலவைச்சேலைகளும்மணிப்பூண்களுஞ்சார்ந்தலிங்கத்தின்மேல்விழவீசிஞள், பலவகைக்கறியுஞ்சுவையன்னமும்பாத்தி

ரத்தோடெடுத்துமுன்கொடடினுள், குலவுகின்றதன்சேடியர்மேலவை த்தகோபத்தான்முகங்குப்புற்றுவீழ்ந்துளாள். [௬௬]

கண்டசாரணனோடானன்பருங்கையெறிந்துநகைத்திறும்பூதுற்றார், தொண்டனூரவ்வவிலிங்கத்தின்முன்விழுந்தோகைதன்செயல்பார்த்தன ர்சொல்வாரற், கெண்டையங்கணிவளுறுங்கோபத்தாற்கிடைத்திடும் பொருள்யாவையுமேகொடே, யண்டர்நாயகனைப்பிரதோடத்திலரியபூ சனையாற்றினளாமரோ. (௬௭)

சென்மந்தோறுமிவள்சிவபுண்ணியஞ்செய்திருந்தவளாமென்றுசிந திப்பார், தன்மமேவுமரம்பைகொல்கந்தர்ப்பர்தையலாள்கொலிவடவந தானென்னோ, கன்மமாருருவாய்ந்ததுலோகசகாயத்தாலருள்செய்திட ல்காணென்பார், வன்மவேனேவென்றூரந்திப்பூசனைமாதிவட்குநன்குவ ந்துவாய்த்ததே. [௬௮]

அருங்கற்பூரத்தின்றீபமமைத்தனளடவித்தீபவக்கானிற்கிவளுடல் கருங்குழற்செய்யவாயிவட்கண்டனன்கடியபாவங்கள் யாவையுங்கண்டி லேன், சுருங்குகின்றமருங்குறன்கோபமேசோதிபூசைக் குதவியைச்சூ ழ்ந்ததே,விரும்பிடும்பிரதோடதரிசனமேவிடான்சென்மம்வீணெனலா குமே. [௬௯]

பாவிதேகம்புவிக்கொருபாரமாம்பகருமாங்கவனைக்கண்டபோதி லே,பாவிவாங்கியமபடர்கொண்டுபோயடர்த்துரப்பிநரகினிற்றள்ளுவார், மேவுதூதர்கடேண்டிலிற்கோத்திடமென்றசைப்பொதி மீன்போற்றுடிப்ப ரே, தேவதேவனையேபிரதோடத்திற்சேலபுட்பங் கொடுபூசனைசெய்து ளோர். [௭0]

வெய்யபாவக்காரவோடடார்நிறைமிக்கசென்மக்கடற்கரையேறு வா, ரையராங்கவரைத்தரிசித்துளோரளவிலாத்துன்பந்தீர்ந்தின்பஞ்சே ர்வரே, செய்யும்யாகதவயோகத்தாற்பயன்சேர்வதென்பிரதோடத்திற்பூ சையாற், பொய்யில்போகமெலாநுகர்ந்தேமுத்திபொருந்துவாரெனவன் பர்கொண்டாடினர். (௭௧)

முப்பதாவதுபற்மாவதிச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧௪௪.



முப்பத்தோராவது,

# பிருங்கியுத்தரச்சருக்கம்.

வேறு.

மல்லலுற்றிடுகாசியம்பலமதுரைசேதுமறைப்புன
நல்லஞானியர்சேர்குடந்தைநன்னகரருச்சுனபுரமுடன்
செல்லநீர்த்திகழ்மலையிற்செலவேலினைத்திடுசிந்தையோ
ரல்லலுற்றபிறப்பிறப்பிலலைந்திடார்கதியடைவரே. [க]

சிலயாக்கினவற்கிமாமுனிசெப்புவான்சிவபத்தர்தா
மாலையாம்புரிபூசைவிக்கினமின்றிவாய்த்திடுமோவெனுச்
சாலநின்றுவிசாரமுற்றனர்கங்கையங்கரைசார்ந்திடு
மேலமுற்றிடுவில்வநற்றருவிதனையொப்பதுகண்டிலேம். [உ]

இங்கணுற்றவிலிங்கமொப்பொரிலிங்கமில்லையெனுமகிழ்ந்
தங்கணுற்றனர்விக்கினஞ்செய்தவவர்கண்மேன்மிகுகோபமாத்
தங்குகின்றதோர்சாரணன்பணிதானியற்றியதாதியைப்
பொங்குகோபமொடேயழைத்திவைபுகலுகின்றனனென்பவே. [ங]

நீபரிந்தருள்போகபண்டமியாவுநேரிழையிங்கிவள்
கோபமுற்றனள்வாரிவாரியிச்சிலையின்மீதுகுவித்துளா
டாபமுற்றிடுபோதுவந்திலைதாமதித்தனைசாலவே
சோபமுற்றனளென்றுளான்சிவபத்தர்நின்றிவைசொல்லுவார். [ச]

இந்தலிங்கரைமுந்துகண்டிலனினிதுநான்றரிசித்திடில்
வந்தவிப்பிறவித்துயர்க்குள்வருந்திலேனின்றுகண்டிடத்
தந்தபுண்ணியமெவைகொலோபுருடார்த்தநான்கையுஞ்சார்ந்துளே
னிந்துவாரமொடின்றுதான்றிரயோதசித்தினமேய்ந்ததே. (ரு)

* கூளிநற்பெயர்கொண்டுறுஞ்சிவநிசியெனுந்தினமானதி
லாளுமண்ணலருச்சனைக்கெனவந்தயான்றரிசித்தனன்
காளகண்டனையந்திவேளையிற்காணலாற்கட்டதுன்பம்போய்
நாளுநல்லருள்பெற்றிலேனிதுபுண்ணியத்தினினண்ணினேன். [சு]

எனக்குமுந்துளவறிவின்மிக்குளதிங்குவந்திடுமளவிலே
தனக்குநேரறுசைவரைத்தரிசனமடைந்திடுதன்மையோ
கனக்கும்யாகதவங்களால்வருகருமமன்றிதுவுண்மையே
புனற்கொழுஞ்சடையானையேத்துதிபோற்றுவேனுனைத்தாலுவே. (எ)

அர்ச்சனைப்பொருளொன்றிலேனுலகத்திலாசையழுந்தினேன்
சற்சனர்க்கருடம்பிரான்சிவசங்கராசந்த்ரசேகரா
பொற்சடைப்புனிதாவெனப்புகழ்வாயுனக்கதுபுனிதமே
நற்சொலன்னதுபானெய்சர்க்கரையாகநச்சுதிநாடொறும். (அ)

---

* கூளி-பூதம்.

அன்னதோர்சிவநாமமாமமிர்தத்தைநாளுமறிந்திடு
முன்னைநான்பெறமுன்னைமாதவமுற்றகோடியிற்பெற்றுளேன்
சொன்னயாகமதிற்புசித்திடுசோமபானபுசிப்பைவிட்
டென்னையாளுறுமீசனுமவினிப்பைநாடுதியென்றுமே. (௯)

கண்களேகுருக்கத்திகூவிளஞ்சாத்தியேயலங்காரஞ்செ
யெண்கொளும்மிலிங்கேசரைத்தரிசிக்கப்புண்ணியமென்செய்தாய்
புண்கொளாமெலிவுறியன்மின்னுறுபொற்பொருப்புறல்போற்கொள்வீர்
வண்கொண்மங்களமுரியதாமிதுமனைகண்மக்களின்வாய்த்ததே. [௧௦]

எனதுபுண்ணியமதனினுற்றனிரிந்தியத்தினின்முதன்மைமீர்
தனதுரகசியமதொன்றுரைசாற்றுவேன்கனவதனினு
மனகலிங்கரைநோக்குவீர்சிவனருகுநின்றுமிழற்செய்தே
தினமுமேதளிர்பலமூலகுசெழுந்தருக்களும்புனிதமே. [௧௧]

பரமனுக்கொருகுடையெனத்தழைப்பயில்வுறும்பணைமேவிடுந்
தருமமுற்றிடுகூவிளத்தருமகிமையார்வர்கள்சாற்றுவா
ரருமைசேர்பிரதோடபூசனையாற்றுமிங்கிவண்முத்திசேர்
பெருமைபெற்றனளிவளையான்றெரிசிக்கவென்னுளபெற்றியோ. (௧௨)

மங்கையேபிரதோடவேளையிலிங்கபூசனைவரிசையா
லங்கையாலரன்மகிழவாற்றினையெனவுரைத்திடுசெவ்வாதாஞ்
சங்கைதீர்தரவருகுசென்றுவணங்கியர்ச்சனைதான்செய்தே
செங்கணீர்வரத்தோத்திரஞ்செய்துதிருமுனின்றவப்போதிலே. (௧௩)

கயிலைவாழ்சிவன்றருள்செயக்கணநாதர்மிக்கபிருங்கிபொன்
சயிலமன்னவிமானமுங்கொடுசார்ந்துள்ளார்வருதன்மைக்கண்
டயில்கொள்சக்கரவரிமுத்தற்பலதேவர்தாமும்மடைந்துளா
ரெயிலெரித்தவிலிங்கவர்ச்சனைசெய்திருந்துழியெய்தினர். (௧௪)

கண்டுதொண்டொடிறைஞ்சியாச்சரியத்தொடுங்கணநாதரை
யண்டர்நோக்கினர்சொல்லுவார்சிவனர்ச்சனைக்குரியீர்கணீர்
விண்டிடுந்திரிகாலமுந்தெரிவீரிவ்வில்வநிழற்குளே
பண்டரங்கனிலிங்கவர்ச்சனைபண்ணினோர்களியாவரே. (௧௫)

அவர்கள்புண்ணியமிவளென்னவளர்ந்திடற்கரிதாகுமாற்
றவளநீற்றினன்மகிழ்தரும்பிரதோடபூசனைசாற்றுங்கா
லுவகையிட்டமெலாமெனப்படியுதவுந்தேனுகிர்க்குமே
யிவணிலுற்றவிலிங்கபூசனைகண்டுமாமகிழ்வெய்தினேம். (௧௬)

குங்குமங்களபஞ்சுகந்தமலர்த்தொடைக்குளிர்பூசைகொண்
டிங்குமேவுமிலிங்கரைத்தரிசிக்கும்பாக்கியமெய்தினேந்
துங்கமாம்பிரதோடவேளையிற்சுகந்தசந்தனஞ்சாத்தினோர்
சங்கரன்கயிலைக்கணேமணிமானமேறினர்சார்குவார். [௧௭]

அந்தியின்னெவணிலிங்கசேவையையடையினும்பலமகலுமே
முந்துகூவிளநீழலிற்பிரதோடவேளையின்முறைமையாற்
கந்தமேவுசுகந்தபூசைகொள்கடவுளைத்தரிசித்துளோர்க்
குந்துறும்பலன்யாவர்தேர்வரவ்வொருவனேயுணதயுழிவனே. [௧௮]

பரமனைப்பிரதோடவேளையிற்பத்ரபுட்பமலங்கொடே
கிரமுடன்பணிபவர்தமக்குயர்செல்வம்யாவையுமெய்துமே
வரமதாகுமிப்பூசையெண்ணறுதருமமுற்றவர்மருவுவார்
கருணையிந்தவிலிங்கமூர்த்தியைக்கண்டுகண்டயனுற்றதே, (௧௯)

வேறு.

என்றுபுகன்றனர்தேவர்பிருங்கியெனுங்கணநாதரிதனைக்கேட்டே
துன்றுகடவுளர்தமைப்பார்த்துரைக்கின்றார்சொல்லரியசுகங்கணல்கும்
கன்றுமானேந்திதன்விநோதம்யாங்களுமின்றுகாணப்பெற்றேஞ்
சென்றிவளைக்கொணர்வருவீரெனவிறைவனேவவிவண்சேர்ந்துளோமே

சாரணனிங்கிவன்றீயோனிவணலம்வேட்டேதிரிவான்றனியேகாந்தஞ்
சேரவிங்ஙன்வந்தடைந்தான்போகார்த்தத்திரவியந்தான்சேடிமார்கள்
வாரமுடன்கொடுவாருமதிக்கதாற்கோபமுறுமதியளாகு
வீரமனமில்லாதாள்கணவனையும்வெகுண்டிடுவாள்யாவும்பாராள். (௨௧)

பாங்கிதான்கொடுவந்தபாறயிர்நெய்சற்கரைதேன்பழத்தின்சாரம்
வாங்கினாள்சிவலிங்கத்தாற்றினாள்சந்தனத்தைவாரிவீசித்
தேங்கமழுபூந்தாமங்கள்சிதறினாடிங்கனியபூபவர்க்கந்
கோங்கிளமென்முலையன்னராசிகளுமெடுத்துமுன்னேகொட்டினாளே.

அடங்காதகோபத்தாள்கண்ணீர்களோடவேயவனிமீது
முடங்காதுவணங்குவார்போல்வீழ்ந்தாளிவையெலாமுதல்வனுக்கே
திடங்காணும்பத்திபெறும்பிரதோடபூசையாச்சேர்ந்ததாலே
படங்காணுமபாம்பணிவான்பிரியமுற்றேயிவடன்பாற்பரிவுகூர்வான். [ ]

விருத்தமுடனிவைசெய்தாடனக்குருகும்பெருமானார்விரும்புகின்ற
கருத்தினுடன்பூசைசெய்வார்க்கருள்கதியையாரறிவார்கருடராச
னெருத்தில்வருமெருத்திலெழுந்தருள்பரமர்பிரதோடத்திதயமொத்தே
திருத்தினுமல்லாமலுமேசெய்யினுந்தம்பதங்கொடுத்தறிண்ணமாமே.()

கோபத்தாலிவளெறிந்தபொருளெல்லாந்தம்பூசையாகக்கொண்டே
பாபத்தைத்தீர்த்தளித்தான்பகவனெவராகினுமேபத்தியோடு
மாபத்திற்காத்தளிக்குமண்ணல்பரமெனப்பூசையாற்றுவாரேற்
றுபத்தையுறுஞ்சனனந்தீர்த்துவேண்டியதெல்லாந்தருவன்றானே. ()

வாலனாகினுமுதியோனாகினும்பத்தியிற்பூசைவாய்க்கச்செய்யிற்
சாலவேதோழமைகொள்குபேரனெனமைந்தனெனத்தயவுகூர்வான்

ஞாலமீதுமைகாந்தன்பூசைசெயவேண்டுமெனநாடுவோர்க்கே
பாலலோசனனிச்சும்பராமுந்தந்தாள்வனெனப்பகரும்வேதம். (உஃ)

பரமசிவனிலிங்கத்திற்பிரசன்னமாவதுபோற்பலவாயுள்ள
திரமுறுமூர்த்திகளிடத்திற்கண்டிலேஞ்சிவலிங்கத்தியற்றும்பூசை
யுரமுறுமுத்தியிற்சேருஞ்சாதனமாஞ்சிவலிங்கத்துதித்தாரன்றே
பிரமன்மாலிந்திரனேமுதற்றேவர்சகத்திலுள்ளோர்பிறருந்தானே. [ ]

உயர்தருங்காசியிலிருந்தேயுமைவிசுவேசனைப்பூசையுஞற்றுகின்றோ
ரயர்வி லுருத்திரகணங்கட்கதிபதிகளாய்விடுவரகிலமூன்றிற்
கயல்விழிபாகன்றொண்டர்க்கடையாதபொருளுளவோகடவுள்பத்திச்
செயலரிதாமுழுதுமவருந்தேவசிகாமணிபூசைசெய்துளோர்க்கே.(உஅ)

திறல்பெருகுமகத்தானதேவசிந்தாமணிகையிற்சேர்ந்தோர்பின்னு
முறலாயிற்றெனவற்பக்காசுகொள்வரேபூசையுஞற்றியுற்றோர்
பெறின்மற்றையின்பமுறார்சிவபதமேபெறுவரெனப்பிருங்கிகூறு [ர்
விறல்பெறுந்தேவர்கள்வினவிவீழ்ந்துகிடந்தவடனையேவியந்துபார்த்தா

வீறுகணநாதராம்பிருங்கிகைப்பூதியிலவடன்மேனியெங்குந்
தேறிடவேதைவந்துபுனிதமுறச்செய்துமின்னேதெரிவைபாகன்
கூறிடவந்துனையழைத்துக்கொடுபோகமணிமானங்கொண்டுபோந்தோ
மேறுதிவந்தெனக்கேளாளனந்தராலிருங்கஞ்வினிதுகாண்பாள். (௩௦)

உன்னதமாஞ்சிவலிங்கமொன்றுறக்கண்டாள்பூதியுருத்திராக்க
நன்னயமாப்புனைந்துகொண்டேயைந்தமிர்தமுதலானநற்பதார்த்தந் [ன்
துன்னுறுமஞ்சனமாட்டித்தூயவெண்பட்டாடையுயர்சுடர்பொற்பூணா
மன்னுகலவைச்சந்தமணிமாலையுடன்கண்டிவடமுஞ்சாத்தி. [௩௧]

கூவிளத்தின்றளிர்சுகந்தமாலையுங்கொண்டருச்சித்தேகுறைவிலாத
நாவினித்திசோஷிதமானதிவ்வியநல்லமிர்தராசி
தாவிலபூபங்கனிகள்பானீயமுதலனைவேதனங்கள்செய்தே
யோவறுதூபதீபஞ்சோடசமாமுபசாரமுதவிப்பின்னர். [௩௨]

பணிந்துபிரதக்கணதோத்திரகடனகானந்தான்பண்ணும்வேலை
திணிந்ததிடபத்திபெறுமொருசைவரவ்விடத்திற்சிவபூசைக்கே
துணிந்திடுமாறுங்கண்டாளெங்குவந்தீரெங்கேகத்தொடங்குகின்றீ
ரணிந்திடுமிவ்விடத்துறையவேண்டுமேலுறைந்திடுதிரையரென்பாள்.( )

சங்கரன்பூசைப்பொருள்கள்வேண்டியயானென்கொடுவந்தேன்றருகின்றே
லங்கதுகொண்டேயானைகன்றுகப்பூசிப்பீரையரேநீ [ஞ
ரிங்குமக்கிச்சைப்படியேகைக்கொள்வீர்மறைச்சைவரெய்தப்பெற்றுற்
றீங்குமாமவர்தமக்கென்றிரவியமெல்லாங்கொடுக்கத்துணிந்துளேனே,

உற்றவென்பாக்கியத்தில்வந்தீர்நும்போலப்பாத்திரமூவுலகுங்காணேன்
விற்றருமாரக்கோவையங்கதங்குண்டலமகுடம்விதேதப்பூண்கள்

பெற்றவானிரைசெம்பொன்மாளிகையுந்தருகின்றேன்பெரியரேநீர்
மற்றிவையாவையும்பரிக்கில்யான்புனிதமுற்றபெறுவாழ்வுற்றேனே. ()

புத்திகொளுமந்திரந்தானநேகமுளவவைகளைநான்போற்றல்செய்யே
னெங்ஙனைதயார்சைவவித்தையஞ்செழுத்தாற்பூசிக்கவிச்சிக்கின்றே
னந்தமனுவுபதேசயபுரிந்திவீரதுபவங்களகற்றுமென்று
மந்திரங்கடமக்கெல்லாமரசென்றுங்கேட்டுளத்தின்மகிழ்வுற்றேனே. ()

இப்போதுபுனிதமாம்புண்ணியகாலம்மிதனிலுதவிசெய்வீ
ரொப்போதின்மூலமனுவுபதேசங்கிதையென்றவற்றினுற்ற
வைப்பாகுமவ்விரண்டின்மாதர்களுக்குபதேசம்புரியுமந்தத்
தப்பாதமந்திரந்தருளுமெனச்சாரணைதான்சாற்றினளே. [௩௭]

மின்னேருமருங்குலாள்சொலக்கேட்டபொன்னனைசெவறுத்தசிந்தைத்
தனனேருஞ்சைவர்தாஞ்சாற்றுகின்றார்சாரணையோசமாகும [ஞ்
பொன்னேர்கொணன்மனையாலாவதென்னேடுவிசுவர்க்கஞ்சத்யலோக
சென்னேருமேனியான்வைகுண்டலோகமுநான்சிந்தியேன். [௩௮]

உவையனைத்தும்பிரளயங்கடமிலழிந்துபோய்விடுமோவுதும்பரத்தின்
குவையடைத்தபலத்திலுற்றகொதுகவையார்விரும்புகின்றார்கூறுமந்த
நவைபடைத்தகனிவீந்துநாசமுறுவதுபோலவண்டயாகு
மவையனைத்தும்போய்விடுமாலவற்றையிச்சிப்பாரதிட்டம்பற்றார்தாமே.

ஆங்கைவயும்விரும்பாதவெமக்குனதுபொருளிச்சையாகுமோதான்
பூங்குழலாய்செல்வமுநிலதுகொடரன்பணிவிரைவிற்புரிதிகண்டாய்
தேங்குதாமரையிலையிலுருள்புனலாமனமதுசிவனுமவ்வாறு
மீங்கிவைப்பிப்படியுறலாற்றுமதியாதரன்பூசையியற்றுவாயே. (௪௦]

அரும்புநகைநீகொணர்ந்தவரும்பொருள்களிவிங்கேசர்க்கபிடேக
ஞ்செய், விரும்புவிடயந்தவிர்திசாமிமகதேவவிமலேசவெற்கே, தரும்ப
ரிசின்மோகத்திலழுந்தாதவரமென்றேசாற்றுகிற்பாய்,கருங்கடுநோராசை
யுற்றோன்கனவினுமேசுகமடையக்கண்டிலோமே. [௪௧]

இச்சைதனைவிடுத்தின்னேசிவபூசைபுரிதியாவினிமேவிந்த
வச்சுறுமோதெரியாதுபூசைசெய்யாதவன்பிறப்புமவமாமன்றே
துச்சனவனுடல்புவிக்குச்சுமையாகும்பெரியோர்கடொழிலேதென்று
னச்சியரனருச்சனையேயாகையாற்பூசைசெய்துநண்ணுவாரே. [௪௨]

இளமடவார்தனைமக்கண்டாறபற்காட்டிக்கரல்பிடிப்பரென்றுமீசன்
றனமலர்த்தாள்கருத்தில்வைத்துச்சங்கராவருளென்றுவணங்கமாட்டார்
வளமலிபட்டாடைமின்னார்தமக்குதவவவர்மறுக்கவலியப்போர்த்தே
யுளமகிழ்ந்துபார்த்திருப்பர்சிவன்றனக்குச்சாத்தமனத்துன்னிலரே. [ ]

மற்றுமுளபொருள்களுமப்படி புரிவரவர்களெல்லாம்வையமானுக், குற்றபெரும்பாரமன்றோதலைமைபெறவேண்டுமெனிலுமையாள் கேள்வன், கற்றைவார்சடைப்பரமன்பூசனையேசெயவேண்டுங்கற்பர்தோறுஞ் சொற்றசிவபூசைசெய்வோர்பதநூளேமூவுலகசுத்தியாமே. [சுச]

அரிபிரமர்பூசனைசெய்பரமனடிபரவுதல்செய்தவரேமேலோர், தெரிவருமின்பக்கடலாமவர்களைப்பூசிக்கிலதுசிவனுக்காகும், பெரியவராமவர்க்காணிற்பாவகோடிகளெல்லாம்பெயர்ந்துபோமாற், கரியகண்டரடியரல்லாற்பெரியவர்களொருவரைநாங்கண்டிலோமே. [சுரு]

நாகபூடணனுமநாவினனவின்றுநெஞ்சினினைத்துநாளு
மேகசித்தத்துடன்பூசையியற்றுவார்சிவரூபத்தியல்வாரென்றே
சோகம்பாவனைப்பெரியோர்சொல்வார்களென்றுமறைநூ.பசைவர்
பாகைநேர்மதுரமொழிச்சாரணைமின்னுள்களவிற்பகர்ந்தாரன்றே [சுசா]

முப்பத்தொராவது பிருங்கியுத்தரச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧௧௦.



முப்பத்திரண்டாவது,

# சாரணசொற்பனபூசைச்சருக்கம்.



வேறு.

தேரூருந்திருவீதியாரூர்நாகைதிருநள்ளாறுடன்வேதவனங்காறூய, லேரூர்கோளிலிவாய்மூர்பொன்னிநாட்டி னெழுவீடங்காகவிருந்தசைந் தேயாடிப், பாரூர்கடொறுஞ்சபைகடோறுநின்றுபரிந்தாடிக்குடந்தைதகர்க்கீழ்க்கோட்டத்து, மாரூர்வெண்பிறையாடித்தங்கூத்தையாடவல்லார்புகழேகொண்டாடுவோமே. [க]

ஆரணபாக்கினவற்கிழுனிவராசனறைகின்றன்சைவர்சொன்னவார்த்தையெல்லாஞ், சாரணப்பெண்கேட்டொடுக்கவணக்கத்தோடுஞ்சாற்றுவாளுமதுசொற்சத்தியமேகண்டீ, ரோரணிபுமுமதுதரிசனத்திலேயெனக்குவிடமெனும்விடயத்திச்சையில்லேச், சீரணியுஞ்சிவபூசைதனிலேயென்றன்சிந்தையொடுங்தியமெலாஞ்சென்றவன்றே. [உ]

உருக்கமுடனருச்சிக்குக்காதைகேட்கவோதுமாலயம்பணியத்தொண்டர்கூட்டத், திருக்கவேவேண்டுகின்றதென்றன்புந்தியிங்கிவற்றைத்திடம்பெறவேபுரியுமாறு, பெருக்கெனநுந்திருவாக்காலுறுதியாகக்கடவதெனப்புகன்றிடுவீரென்றபோதிற், றிருக்கறுசிந்தைத்தவத்தோர்சொல்வார்மின்னேசிவபத்திபெற்றனைநீதிடம்பெற்றாயே. [௩]

உறுதிபெறுமிவற்றிலொருகாதைகேட்டி யுயரிமயச்சாரலிலோர்செல்வவேந்தன், சிறுவரொடுபவுத்திரர்கடழைக்கவாழ்வான்சிறுவிகடி

க்கண்ணொளொருத்தியுற்றாள், பெறுருதலைப்பருவத்திலரன்றன்பத்தி பெற்றுளாளருச்சனையின்பிரியமுற்றாண்,மறுவிலாவாயுள்சிவகாமகானம் வள்ளல்கதைகேட்பதிலும்போக்குகின்றாள். (௪)

அன்னவடானுப்பரிகைதன்னிலேறியாருமவிசைவீணைக் கானம் பாடி,மன்னினளப்போதிமயச்சிமையமீதின்மருவுசிவனாலயத்தின்சிகரந் தன்னிற், றுன்னிவருவாடைபரிமளங்களோடுதூயமலர்மாலையொன்று கொணர்ந்துவீசப், பன்னியவத்தனையேகையிலேந்திப்பார்த்தெந்தவுலகத்ததிதுதானென்பாள். [௫]

இதுபோற்பூலோகத்திலெங்குங்காணுமெனமவர்தம்மந்தாரமாலைதானோ, மதுமேவுமிம்மலர்ப்போதிவாரில்லைவாசமாங்கின்னரர்கள் திருவாதேயத், ததுவோவென்றதிசயித்தேவிசாரமுற்றாளதனவிமானமேவிவந்துசென்றாள், விதுமேவுசடையனாலயத்தைக்கண்டாண்மேவினளதன்சிறப்பைவியந்தாளன்றே. (௬)

மண்டபங்கோபுரஞ்சிகரம்பிரகாரங்கண்மலர்மாலைசூட்டுமாலைபிரத்தமாலை, வெண்டருபொன்னரிமாலைதொண்டர்மாலையிவையனைத்துமாலைகைக்கொண்மாலைகண்டா, ளண்டர்நாயகனிலிங்கந்தன்னைநோக்கியடிபணிந்தாளவ்விடத்தினின்றேயாடு, மொண்டொடியோர்சவுந்தரியநிதியம்போல்வாளோர்கையுடனுடைகஞ்செய்வாளைக்கண்டாள். (௭)

இளம்பருவக்கன்னிதன்னையிராசகன்னியெதிர்ந்தனளன் புடனவட்பார்த்தியம்புகின்று,ளளந்திடவேபரியகடைக்கண்படைத்தாயாவணியன்னையாரந்தன்றாறு, ருளந்தயவுபெறுமுன்றன்கொழுநனெங்கேயுற்றானின்னடவித்தைதயெங்கேகற்றாய், வளர்தருமின்னிசைபயின்றாய்குருவாரென்னுமன்மகட்குக்கந்தர்ப்பமாதுள்சொல்வாள். (௮)

கன்னிகைபேபமதுமனஞ்சிவபூசைக்கேகாதலிக்குந்தனமதனாற்கனைதபெற்றேம், பொன்னினிலம்பலமொருனஞ்சிவனுக்காக்குப்புக்கியுடையோக்கொழிலுமிதுவேயென்று,மன்னவன்றன்மகள்கேட்கக்காந்தர்ப்பன்றன்மகள்சொன்னாளவள்கையின்மாலைகாட்டி, யிவ்வலமலர்யாதிதன்பேரேதுமாதேயெங்கேயுற்றதிதனைக்காட்டாயென்றாள். (௯)

கந்தருவமாதுசொல்வாண்மின்னேயிதுகாவமன்றுசிவன்றனக்குப்பிரியமாக,வந்தபானடனகானங்கள்செய்பவாய்த்தருணமமையமென்றுளதனைக்கேட்ட, வந்தமாறுங்கவடனன்புநோக்கியதிசயமுற்றவணடம்பார்த்திருக்கிருந்தாள், முந்துமாலைப்பொழுதுவரவேபந்த மொய்குழலாள்கங்கைதனின்மூழ்கச்சென்றாள். (௧௦)

புனலாடிநீறுகண்டிபுனைந்தாளந்தப்போதுவந்தார்கந்தர்ப்பலோகத்துள்ளா, ரனலாடுஞ்சுடலைதனிலாடிபூசையாதரித்தாரவர்களோடுபுகுந்தாள்கோயின், மனதார்வமுடனுறைவிதங்களானவரிசையுடன்பூசித்தாள்வந்தோர்யாரு, மினமோடும்பரமசிவன்றனைவந்தித்தேபொல்லோருந்தம்முலகிலெய்தினரே. (௧௧)

கன்னியவள்சிவன்றனக்கேபிரியமாகுங்கானஞ்செய்தாலயத்துணி
ன்றாளந்தத், தன்னிகரில்லாள்கணவன்றானுமெய்திச்சங்கரனை யருச்ச
னைசெய்ததன்பின்சார்ந்தே, பன்னிதனைக்கண்மெயின்னேபரமன்பூசைப்
பணிமுடிந்தபிரதோடவேளைபோயிற், றின்னினிநாமம்பதிக்கே யேகு
வோம்வாவென்றலுமன்னவன்மோகமில்லாள்சொல்வாள். (கஉ)

உன்றனக்குப்பிரியமாம்படியெங்கேனுமுறைந்திடுதி செல்லுதியா
னிறைவன்கோயி, லென்றனக்குநீங்கமனமில்லைகண்டாயிவ்வுடலம்வி
ழ்வளவுமிங்குச்சேர்வேன், பின்றுமற்றையோரிடமும்பெயரகில்லேன்
பிறைபணிவான்பூசனையிற்காலம்போக்கு, கின்றனன்யானுன்வார்த்தை
போதும்போதுங்கிடையாதவின்பெனக்குக்கிடைத்ததென்பாள். (கங)

ஆகாரநித்திரையிற்புணர்ச்சிதன்னிலாசையற்றேனரன்பூசைநடன
கான, மாகாதல்கொண்டுற்றேனெம்மான்வெள்ளிவரையிடத்துமபோய்
ப்பூசைமகிழ்ந்துசெய்வே, னேகாய்நீசிவனையருச்சனைசெய்யாதாரெடு
த்தசென்மம்வீணன்றோசாரமில்லாச், சோகாதிகஞ்செய்குடிவாழ்க்கை
தன்னிற்சுகமுண்டோசுத்தர்சிவபத்தர்சேரார். (கச)

நீசாதுவாயழைத்தல்போதும்போதுமெனவிகழ்த்தியவனொடு நின்
றொன்றேனுந்தான், பேசாமனிருத்தகானத்திலாசைபெரிதுற்றாளிவை
யெல்லாம்பார்த்துநின்ற, தூசாருமல்குளிராசாதிபன்றன்றோகையுமப்ப
டிபுரியத்துணிந்தேதூய, வாசாமுடன்பூசைபுரிந்திராவி லாகாரநித்தி
ரையற்றுடினளே. (கரு)

அப்படியங்கவளோடுஞ்சின்னாளன்னாளரன்பூசையாற்றியேகயிலை
சேர்ந்தா, னிப்படியிப்படிதனினற்சென்மமுற்றோரெண்ணிறந்தோர்பூச
னைசெய்தின்பம்பெற்றார், கொப்படியாய்கூர்விழிச்சாரணையேயிதாற்கு
டிவாழ்க்கைதனைவேண்டேன்பொருளுண்டாகின், மைப்படிகண்டன்பூ
சையதனாற்செய்வேன்மற்றிதுவேபொருளென்றுமனங்கொண்டேனே.

அரன்பூசையின்றிப்பாரின்பஞ்சேர்வாரரும்பசியோ னாகாரத்திச்சை
போலப், பரன்பூசைபுத்திமுத்திதருவதென்றுபத்திசெய்வார்புத்தியுளப
ண்பினோர்கள், வரஞ்சேருநாவலந்தீவுள்ளமாந்தர்வரதன்பூசனையிலின்ப
மருவல்போலத், திரஞ்சேருஞ்சுவர்க்கமோடுசத்யலோகந் திருமால்சே
ருலகத்துங்கண்டதின்றால். (கஎ)

இதுவேமேலாந்தருமமென்றுசைவரிசைத்தனர்சாரணமானுளினி
துகேட்டு, மதுவேயுமலர்கொண்டுபத்தியோடுமென்னுசாதனப்பொருள்க
ள்யாவுங்கொண்டே, யிதுவேணியருச்சனைகள்செய்தல்போலமெய்க்க
ணவுகண்டுறுமவவேளை தன்னிற், சதுர்வேதமுணர்பிருங்கிவார்த்தைகே
ட்டுத்தாமரைக்கண்மலர்ந்துபார்த்தெழுந்திருந்தாள். (கஅ)

அவடனைப்பார்த்தேபிருங்கிமானத்தேறாயணங்கேயென்றிடக்கோ
[illegible]பூடையவனானு, முவமையிலாவறிவுபொருளாகையாலேயுவன்றனைப்

பார்த்தாச்சரியமுறச்சொல்வாளாற்,சிவனை யருச்சனைசெய்வோர்க்கிடை யூறுகத்திங்கிழைப்போர்சேர்கதியுமுண்டுகொல்லோ, தவமுடையகண ங்கணீர்புகல்வீரென்றுடையல்சொற்கேட்டுப்பிருங்கிசாற்றுகின்றான்.

ஈங்கிவடான்றருமத்தாற்புவியின்மீதினிறைஞானமுளைத்தமுளையெ னச்சிந்தித்தான், பூங்குழலாய்நல்வசனம்வினவுகின்றாய்புகலுனக்கேசு கமடையக்கடவதன்றே, யோங்குநீசிவபூசைப்பத்திபெற்றாயுனையரசர்க் கரசருமேவணங்கவேண்டும், பாங்குபெறுமுனக்குமுனமில்லாப்பத்திப வித்ததிச்சொற்கேட்டவர்க்கும்பாவம்போமே. (௨௦)

சந்தேகமிலைமாதேயிதினோர்காதைசாற்றுகின்றேன்சனகமாமுனிவ னீங்கு,வந்தேகங்காசலம்பொற்கமலப்போதுமணத்தகலவைச்சந்தம் வி ல்வந்தும்பை, செந்தாமரையலரிவெள்ளெருக்குசெவ்வெருக்கூமத்தை குருக்கத்திமுல்லை, கொந்தார்செண்பகம்புன்னைமந்தாரையாதிகொழுமலர் கற்பூரத்தீபந்தூபங்கள். (௨௧)

முக்கனிகள்பரமான்னமன்னராசிமொழிதருபல்வகைக்கனிகளபூ பவர்க்கஞ், சர்க்கரைபான்முதலானபொருள்கள்கொண்டு சங்கரனையுப சாரத்தாற்பூசித்தே, மிக்கதவமும்புரிந்தானதனைக்கண்டுமேதினியெல் லாமெங்கவும்பரெல்லாந், தக்கதிதுவன்றெனவேநடுக்கமுற்றுச்சாற்றரிய விசாரமுடன்றளர்ந்துளாரே. (௨௨)

சனகரிவைசிவபூசைதவமுஞ்செய்வார்சாற்றுமெவராதிக்கந் தனை யிச்சித்தார், மனமகிழ்வைகுண்டபதஞ்சத்யலோகம்வலாரிபதந் தான் பெறவோதெரிந்திலோமா, லனகரிவர்விளிவையுறும்பதங்கடமிலாசை யுற்றிவரிதயஞ்சிவனேதேர்வான்,றினமுமிவருதயமுதற்சாயாந்தத்துஞ் சிவபூசைதனிற்காலம்போக்குகின்றார். (௨௩)

என்றேவிண்ணவர்சிந்தையுடையராகியாவர்கட்குமதிமோகங்கொ டுக்கவல்ல, குன்றேயுமுலையரம்பைதன்னைக்கூவிக்கூறுகின்றார்சனகர் சிவபூசைசெய்வார், நன்றேயுமெவர்பதத்தைக்கொள்ளவென்றேநாடுகி ன்றாரோதெரியோநங்காய்நீதான், சென்றேசெய்தவர்பூசைவிக்கினந்தா ன்செய்தியெனக்கேட்டவுடன்றிகைத்துச்சொல்வாள். (௨௪)

அஞ்சலிக்கையினளாகியிந்தியங்களஞ்சடக்கிவனவாசத்தமர்ந்துளா ளு, நெஞ்சுதிடமாக்காலம்போக்குகின்றார்நிகரிவிருவிக்கினராய்ப்பூசை செய்வார், வஞ்சமற்றவரிடத்தென்விக்கினந்தான்மருவுமோவிதிலென க்கேமனஞ்செல்லாதால், விஞ்சுகின்றவவந்தமக்கேகருசிக்குமாற்றால்விக் கினஞ்செய்திடும்வகைதான்விளம்பீரென்றாள். (௨௫)

கிமலனாருச்சனைக்குவிக்கினந்தானினைத்தவன்றனெண்ணம்வன்ற னையேகொல்லு, மமலசிவபூசையினிற்பாவனோடியகலுமெனில்விக்கின ங்களடுத்தியோதான், கமலநாயகனுதிக்கிலிருடானுண்டோகடவுளருச்

சனைபாவவரைகடம்மை, யிமையதனிற்பொடியாக்குமடியாமென்றுவி
டையூற்றின்றிரணமெங்கேநிற்குமன்றே. (உகூ)

அளவிலாப்புண்ணியம்பாக்கியங்கணல்குமரன்பூசைதனிற்புத்திசெ
லுத்திலோமா, விளமதிவேணியன்றனராதனைக்கேயிடையூறுசெயும்பவ
த்திற்களவையுண்டோ, வுளமதனினினைக்கினுமேயுப்பமாட்டா னுற்ற
சென்மமவகாகிற்கற்பம்வீழவன், வளமருவுசிவபூசைபுரிவோர் தமமை
வணங்குவோனவர்கள்பெறும்பதத்தில்வாழ்வான். (உஎ)

காற்பாசவரைபோன்றபுவனேசக்கனபொருப்புக்கரன்பணிநீக்க
டியாகு, நூற்பாவினேரிமைழபாயிடையூறந்தநுவல்பெரியகாட்டேரிமு
ன்னெங்கேநோக்குஞ், சேற்பாவும்விழியுமையாள்பாகன்பூசைசெய்பவ
ன்யாவரும்வணங்குஞ்செல்வனன்றோன், பாற்பாவத்தடைபுரிதலளவி
ல்பாவம்பளிப்பதற்கேபணணவர்நீயெனச்சொன்னீரே. (உஅ)

தேவர்காணீவிரிதைநினைத்தபோதேதீயபவமடைந்திடுதிர்சனக
ர்பூசை, மேவியேவிலக்கிபிடினுங்கள்சென்மம்வீணுகுங்கடைப்பட்டம
ணிதனேனு, மாவிபழிந்திடவிடந்தானுகர்தலுண்டோவெனவரமமைய
றைந்திட லுமமரரெல்லா, நீவிரகினிகழ்த்தியதுமெய்யேயெங்கணெஞ்சி
னிற்சஞ்சலநீங்குமாறெவ்வாறே. [உகூ]

எங்களையோடுக்கமுறப்பேசுகின்றுயெப்படியாயினுமித்தொழில்புரி
யாயென்னிற்கொங்களையும்பூங்குழலாய்சுவர்க்கவாசங்கூடுகிலோமென்
றிடலுங்குழைழவினேடு, மங்களபாமரமமையிவர்தமக்குமெற்கும்வந்த
வாவருகவெனவிடைதான்கொண்டே,சங்களையுங்கைவீசிமதுரம்பேசிச்
சனகமுனிபூசைபுரியிடத்திற்சார்ந்தாள். [௩௦]

வந்துதவமுனிவனைக்கண்காட்டிக்கோட்டிமயலபூட்டியெதிர்நின்
றுள்சனகர்கண்டே, சிந்தையிற்சஞ்சலமுடனே விசாரமுற்றுச்சிவபூ
சைத்திடசித்தமுடையேனிபானே, முந்துறுமிங்கிவ்வணங்கண்ட
போதின் மோகமுற்றதென்னெனமுன்னுமபோதி, லந்தரத்தில்வா
ணிசொலுமரம்பையேயிவ்வருமுனிவர்சிதேந்திரியராவர்கண்டாய். [ ]

மாதருருவங்களையேகனவிலேயுமதித்தறியாரிவரிடத்தினீடாத்
தல், பாதகமேபல்லமலாவதில்லைப்பாவையர்மேன்மோகமில்லரவரை
க்கண்டா,லோதுகின்றகர்மத்துமையோலப்பார்பபாருளம்வையார் நீயவ
த்தமிழைக்கின்றுயா, லேத்தமிருமையோர்தஞ்சுவர்க்கபோகத்திச்சை
யிலார்நீயுனிடத்தேகுவாயே. [௩௨]

ஆசையுள்ளோன்கற்பாவையூப்பாமின்பானுபவிக்கலாமென்றுநி
னைப்பனுகிற், றேசிகனும்விரத்தன்மின்னுரிடத்திவின்பஞ்சேருமெனச்
சிந்திப்பானதுபாவஞ்செயேசுகாமுகர்க்கல்லாமிவர்கட்குண்டோவீசன
ன்பர்மாதரைக்கல்லெனப்பார்ப்பார், பேசுபொம்மைகையொடுகோல
சைத்தல்கண்டுபேதைக்காமுகரேனுந்தழுவிடாரே. [௩௩)

அரும்புமுலையரம்பைகேள்கைகால்கொங்கையசைத்தசைத்து
க்கூத்தாடுமெபினயத்தால், விரும்புவரோசனகர்கீசெய்யுங்கோட்டிவிதத்
திறற்சாயமுற்றுக்கெடுதிபோலும்,கரும்புமொழியாயிவர்தாந்திக்குப்பா
லர்கதிர்மதிமாலயனிவாகளல்லகண்டாய், தரும்பொருளாஞ்சிவனடி
யார்தங்கட்கெலலாந்தலைவரிவர்மாதரின்பஞ்சார்ந்திடாரே. [௩௪]

பயந்தருதேவர்கள்சொன்னவார்த்தைகேட்டுப்படர்ந்தனையங்கவர்க்
கிவரார்ப்பயந்தான்வேண்டா,விளைபந்தவ்வாபதயபுகுதார்கற்பந்தோறுமீ
சன்பூசனையுவந்தேயிருப்பரென்றேயுயர்ந்தவசாரிசொலலவாமடைகே
ட்டேயுண்மையெனப்பயந்தவர்பாற்போயினளால், விபந்தருள்சாரண
மானேசிவபூசைக்குவிக்கினஞ்செய்தோர்நரகிற்புகுவர்தாமே. (௩௫)

எனப்பிருங்கியாங்கணங்கட்கிறைவன்சொலலீசன்பூசனைப்பிரி
யையிபய்புகின்று, ளனைந்துமுணருஞ்சிவன்றனிடத்தில்லைவத்தவன்பி
னுவினைவதெரிந்துற்றறைந்தாயன்றே, மனத்திலரன்பூசைகனவினிற்செ
ய்வேறகுமன்னுகினறவிக்கினமாய்வந்தழைத்தா, புனக்கிதனுற்பவமின்
றுகனவிற்பூசையோதுசாக்கிரபூசைபொப்புறுந்தா. (௩௬)

கண்ணுசிவபூசையினிலுறுதியாகநந்துளேனதற்கொருவிக்கினம
தாகப், பண்ணியுற்றுப்கனவினுளகண்டபூசைப்பலப்பொருளிப்போதெ
திர்க்கப்பெற்றிலேனே, விண்ணளவுமுயர்ந்தவந்தச்சிவலிங்கம்போன்மே
தினியிற்கண்டிலேன்றபமாலை, பெணணிலகாலாக்கினிகள்சுடாவபோல
விமைக்கின்றவலங்காரங்கண்டிலேனே. [௩௭]

வில்வமாலிகையெங்கேபலபூமாலைவிதானமெங்கேமிக்கநைவேதன
வெற்பெங்கே, பல்வகையாமபிடேகத்திரவியங்களியகரைந்தா மமிர்தப்
ரவாகமெங்கே, செல்வமிகுகலவைச்சந்தனமவெண்பட்டுதகிகழுமணி
ப்புணியெங்கேபூவின்மாரி, புல்வனவிவ்வண்டநிறைந்துள்ளவெங்கே
பொன்மணிச்சாமரைகொடிசத்திரங்களெங்கே. [௩௮]

என்றனக்குப்பாக்கியமாஞ்சிவனைக்கண்டேனிவைகளெல்லாமெங்
கேபோய்விட்டதந்தோ, வுன்றனதுபொலலாதசேட்டையாலேயுற்றதெ
லாங்கெடுத்தெனையேயழைக்கவந்தாய், நன்றுறுமானந்தமுற்றுங்கெடு
க்கவென்றேநடந்தனையேகெட்டேனென்செய்வன்யாவும், பொன்றிட
வேயிழந்தனனேகிரீசர்பாதம் பூசைசெய்வேனிடத்திரக்கம் புரிந்தி
லாயே. [௩௯]

இக்கடியபாபுத்திகணங்கட்கெலலாமிறைவவுனக்கெங்குவந்ததெ
ங்கையாகு, மக்கணியும்பிரமசிவன்றனக்கேயென்பாலருளிலையேயமனு
மிந்தத்தடைசெய்வானே; தக்கயான்புரிபூசைவிக்னஞ்செய்தாய்சங்க
ரனரிதற்குனையுந்தண்டியாரோ, மிக்கவென்பாக்கியங்களெலாமுன்றனாலேவீடுற்றதென்றாற்றிவீழ்ந்தாளன்றே. [௪௦]

இவ்வாறுதிடபத்திநமக்கும்வாராதிவண்முன்னரிருந்தபுத்திபோயி ப்போது, செவ்வாறுசேர்சிவன்றன்பத்திபெற்ருள்செப்புமிதற்கன்ரே நாமிச்சைகொண்டோந், தவ்வாதகோரதவம்புரியவல்லதாபுதவேந்தர் கடமக்குங்கிடையாதன்றே, யொவ்வாருமிலாதசிவனருளாலன்றி யொன்றினுலும்பெறுதற்கரியதாமே. [௬௧]

சங்கரனெவ்வழியினுற்சிவகோடிதம்பவங்கள்போக்குவனேதெரிந் திலோமா, லங்கவன்பூசனைபுரிவோர்தாமேமுத்தரனையவர்கள்குடும்பது ன்பமடைந்திடாரே, யிங்கெளிதாப்பரமசிவன்பூசையாலேயெய்தாதத ருமபலமெய்தலாமே, மங்களமாஞ்செல்வங்கள்பெறுவதற்கேவரதன்பூ சனையல்லாலில்லையொன்றே. [௬௨]

இதுவொன்றுமேபோதுமன்றேமாளுளிவளிந்தவிலிங்கதரிசனத்தி னுலே, மதுவொன்றுமலரினுற்பூசைசெய்யமன்னுமுன்னைப்பவங்களெ லாம்போக்கப்பெற்ருள்,விதுவொன்றுவேணியன்மெய்யருளுஞ்செய்தா ன்மேவுமவன்மகிமையெவ்வாறறியவல்லோந், துதிகொண்டநமதுபாக்கி யத்தினுலேசோபனமாமிவ்விலிங்கந்தரிசித்தோமே. (௬௩)

ஈங்கிதனுலெய்தரியசுகத்திளேடுமிதயமுற்றயாவுமே பெறுதுமன் றே, பூங்குழலாளிவடனைமேகொணர்கவென்றுபுண்ணியனர்தமையேவ ப்பெற்றதாலே, பாங்குபெறுமிவ்விலிங்கந்தரிசனந்தாம்பண்ணப்பெற்று ளமன்றேயிதனைப்பார்க்க, வேர்ங்குமாதாயர்தான்பெறுவதென்னேயுயர் காசிவாசமுறும்பலம்பெற்ருேமே. (௬௪)

மங்களவீரேசரைக்கூவிளநற்கங்காமஞ்சனங்கொண்டருச்சனைசெய் வரத்தினுலே, யிங்கிதச்சிவரூபநருமதேசவிலிங்கதரிசனமும்பெற்றுய்ந் தோமென்றே, திங்கள்வேணியர்மங்கைநேசரீசர்தேவநாயகர்கயிலைகாவ ல்பூண்ட, துங்கனும்பிருங்கிமுதலானமேலாந்தூயகணநாதர்கடாஞ்சொ ற்ருரன்றே. (௬௫)

முப்பத்திரண்டாவது சாரணைசோற்பனபூசைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௨௩௫.



## முப்பத்துமூன்ருவது,

# விசுவாவசுச்சருக்கம்.



வேறு.

நாவிரிப்பதுநின்புராணநற்கதையுநாளுமேகேட்பதுன்புகழும்
பாவிரித்திடுசெந்தமிழினுற்பாவும்பணியுமேபணித்தெனைப்புரப்பாய்
காவிரித்திருவுமனிசின்மாநதியுங்கலந்திருமருங்குமேசூழும்
பூவிரிப்பொதும்பர்க்குடந்தைமாநகர்வாழ்புனிதனேயமுதநாயகனே. [ ]

சொல்லருமுனிவன்யாக்கினவற்கிசொற்றனன்பிருங்கியேமுதலாம்
வல்லமைசேருங்கணங்கள்விண்ணோர்கண்மனத்திடைவிசாரமுற்றனரா
லல்லதீர்த்திடநாமென்னினிச்செய்வோமிவனுரைப்பாசத்தாலார்த்தே
யெல்லவர்தமையும்படுத்தனனிறைபூசனையர்பாலெம்விறல்செலுமோ.

சங்கரனேவற்பணியெங்கன்புரிகேஞ்சத்திபோயொழிந்ததிங்கெமக்கே
யிங்கிவடனைக்கொண்டேகிடாதிருக்கினிறைவனுக்குத்தரமென்னே
துங்கமாமண்ணல்பணிபிழைத்தவர்க்குச்சூழ்வபாணநிச்சயமே
யிங்குநாமேகினந்திதன்கணங்கள்கையடிக்காற்றிலமன்றே. (௩)

அண்ணலார்பணித்தபணிபிழைத்திடினும்பாவிகளாகுவமன்றே
பண்ணவர்வெகுண்டாற்கோபவங்கியினாற்பாரெலாம்பொடிப்பொடிபடு
மெண்ணமென்செய்கோமுக்கிரமானநிக்கிரகத்தினாதனுற் [மே
கண்ணுநாளைக்கேயுக்கிரனெனப்பேர்கலந்ததாலந்திகழ்கணத்தீர். (௪)

அங்கவர்கோபவங்கியார்தணிப்பாராற்றலோமதையென்னசெய்வோ
மெங்குநார்புகுவோம்புகுமிடத்தின்பமுண்டுகொல்சரணமென்றடைந்
சங்கரான்றியாவராதரிப்பார்தற்பராசினத்தையார்தரிப்பா [தாற்
ங்கணமுன்னமிலீலையாற்சினமுற்றண்டமெலாந்தகித்துளரால். (௫)

நிருமலரிதுசெய்துமையுடன்கயிலைசேர்ந்தனர்கருணைவாருதியார்
மருவுறுங்கோபம்வரிற்கெடுமுலோகமற்றவர்வெகுட்சியினாலே
யிருமைசேருலகமடலையாய்முடிந்ததெத்தனைதாமென்றுடியுகல்கேம் [சில்
பெருமைசேரிறைவாருளினாற்பின்னும்பிறந்ததெந்துணையென்கேம்பே

நாயகரவராலெத்தனைகோடிநாரணர்முதலிமையோர்கள்
போயகன்றனர்கண்மீளவும்வந்தார்புண்ணியர்நித்தியகல்யாணர்
தாயினுமினியரானந்தர்கருணைசாகரரவாருள்பெறுநாந்
தூயவரேவல்செயாவிடிற்கருணைதோன்றுருவாயிடாரெமக்கே. (௭)

அறிவிலோம்பொறியுமுற்றிலோமிவளையதட்டிநாந்துயிலுணர்த்திடவே
வெறியுறுகுழலாள்யாடாவென்றேவெகுண்டனளெழுந்திருந்தனளே
நெறியினியென்னேபாவிகளானோநேரிழைகனவினிற்பூசைச்
செறிதருமிடையூறிழைத்தனமுடியாத்தீவினையுற்றுளோம்யாமே. (அ)

ஏன்செய்வோமென்றுநின்றனர்கணத்தோரேந்திழைவிழ்ந்துளாள வட்கு, முன்செய்நல்வினையாற்றுயில்வரக்கனவின்முதல்வனைப்பூசனைபுரியுந், தன்செயல்சிவன்றன்செயலெனவுணருஞ்சைவரைக் கண்டடிபணிந்தாண், மின்செய்நுண்ணிடையாள்விரதமாதவரோகண்டுளேன்கனவெனவிரிப்பாள். (௯)

ஆலயமொன்றங்கதனிலோரிலிங்கரவரைநாணுவிதப்பொருளாற்
சீலமோடடியேன்சென்றுபூசித்தச்சிவன்றிருமுன்னின்றாடித்தே

னேலவார்குழலோரிளநலமின்றுடோழியரொடுமேவணெய்திச்
சாலவேபூசைபுரிந்தரன்முன்னர்த்தானுமேநடஞ்செயக்கண்டேன். [ ]

அன்னவள்கேள்வன்மன்மதவிகாரமடைந்துளானுங்குவந்துற்றுன்
மின்னாறுள்கையைப்பிடித்தனனின்பமெல்லியல்கேட்டியானமது
பொன்னகரதனிற்புகுந்துபர்புரிபூசைப்பூவணைதன்னின்மேலேறி
யின்னலமிராவுமுழுவதுநுகர்தும்வருதியென்றிசைத்தனன்வெகுள்

வைதனள்போபோவென்றனளதனைக்கேட்டனன்மால்பெரிதுடை
யான், கைதனைக்கொடுத்தேயெடுத்தனன்கொடுபோய்க்கனகமானத்தி
ன்மேல்வைத்தே பைதருமாலோடுதலாளுடன்றன்பதியினிற்புகுந்திட
நடந்தா, ளைதருமிடையாள்செலுநெறியதனிறைதனையே மொன்றுகண்
டாள். [கஉ]

காமுகனுக்குத்தலைவிரனுமொருபான்காதலைகன்னியர்பருவத்
தேமமாரெங்கைதமனையிடையுறுங்காலெனதுடைக்குரவர்வந்தெய்தித்
தாமமார்குழலாய்சிவலிங்கங்காணிற்சார்ந்தருச்சனைசெய்வாயென்று
ணமதுவெனக்கேவிரதமாற்றதனுக்காளிவந்திடலுயிரழியும். [கங]

வினையினேனுயிர்தான்விடுசிறும்விமலன்பூசனைவிடுகிலேன்கண்டாய்
மனையினிற்சிறியவபதினிற்கொடுத்தவிரதமீங்கிதனைநீமறுத்தா
ளனைவருதாரமாகிலிப்புகுதிபாக்கியவசத்தினுமம்பன்
கனைகழற்சரணத்தருச்சனைபுரியுங்கனைபத்திகிடைத்திடுங்கண்டாய். [ ]

அருமையாற்கிடைத்தசிவபத்திக்குத்திட்டமற்றிருந்தன்மையினுலும்
புருடனுன்மனையின்வாழ்க்கையினுலும்புகுதிடும்விக்கினமன்றே
கருமமுமறிபாப்காமத்தின்வசத்தாற்காலமுமகாலமுமுணராய்
தருமமார்சிவன்றன்பூசனைக்குரியசந்தியாகாலமிதன்றே. (கரு)

சங்கிதையுணராவுனதிளமையினையிளமினுர்மேல்வைத்தகருத்தைத்
தீங்குறவெரியிற்கொளுத்துதிவிடுத்தெசெல்லுதிகடிதினின்மனைகளே
பாங்குறுமெனையேவலிதினிற்புணரிற்பருவரல்வருமுனக்கன்றி
யோங்குறுதேறுஞ்சாம்பராங்காமமொழிவுறுதெனிலுரைக்குவன்கேள்.

இறந்துவீழ்பெண்கத்தபத்தினைக்கூடியினமேபெருக்கிடுங்காமத்
திறந்தனைத்தீர்திமனதினுலாசைசேர்ந்திடாமாதினைக்கண்டாற்
புறந்தருபிணம்போனேக்குதியுனக்கேபுத்திரவாஞ்சையுண்டாகி
லறந்தருகாலமறிந்துநீபுணர்தியதுவெனக்கிதயசம்மதியே. (கஎ)

மூடர்தத்துவங்களறிவுறுமையினுன்மொழிதருமொழிவலர்க்குறுதா
ளுடுதற்கரியசிவபத்தியில்லார்நாயகனருள்பெறுதவரே
தேடரும்பரமன்கருணையேபுரியிற்சேயிழையார்மயக்கொழியுங்
கூடுமதின்றேற்கற்பகாலத்துங்குடும்பத்தின்மயக்கறுதன்றே. (கஅ)

இன்னரன் கண்டுவணக்கமொடன்னைகேதமுற்றிருந்துளாயென்னை
யுன்னருந்துன்பநீக்கிடச்சிவன்றனூற்றுளான்றுயருறேலென்றான். [௨௭]

பூசனைபுரியாதவர்க்கலோதுன்பம்புகுந்திடுமித்துயர்விடுவா
யீசனையத்திப்போதினிஞானதிரவியவில்வங்கொண்டேத்து
நேசனாமவன்றான்பவத்துயர்நீங்கிமலனுருவனுமைபாகன்
றேசுறுபூசைபுரிபவனஞ்ஞைதீர்ப்பவனின்னறீரானே. [௨௮]

புண்ணியன்சிவன்றன்பூசையிற்புகுந்திடுருமளவுந்துயர்நீங்கா
நண்ணலாம்விசுவேசன்றனையருச்சிப்போர்க்குமோருந்துயருண்டோ
கண்ணுதல்விரேசுரன்விமலேசன்கடவுள்பிதாமகேசுரன்விகடை
விண்ணவர்பணிதூண்டேசுரன்றுண்டிவினாயகன்றன்மகதேவனை. [௨௯]

அன்னவர்தமைமனநினைத்திடிற்றுக்கமகன்றிடுநீநினைத்திலையோ
வென்னனையென்றேக்கின்னரன்புகலவிறைவர்காசியைநினைக்கின்று
ணன்னகாதுதானெப்படித்தாமோகானதுசாடிலனந்தோ
துன்னரும்பாவப்பாசபந்தத்திற்சுழல்குவேனென்செய்வேனென்பாள்.

சிவன்விசுவேசனருச்சனைதனிலேசிந்தைதான்செல்கிலதென்னை
கவலுறுஞ்சென்மகோடியிலவிரேசுரன்றனைக்கருத்திருத்தாது
பவமதையுற்றேன்சென்மமும்வயதும்பயனின்றிக்கழிந்துபோகியதே
யவமதாக்காயந்துயருறப்பிறந்தேனதிற்பிறயோசனமென்னே. [௩௧]

எறிந்திடவேண்டுமிச்சென்னத்தையெரிதரும்விட்டிருப்பாரோ
செறிந்திடுமொடருடன்சகவாசஞ்சேர்ந்திடச்செய்ததெய்வமோ
மறிந்தமான்கரத்தாயெம்மனமுனதுமலர்ப்பதத்திருந்திடப்பணிப்பா
யறிந்திடுமறிவும்விடயநீத்துன்றனருடனையறிந்திடவருளே. (௩௨)

சங்கராவென்றன்பவங்களைப்போக்காய்சரணமேசரணமென்றடைந்தே
னிங்கெனைப்புரப்பாயெனநின்றுபுலம்புமேந்திழைமனத்துயரிங்கம்
பொங்கியசிக்கைதக்கின்னரன்கண்டற்புதமுடன்கொடுவந்தபூசைக்
கங்கமாம்பொருள்களாதாவோமெளித்தனன்பணிந்துகைக்கொண்டாள்
மனமிகமகிழ்ந்தஞ்செழுத்தின்மந்திரத்தால்வள்ளலைப்பூசனைபுரிந்தாள்
கனைதசேரவடன்கருத்தினையறிந்தகின்னரன்கழறுவானன்னே
யுனதுளமதனிலிச்சையாம்பொருள்கள்யாவையுமுதவிடவல்லேன்
றனையன்யானுனக்குப்பராபரன்பூசைதான்செய்வாயெனக்குநீதாயே.

புகுந்திடுஞ்சனனவாசனையொழிந்துபுந்தியாற்சிவார்ச்சனைபுரிதி
தகும்படிநித்தமிப்படிசெய்வாய்தனுவெடுத்தோர்சென்மமயக்கே
மிகுந்திடுவோர்களவர்சகவாசமேவிடில்விக்கினம்வருமாற்
செகந்தனிற்பெரியோரிவையறிந்தரனைச்சிந்தித்தியாவும்பெற்றனரே. [ ]

என்றுகின்னரன்றான்புகன்றனகேட்டேயிறைஞ்சினளியம்பிடுகின்றாள்
பொன்பிரளிரத்நகோடிதானியங்கள்பொருந்தவேயெனக்கிருந்துளவா

லொன்றிமெவையின்றருச்சனைக்குதவாதொழிந்தனவவைகொடேவந்தே
மின்றிகழ்சடையோனாலயஞ்சமைக்கவிசாரமுற்றிருந்துளேனென்பான்.

கருத்தவைபுரியுமுபாயநீபுகல்வாய்காமுகனென்னுடைக்கணவ
னருத்தியாயான்செயர்ச்சனைதகைவானவன்சிவபூசனையறியான்
பொருத்துறுஞ்சனனவாசனையதனாற்போகமேவிடாதுற்றனவன்மா
கிருத்திமகுணத்தான்பூசைசெய்வதற்கேகேடுசூழ்கின்றனனன்றே. ( )

வெறியதுபிடித்தோருன்மத்தமேவியருச்சனைமேவுதலிலா
யறிவிலாகிநரகவேதனையிலடைவராங்கதுகிசமாமே
சிறியசிந்தையராயிளநலமின்னார்ச்சேர்வதற்குபாயமேபுரிவார்
கிறியதுதீர்க்குஞ்சிவனருச்சனைதான்கிடைத்திடவினைத்திடாரன்றே.

புரைதவிராசகுலக்கொடிபுகலக்கின்னான்கேட்டுளம்பூரித் [கெல்லா
துரைசெய்வானெல்லாவிலக்கணங்களுமேயுடையபொன்னேமின்னார்க்
மரசியேமோகமறுப்பவன்சிவனேயன்றிமற்றியாருளர்தவத்தோர்
நிரைதருந்தேவரனைவருமோகநீங்கலார்நீக்கவல்லவரோ. [௩௯]

புண்ணியன்பூசைபுனிதமேயாகுமதற்குறுதலை பிராயஞ்ச
மெண்ணுறுபிரயாசத்தினிலன்றிமெய்துறுதிறைசிவபூசை
பண்ணுறும்பெரியோர்பாருபகாரர்பணிப்பலனனைத்தையுமடை வார்
கண்ணுறுவீணர்மோகதுக்கத்திற்கலங்குவார்சுகம்பெறமாட்டார். [௪௰]

மோகமுற்றவருமெத்திறமேனுஞ்சிவார்ச்சனைமுயன்றிடின்மோக
சாகரஞ்சின்னாளினிலொழிவாரப்பத்தியுமான்றாவேண்டு
மாகுமர்ச்சனையான்மனத்துபார்முன்போலடைந்திடாததிமகவுளதாம்
போகமாசொழித்தர்ச்சனைபுரிவார்க்குப்புதல்வரின்றேற்பிதிர்வருந்துப.

ஆங்கவர்வருந்தாவண்ணமேபாமனர்ச்சனைப்பலத்தினாற்றனே
பாங்குறுகற்பின்மடநலாளிடத்திற்பாலர்சற்குணத்துடனுதிப்பா
ரீங்கிவைதன்னிலொருகதைபுகல்கேனெழில்பெறுகாந்தர்ப்பநகரி
லோங்குறுவிசுவாவசுவெனுமொருபேருடையகந்தர்ப்பனுற்றுளனே. [ ]

அவன்றனக்குருவிலிளமையினலஞ்சேர்மனைவியரநேகர்தாமமர்ந்தார்
தவந்தனிற்பெற்றசெல்வத்திற்களவோவில்லையத்தையலார்தம்மை
யுவர்துமுன்வதுவைபுரிந்தபின்னவனுக்கொழிவுவந்துற்றதாலவன்றன்
சிவந்தவாய்க்கருங்கட்டெரிவையர்போகவிச்சையேமிகவுறுஞ்செயலோ?

அன்னவன்விரத்தசிந்தையனேனுமாங்கவர்தமையும்விட்டகலான்
மின்னனார்போகந்தன்னையும்விரும்பான்விமலனாலயத்தினிற்போகித்
தன்னிகரில்லான்பூசனைத்தியானந்தன்னிலேகாலம்போக்கிடுவா
னின்னவன்பூசைவிக்கினம்வந்ததிலையிவனிப்படியுறுங்கால். [௪௪]

ஆங்கவன்பிதிர்க்கண்மறையவருருக்கொண்டண்ணல்வெண்ணீறு
கண்டிகையும், பாங்குடன்புனைந்துசங்கராசம்போபரமமாதேவ வென்

* கிரி- பொய்.

ருதித், தீங்கறுசைவச்சிவனடியவராய்த்திறல்பெறுமவன் நீடத்துட
னே, பூங்குழலுமைகேள்வனைப்பணிந்துறையுமாலயம்புகுந்துளாரன்றே

கண்டனன்விசுவாவசுவெதிர்கொண்டான்காதலால்வணங்கியாச
னத்திற் றெண்டெனிருத்திப்பூசனைபுரிந்தான்சொல்லுவான்சிவனடித்
தொழும்பீ, ரெண்டருமபெரியீர்பூசனையெங்கேயெங்கிருந்தெங்கெழுந்
தருள்வீர், பண்டருமறையீர்பகருதிரென்றன்பரிவுறுமிதிர்க்கள்சாற்று
வரால். (சுசு)

மேருவின்சிகரந்தனிலிருந்திங்குவருகின்றேம்விமலன்றுருவாய்ச்
சாருறுமிலிங்கபூசனைகயிலைதனிலிருந்தியற்றினேம்யாங்கள்
சீருறுபரமனருளினாலென்றுஞ்சிவார்ச்சனைபுரிதிறம்பெற்றே
மேருறுமெங்கட்கெந்தலோகத்துமிசைந்திடாக்கருமமொன்றிலையே. ()

முக்கணன்பூசைத்திறத்தினாற்சகலகாமமுமுறையினிற்கொடுக்கத்,
தக்கபாந்தேவர்கணங்கள்பூசிக்குந்தன்மையேஞ்சகலலோகத்தும், புக்கு
றைந்திடுவோமாங்கொருதினத்தினிற்போந்துளோம் பொன்னுலகதனி
ல், மிக்கவானவர்கோன்விதியுடன்பூசைபுரிந்திடவிதியுலகடைந்தோம்.

ஆங்குறுமலரோன்பூசைபெற்றிருந்தோமவ்விடைப்புதுமை கண்ட
னம்யா, மீங்கதுபுகல்வோந்திறமுடன்கேட்டியயன்சபையிருந்துளோர்து
ம்மிற், பாங்குறுசிலர்செந்தாமரைமலர்ந்தபரிசெனமுகமுடையவராய்த்,
தேங்குகங்கையினுன்றியானமாயமிர்தபானத்தாற்செழித்திருந்துளரால

அன்னவர்பெருமையாவரேயுணர்வாரவர்பரமானந்தருசிசே
ரின்னமுதாகுஞ்சிவரகசியத்தினிருங்கலைதமேகட்டமேதயல்லாற் [யும்
பன்னுமற்றொன்றும்பயின்றிடார்பஞ்சாக்கரத்தொடுமுருத்ரவத்தியா
தன்னையேமனத்திற்றரித்தனர்பூதிகண்டிகையுடலெங்குந்தரித்தார். ()

கோமளவில்வத்தளிரொடுநானாவிததிரவியங்களுங்கொண்டே
யாமளையிடத்தானிலிங்கவர்ச்சனைசெய்திடபத்திமிதயமுற்றுடையா
ராமவர்துக்கமென்பதொன்றறியாரவர்களிற்சிலர்விசுவேசர்
தாமரைச்சரணார்ச்சனைசெய்தாரேனுஞ்சஞ்சலமனத்தராயிருந்தார். ()

ஊக்கமதுடையவெங்கடமிதயமாங்கவருறுதுயர்கண்டே
யேக்கமதுற்றதயன்றனைநோக்கியாங்களிங்கிவர்களிற்சிலரோ
ராக்கமதின்றியுறைந்தனரென்னேயென்றனனம்புயக்கிழவ
னீக்கமதில்லாதிவர்மனத்துயர்நேர்காரணநிகழ்த்துவனென்பான். ()

நற்றவர்கேண்மின்கந்தர்ப்பலோகநணும்விசுவாசுவென்பான்
கற்றைவேணியன்றன்பூசனையொழியான்கண்டிபூதியுந்தரித்துடையா
னுற்றிடுமிளமைபெற்றிடும்யுவதிமாதர்களநேகரோடுறைவான்
சொற்றிடுமிவ்வாறுற்றுமம்மாதர்தம்மொடுந்தோயகில்லானால். [ருந]

அவனவர்ப்பிரியானன்னவன்வடிவோவாங்கவன்மனைவியரழகோ
வுவமைமற்றின்ருற்செல்வமுமிகுமாலொளிமணிமாளிகைமேல்வீ
டிவைசொலத்தகுமோவவன்விளையாடுமெங்கணுமெய்தருஞ்சோலை
நவிறருமந்தவனத்துறும்போதுநாரியர்தம்மொடும்பேசான். [௩௪]

அந்தநல்வனத்திற்கங்கைநீர்வாய்க்காலாகவேயோடிவந்தவணிற்
கொந்துறுமலர்ப்பூஞ்செடியொடுகொடிகடருக்களுங்குளிர்தரப்பாயு
முந்துமாணிக்கமிழைத்தசோபானமுளரியோடையுமுளதவணில்
வந்துளேயுறைவரனவ்வனத்தருக்கண்மாலைபாப்பூத்திடுமன்றே. [௩௫]

அவ்வனநடுவினரதனமிழைத்தகோபுரமம்பொன்மண்டபங்கள்
செவ்வுறுபிரகாரத்துடனந்திகொடிக்கம்பமீடபத்தேவுடனே
யெய்வெலாத்திசையுமெத்திடுமிலிங்கநாயகனினிதுவீற்றிருப்பான்
முவ்வகையுலகும்பரவிடும்விசுவாவசுவவன்முறைமையிற்பணிவான். ()

அந்தநல்வனத்திற்றருக்குலமளிக்குமருங்கனிமலர்கொடேயரனை
முந்துறுபூசைபுரிந்துண்டிநீத்துமுசிப்பிலாதாங்குறைகுவனூற்
சிந்தையில்விடயவிச்சைபதாகநதெரிவையர்தங்களைப்பாரான்
புந்தியின்மைந்தர்பவுத்திரர்வேண்டுமென்னவும்பொருந்திலனவனே. ()

ஆங்கவன்பிதிர்க்களிங்கிவர்கண்டீரவன்புரிபூசையினாலே
யோங்குநம்முலகினிவருவதின்றுருறையினுமவன்றனக்குரிய
தீங்ககறருசந்ததியிலாமையினூற்சிந்தையிற்கலக்கமுற்றுறைவா
ரேங்குவாரவன்பூசனைந்தடைவந்தாலிழிந்துபோகுவமியாமென்றே. ()

இருந்தவப்புதல்வர்தமையவன்பெறுமேனலெய்திடுந்துயரெனவேக்குற்
றருந்திடுமமுதுமயின்றிடார்மனத்திலானந்தமுற்றிலாரிருந்தார்
பொருந்திடுமென்சந்ததியிலாமென்றேபூசனைவேதனத்தடிசில்
விருந்தெனவளிக்கின்வாங்குறுரேற்றூற்கையின்விட்டெறிகுவாரிவரே.

எச்சமற்றிருந்தானவனெனவிவர்களின்பமற்றிருந்தனரிதனை
விச்சைசேர்விசுவாவசுவறிகிலனல்விமலனையத்தயாமத்து
நச்சுறுபூசைபுரிந்துறுகின்றுனரியர்ப்புணர்ந்திலன்பரமன்
பொச்சமிலாராதனையமுதுண்டுபூரித்தான்போசனமறியான். (௩௰)

மைந்தர்களாகாரத்தினிற்செழிக்கின்மாதரைப்புணர்ந்திடுமின்பஞ்
சிந்தனைசெய்வார்விசுவநாயகன்பூசனைருசித்தம்மைவைத்துடையார்
புந்தியிலுண்டிமாதர்தம்போகம்பொருளென்னூர்புராந்தகன்பூசை
யந்தமிலாதபொருளெனக்காலம்போக்குவாரெனவயனறைந்தான். ()

**முப்பத்துமூன்றாவது விசுவாவசுச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-௧௨௬௬.



முப்பத்துநான்காவது,

# காலாக்கினிச்சருக்கம்.

வேறு.

மாவிலங்கைபலாசுதாதகிவன்னிமாமருதங்
கூவிளந்தளவம்பலாமலர்கொன்றைபுன்னைகுரா
நாவனீழலின்மேவிவாழ்தருநான்மறைப்பொருளான்
மூவர்பாடியதேவநாயகமுதல்வனைத்தொழுவாம். (௧)

முனிவன்யாக்கினவற்கிசொற்றனன்முளரிமேலுறைவா
னினிதுகூறியவாய்மைகேட்டனமியாங்கடாமெனவே
மனமகிழ்ந்திடுபிதிர்கண்மாதவவேடமாய்வருவோ
ருனதுளத்தினில்வைத்தியாலெனவோதுவார்பினுமே. (௨)

கேட்டியால்விசுவாவசுப்பெயரோய்கிளத்துவமியா
நாட்டின்மிக்கதோர்மைந்தரின்மையினன்மையொன்றிலையே
தேட்டினுற்றிடுபுதல்வருஞ்சிவபத்திசேர்ந்துளரேற்
பீட்டின்மிக்கவராவர்சங்கரர்பிரியமெய்துவரே. (௩)

பெருகுசந்ததிபெற்றிலார்கள்பிதிர்க்கடம்மொடுமே
யுருகுதீயவெநரகிலுற்றிடுவார்களுண்மையதே
வருகடன்மறைசொல்லுமூன்றெனமாதவத்துடையோர்
தருவினீழலுளோர்பிதிர்க்களினோர்கடங்கடனே. (௪)

இருமைமாணியினெறிநனூலுறலிருடிதங்கடனே
தருமபன்னியொடேமகஞ்செயலமரர்தங்கடனே
யருமைசேர்தருபுதல்வரைப்பெறலதுபிதிர்க்கடனே
யொருமைசேர்தருமவைகண்முக்கடனுதவவேண்டியதே. (௫)

இனையசந்ததியுதவவேண்டுவை*தெவிசுவாவசுவே
நினையுவந்துசொனேநெடும்புவிநீயுறைந்திடுநாட்
புனையும்வேணியன்பூசைசெய்குவைபின்னர்யார்புரிவார்
மனையின்மைந்தர்செய்கடனிலாதுநின்மறையுநின்பெயரே. [௬]

எவன்மனைக்கிடைபரமனர்ச்சனையின்றியுற்றிடுமே
லவன்வணங்கிடுபிதிரயன்பதியதிலுறைந்திடினுங்
கவனமோடுறுநரகிலாழ்குவர்காதன்மைந்தர்கடாஞ்
சிவன்மகிழ்ந்திடுபூசையில்விடைசெய்தன்மாதவமே. (௭)

தனதினுற்புரிபூசைநாடொறுமேதழைத்திடவே
மனதுவந்திடுமாதபோநெல்வேலிவந்துறுபோ
தினிதுகூடிநன்மைந்தரைத்தரவேணுமன்றியினோர்
நனியுறுஞ்சிறுபோகம்வேண்டிடினாகநிச்சயமே, (௮)

* எ-குறுக்கல்விகாரம்.

வேறு.

நாளுமேசிவபூசைசெய்துறுசந்ததிக்குமாறுதவியே
மானிவன்புரிபூசைவழிவழிமன்னிநாளும்விளங்குநீ
ஞானமொன்றியமணிமயச்சிவலிங்கபூசைநயந்துளா
யினவிங்கினமெய்திடாதுசெயினீபமைந்தர்கள்வேண்டுமே. (௯)

இங்குனக்குளபூசையின்பொருளெண்ணிறந்தனவல்லவோ
பங்கமற்றிடுமுன்குணத்திசைபாவைமாதருமுற்றுளார்
பொங்குபுத்திரரிலையெனப்பழிபூணுறாததன்முன்னைநீ
தங்குசந்ததிவாய்த்திடச்செய்திசங்கரன்பணிதழையவே. [௧௦]

நட்பினெய்தினமுன்னிடத்தினில்பாங்கடாமெந்நாளினுந்
திட்பநல்கியசிவனையர்ச்சனைசெய்திநீபதறேலியாம
மொட்பின்மேவியநேயமங்கதுபெருகுமுன்னிடையன்றியு
நுட்பவழியிலேனுநீயிடுணட்பராமெனநோக்குவாய். (௧௧)

பனவர்தங்குலமுற்றுடன்சிவபத்திபெற்றிடுமெங்கண்மே
லுனதுசிந்தையிலுவகையெய்தவுரைக்கவேணுமதேகொலோ
புனையும்வேணியர்தமையருச்சனைபுரியுமைந்தர்பவித்திர
ரினையர்தங்களைநோக்குகின்றதுமேலதாகியவின்பமே. (௧௨)

சாற்றுமப்படியுடையனேமுத்தனன்னவன்றந்தைதாயரும்
போற்றிடுங்குலமுழுதுமேயுயர்புனிதமாஞ்சிவபூசனை
யாற்றிலார்தமைப்பெற்றபோர்நரகத்திலாழ்பவர்பெறு
மேற்றமாம்புதல்வர்சிவன்பணியுறுவர்காரணமுரைசெய்கேம். (௧௩)

நீறுகண்டியணிந்துசிந்தையினித்தனைத்தொழுபத்தியே
தேறுமாதரைநல்லவேளையழிந்துசேர்ந்திடிற்சைவநூ
லாறுசேர்புதல்வரையுயிர்ப்பர்களவர்களுன்னினுமிக்கதாய்
நூறுசேரொருபதின்மடங்குநுண்ணியர்களாவர்கடிண்ணமே. ( )

அவர்கடஞ்சிவபூசைகண்டுளமகிழ்ந்தியென்றானன்புசேர்
தவர்களானபிதிர்க்கள்சொற்றனகேட்டுவந்தனன்சமாதித்
துவகையுற்றிடுமவர்களுக்குறுபூசையாற்றினனுண்மையாஞ்
சிவன்மகிழ்ந்துறுமவனதன்பமுதுண்டயன்பதிசேர்ந்துளார். (௧௫)

மற்றிவாறுநிகழ்ந்தபின்விசுவாவசுத்திறல்வாய்மையோன்
கற்றைவேணியன்மெய்த்தியானமுடன்களங்கள்களித்துற
நற்றினத்திநின்மேவியேசுரதத்திலின்பநயந்துளான்
பொற்றிரட்சடைபூதிகண்டிபுனைந்தமைந்தர்பிறந்துளார். [௧௬]

வந்தசந்திநாயனேகர்தம்வதனநோக்கிமகிழ்ந்துளான்
முந்துமங்கவர்தங்களுக்கரனுமந்தான்முறையாகவே

வறைதரும்பிலிங்கார்ச்சனைக்குளதாமதங்களுண்டாயதோ
குறைதருந்திரவியமுண்டோமனங்குழைந்ததோத்திரமில்லையோ.

வேறு.

என்றுபிரமதேவன்றனியம்புமொழிநாரணன்கேட்டே
துன்றுபயத்தினெடுஞ்சொல்வான் றூயாயுயிர்போம்வேளையினு
நன்றுதருகண்ணுதல்பூசைநான்றன்வழுவல்செய்யேனாற்
பின்றுமுகாந்தகாலத்தும்பிறழாதியற்றல்புரிவேனே. [௩௬]

மாதேவன்பூசனைப்பிரியமருவாமனத்தோடேயிருக்குங்
கோதேயனையதேகத்தாலாவதென்னேகுழவிமனை
தீதேதருசெல்வங்களிவற்றானாவதென்செப்பாய்
பூதேசனையெக்காலத்தும்பூசைசெய்யார்க்காவதுண்டோ. (௩௭)

தந்தைபுனிதன்றனக்குதித்தோன்றனேசிவனைப்பூசைசெய்வான்
சிந்தைமகிழ்தேவுத்தமனம்பிகைதன்பாகன்சிவபூசை
வந்தமுறைமையாற்புரியான்வாளுள்செல்வம்வீணாமே
யெந்தைபூசையமுதன்றியமுதம்வேட்டோனெரியுண்போன். (௩௮)

ஆழிதன்னைலவன்முடியையறுத்தல்வேண்டுமகிலேசன்
வாழியுமைகேள்வன்பூசைமன்னுந்தவத்தாற்பெற்றேனே
யூழிநாதன்பூசையிலாஞசமுறுவனுவன்றனே
பாழினையந்தனக்குற்றபாரமவனாலாவதென்னே. (௩௯)

பூசைக்குதவுந்தேகத்தைப்போற்றல்வேண்டுமல்லாத
வாசைக்குதவுஞ்சடலத்தைப்பாழியாற்கொய்திடல்வேண்டுந்
தேசனுமஞ்சொல்லாதநாவைச்சிதைத்தல்செயவேண்டு
மாசிலரன்பூசையிலமுந்தென்மனமந்திரத்தைமறவாதே. (௪௦)

திருநீறுடன்கண்டிகைமாலைதிரிபுண்டரத்தைமறந்திலனு
ளுருகுமனத்தின்மோகமுறேனுறுங்காற்கேடொன்வருமே
மருநீடியகொந்தளவுமைதன்மணவாளன்றன்பதகமலந்
தருநீழலிலென்மனமிருக்குமதுசத்தியஞ்சத்தியமாமே. [௪௧]

இதனுக்கெம்மான்பதங்கரியேயிதுபேதிக்கிலென்மனத்தை
விதனத்தேகந்தனைச்சுடவேவேண்டுமெனவேகியமித்தேன்
சுதனைப்பாடுனென்றாகன்றாய்தந்தையானசோதியையே
முதன்மைப்பூசைபுரிவதுவேவேலையாகமுயல்வேனே. (௪௨)

ஈசன்றனைச்சிந்திப்பதல்லாலெனக்கேயிச்சையொன்றிலையாற்
றேசனவன்மங்கள்வுருவந்தேர்வார்பெறுவர்மங்களமே
யாசையாகியவன்றனையேயருச்சிப்பேன்வேண்டியவெல்லா
நேசமுடனேதந்தளிப்பனிதியமெனக்கன்னவன்றனே. (௪௩)

அந்தத்தனத்தையார்விடுவாரமலன்பாதரேணுவே
பெந்தத்தருமந்தனக்குமேமுதன்மையினைநாலாக்கினியான்

மருவலர்தம்முடியிடறுங்கழற்கால்வேக்தேவள்ளலாரன்பர்தமிலு னைப்போல்யாரே, திருவுறுமுற்செனனத்தும்பரமன்பூசைசெய்தனையா லளவில்செல்வஞ்சேர்ந்தற்றுயே, வெருவுதலெய்தாதுவிசூவாசமுண் டேன்மிக்கபொருள்கொண்டுநன்றுப்பூசைசெய்வா, யிருமைதருபரம ரன்பருருவங்கொண்டேயிலிங்கத்தர்ச்சிக்குமணிகளையேற்கின்றூர். [ ]

அண்ணலாரன்பர்சரலிங்கமென்றேயறிகியாலநேகமைந்தர்ப்பயந் தாயேனு, கண்ணுமவர்பான்மோகந்தவிர்திதேகநன்குறும்போதேபூசை நயத்திகண்டாய், மண்ணெலாம்பரித்தசெல்வம்பெற்றேமென்றுமகிழ் ந்திடேலுதயமத்தமனமாங்காலந், திண்ணமாம்வாணுள்கொள்காலனுகு ஞ்சிவார்ச்சனையேயழியாதசெல்வந்தானே. [ருஅ]

இறந்திடிற்றேகங்கூடவருவதின்றுலீசன்பூசனைப்பலனேயெய்துங் கண்டாய், பிறந்திடுமைந்தர்கண்மனையாற்கதிமற்றுண்டோபேறுபெற்றி டத்தருமங்கடிதிற்செய்வாய், சிறந்தமிருத்திஞ்செயரைப்பூசைசெய்தா ற்சினத்துவருமிருத்துவினைச்செயிக்கலாமான், மறந்தருகூற்றுவனையே யிறந்தசென்மமற்றவையில்வெற்றிகொளமதித்திலாயே. [ருகூ]

சாற்றுமிருத்துவைச்செயித்தாலதுவேமேலாஞ்சவுரியமிங்கிதுபுரி யிற்சரியார்சொல்வா, யாற்றலிதிற்காண்குதுமாற்சூராரனோரடர்ப்பரோ மசகத்தையரியைவெல்வா, ரேற்றமாமிதுவெங்களிதயமாகுமிடர்செய் மிருத்துவையடர்சாதனமேதென்றுற், போற்றுகங்கைக்கமலமலர்க்கம லம்வில்வம்பூதசிவகிசிமுதலாம்பொருள்கண்டாயே. [சூ0]

சிறந்தசிவகிசிப்பூசைபுனல்கொண்டேனுஞ்செய்துமுடித்தாணடி யாருடன்புசித்தி, யறந்தனினீதேடுபொருளெல்லாமீசனன்பர்தமக்களி த்திடுதியதுவேயின்ப, நிறந்தருமாணிக்கமயமண்டபத்தினித்தனைத்தாபி த்தரியபூசைசெய்வாய்,பிறந்திடுசென்மச்சபலமிதுவாமென்றுபெண்ணி னல்லார்கணவனொடும்பேசினுரால். [சூக]

நாற்பத்துநான்காவது பிரவஞ்சவிற்பத்திச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கககூசூகூ.



நாற்பத்தைந்தாவது,

## வில்வவனச்சருக்கம்.

வேறு.

கரியானும்வெள்ளைமயின்மேவுசெய்யகமலாசனத்தனவனுந்
தெரியாதபச்சையொருபானிறத்ததிகழ்செம்பொன்மேருவனையான்
பிரியாதமிக்கசிவலோகமென்னபெரிதானபொன்னிவளநாட்
டரிதானசைவர்சகவாசமேவுமவர்மாதவஞ்செய்தவரே. [க]

பெருமைக்குணமிக்கசிவசீலமேவுபிருகுத்தவன்மொழிகுவா
னருமைத்திறத்தின்மனைமாதர்செஞ்சொலமுதத்தையுண்டவரச
னுருகுற்றதாகமுடையோர்குளிர்ந்தவுயர்பந்தருற்றகமழ்நீர்
பருகுற்றுமிக்கசுகமெய்தல்போன்றபரிசாயினனவனரோ. [உ]

திறன்மன்னனுற்றசிவராத்திரிக்கணறனூழ்கிமிக்கதிருநீ
றறன்மன்னுகண்டியணிவுற்றிலிங்கவரிதானபூசைபுரியா
வுறமன்னுகின்றபொருள்யாவுமன்பருளமின்பமாரவுதவி
நிறமன்னுமன்னமுடிமன்னருண்ணநெறியாலளித்தனனரோ. [ங]

இத்தன்மைபூதசிவராத்திரிக்கணினிதானபூசைநியமஞ்
சுத்தந்தழைக்கமனைமாதரோடுதூய்தாவியற்றியிறைவ
னித்தன்றனக்குநைவேதனஞ்செய்கின்மாலியங்கணுகராச்
சித்தங்களிக்குமவனன்புகண்டுசிவனந்தியோடுபுகல்வான். [ச]

திடமுற்றபத்திநிடதத்திராசதிலகன்செய்பூசையதுபோற்
புடவிக்குளில்லைமகிழ்வுற்றுளோமன்னவன்மேவுபூவையனையா
ரடைவிற்செய்பூசைதிடபத்திநீடியதுசெம்பொன்மானமிசையே
கொடையுற்றமேன்மையுடன்மற்றனோர்களிவண்வந்திடக்கொணர்தியே

அளியண்ணலின்னதுரைசெய்யநந்தியதுகேட்டிறைஞ்சிவிடைகொண்
டொளிர்செம்பொன்மானமிசையேறியோங்குநிடதத்திராசனுறையும்
வளமன்னுகின்றமணிமாளிகைக்கண்வாராயிரத்தவடிவின்
மிளிர்துங்கலிங்கமொருகோடிகண்டுமிகுமன்புகொண்டுதொழுதான். [ ]

அதுகண்டுமிக்கசிவபத்திகொண்டவடல்வேந்தன்மாதருடனே
யெதிர்கொண்டிறைஞ்சியரியாசனத்தினிடைமேவவைத்துவிதியான்
மதிகொண்டபூசைபுரிதந்தபோதுமகிழ்நந்திசொல்வனரசே
துதிகொண்டபூதசிவராத்திரிசெய்தூய்தானபூசையதனால். [எ

எனையாளுமீசன்மகிழ்வாகியம்பொனெழின்மானமீதினிலுனையே
மனைமாதரோடுகொடுவர்தியென்னவுந்தெனெனச்சொல்பொழுதிற்
றனையேநிகர்க்குமரசன்மகிழ்ந்துதவபூசைமாதருடனே
மினையேநிகர்த்தமணிசேர்விமானமிசையேயிவர்ந்தனனரோ. [அ]

மலர்மாரிதேவமுரசங்கள்வானமடவார்நடங்கள்பொலியச்
சிலகானவீணையவர்பாடமெல்லநடைகொண்டுசெல்லுமளவி
னிலமீதினின்றசிலமாதர்சனெறியுற்றபூசைநினையார்
சலகாமபோகபதிபூசைசெய்ததகையோர்கணின்றுபகர்வார். [கூ]

வேறு.

அரசனைமுல்லைமாதர்பதிபூசையாற்றிலன்றோ
விரசுவர்சுவர்க்கமென்றேநின்பணிவிரும்பினோமே

தரைதனிலெம்மைவிட்டுத்தனித்துநீபோகின்றாயேர்
பரசுறும்யாங்களெய்துங்கதிதனைப்பகராயென்றார். [௧0]

பாவைமீர்பரமனார்தம்பணிவிடைபுரிதருனே
யாவதிங்கதுவேயென்றெண்றறையவும்விரும்பிலீராற்
றேவனைத்தெரிசித்திலீர்சிவன்கதைநாமங்கேளீர்
தாவரும்பதிதனக்குப்பதிபூசைதான்செய்கில்லீர். [௧௧]

ஆனதாலுங்கள்சென்மமவத்தமாய்ப்போயிதன்றே
யூனமேபுரிந்துளோருக்குறுகதியுளதோவென்று
ஞானமாவேந்தன்சொல்லநாரியர்பதிதன்பூசை
வானமதளிக்குமென்றுமனமகிழ்ந்ததுசெய்தோமோ. (௧௨)

துன்றியகணவன்போகத்தொழிலொற்றேகைபாகர்க்
கொன்றியபணிசெய்கில்லோமுபவிடைப்பாகன்பூசை
யன்றியேகதியின்றென்பதின்றறிந்தனமாகெ...
...மென்றனரழுதார்மன்னன்காணவேயிறந்தாரன்றே. [௧௩]

அந்தமின்னார்கடமுனடர்த்திடுங்காலதூதர்
வந்தனர்கழுத்திற்பாசமாட்டினர்குறுக்கிட்டீர்த்தா
ருந்தினரடித்தார்கூற்றனுலகந்திற்கொண்டுபோனா
முந்தியநமன்றான்கண்டான்மொழிகின்றானிவர்யாரென்றே. [௧௪]

அருகினிற்சித்ரகுத்தர்கம்மைப்பார்த்தாகாசத்தின்
விரிகின்றசிறைப்புட்போலப்பறந்தவரின்னார்பாவ
தெரிகின்றதில்லைச்சொல்வீரென்றலுஞ்செப்புகின்றா
விரிகின்றகுழலார்முக்கட்பதிபூசைவிரும்பிலாரே. (௧௫)

பதியெனப்பேர்படைத்தோன்பணிசெய்பத்தினிமாரின்னோர்
விதிதருமிவர்தங்கேள்வன்மெய்ச்சிவபத்திசேர்ந்த
கதிதருமடவாரோடெங்கலந்துபொன்விமானமேறி
மதியணிபவன்றன்பூசைமகிமையாற்கயிலைசெல்வான். [௧௬]

ஆமெனச்சித்ரகுத்தரறைந்தனரியமன்கேட்டான்
பாமரமடவாரின்னோர்பகருமம்மவைபுகாமற்
கோமுன்றமையினிற்றூரக்கொடுபோய்த்தண்டியுமென்றே
தீமுகில்போலுந்தூதர்சிலர்தமைவிடுத்தான்சீறி. (௧௭)

அவர்கள்போயனையரின்னோர்கழுத்தினிலார்த்தபாசந்
தவிர்தரவவிழ்த்துவிழ்ந்திச்சாற்றியகோபத்தீயாற்
கவலுறவெரித்தாரன்னோர்கதறினார்கீழ்விழுந்தார்
புவிதனிற்புரண்டேயையகோவெனப்புலம்பினாரால். [௧௮]

விமலன்றன்பத்திமாதர்தம்மொம்விமானமேறி
பெருமைபருவிறைவன்வெள்ளிப்பொருப்பினிலேகும்வேந்தன்

கமைதருகற்பின்மேயகாந்தையர்காலனூரி
லமைதருதுபருமன்னோராற்றலுங்கண்டானன்றே. (கக)

நந்தியைப்பார்த்துச்சொல்வானுதனையெனதுகற்பிற்
பைந்தொடியாரைக்காலபடர்கடண்டித்தல்பாரா
யெந்தையேயெனநந்திசனியம்புவானரசவெம்மான்
சுந்தரச்சரணம்போற்றுர்சுகம்பெறுகுவரோசொல்லாய். (உ0)

நீயுமங்கவர்களோடுநேசமுற்றிருந்ததாலே
ஏயகன்கயிலைக்கேகுநன்மைபெற்றுடையையல்லை
யாயினுஞ்சிவன்றன்பூசையாற்றியபடவரோடு
மேயினைபூதநாதன்சிவநிசிவிரதம்பெற்றாய். (உக)

அன்னவாற்கயிலைக்கேகுநெறிபெற்றுயான்பாலன்பு
மன்னிடாதவர்க்குவெள்ளிவரைக்கேகும்வழியுமுண்டோ
வென்னையாளிறைவன்பூசையியற்றினர்தமக்கேயல்லாற்
பின்னுளதருமஞ்செய்தோர்பெறலரிதரிதுகண்டாய். (உஉ)

சங்கரன்பூசைசெய்யாத்தகைமையாற்காலபாசத்
திங்கிவர்படும்பாடின்னமெத்தனையென்றுசொல்கேன்
மங்களவுருவமெல்லாநெகிழியின்வடிவமானூர்
கங்கைவார்சடையான்றன்னைக்கருதலார்க்கின்பமின்றே. (உ௩)

அரசனீகேளாயிந்நவரிவையர்தமையுமம்பொன்
விரைசெறிவிமானமேற்றிக்கொடுபோவோமென்னின்மேலாம்
பரமர்சம்மதியின்றாலப்பரிசுநாஞ்செய்யலாமோ
வரனையர்ச்சனைசெய்யாதமாதர்க்குவாய்க்குமோதான். (உச)

வள்ளலாராணையின்றிமற்றொருகருமநம்மா
லுள்ளலாந்தகைத்தேயிந்தமாதரையுடன்கொண்டேகக்
கொள்ளுமுன்னிதயந்தன்னைவிடுதியாற்கூற்றன்றூதர்த்
தள்ளியிங்கிவர்க்கொண்டேகிற்றன்டனையிவர்க்குண்டாமே. (உரு)

மன்னவாவாகையாலேமற்றுநாமன்றனக்கே
சொன்னதாலாவதில்லைச்சொல்லினுமவன்கேளானு
லென்னவேநந்திசொன்னவார்த்தையையிராசன்கேளாச்
சென்னிதாழ்த்ததிசயித்தான்செப்புவான்பின்னுமன்றே. (உசா)

ஐயநீசற்றேகாலன்றனையழைத்தரிவைமார்க்குச்
செய்யலையிடர்தானென்றுதிருவருள்புரியாயாகி
லுய்யலரென்றலோடுமோர்ந்தனனியமன்றன்னைத்
துய்யநங்கணத்தீரோடிக்கொணர்குதிரென்னச்சொன்னுன். [உஎ]

கிங்கரனொருவன்சென்றான்றென்றிசைக்கிழவன்முன்போ
யெங்கணுயகனுநந்திவிமானத்தினேறிச்செல்வா

ளங்கவனுனையேகொண்டுவருகெனவனைந்தானென்றான்
றுங்கமாமறலிகேட்டான்றுணுக்குற்றானெழுந்தானன்றே. [௨௮]

சித்திரகுத்தரோடுஞ்சிறந்திடுந்தூதரோடு
முத்தமந்திமுன்னரோடிவந்திறைஞ்சிக்காலன்
பத்தியால்வாய்புதைத்தஞ்சலியுடன்பகரானின்றா
னத்தனீபணித்தவேவலநேகமுஞ்செய்கின்றேனால். (௨௯]

இப்பொழுதடியனேன்செய்பணிவிடையின்னதென்றே
செப்புதியென்னலோடுஞ்சிலாதரன்புதல்வன்சொல்வான்
றப்பிலாவரசன்கற்பிற்றையலாருனதுகோப
வெப்பினால்வெதும்புகின்றார்விடுதியோநமனேயென்றான். [௩௦]

அன்னதுகேட்டகூற்றன்கோபமுற்றையனீதான்
சொன்னதுநன்றுமென்றாச்சரியமுற்றிடவேசொல்வா
னென்னையன்றானிவ்வாறின்றியம்பியதுசிதமாமோ
பன்னகாபரணர்ப்போற்றாப்பாவியர்க்கின்பமுண்டோ. [௩௧]

ஈசன்பூசனைசெய்வோனையான்பூசிப்பேனதில்லா
வாசவன்வானோரேனுமவர்களைமதித்திடேனே
தேசனாஞ்சிவனையாராதனைசெயாச்சிதடர்க்கெல்லா
நாசமேபுரியுங்காலாக்கினியன்றோநாயினேனே. [௩௨]

விளம்பிடுங்கருமந்திரவிசாரித்திங்கெனக்குச்சொல்வீர்
களங்கனிமிடற்றன்பூசைகருதார்கற்பாந்தரத்து
மளந்திடவரிதாமுத்தியடைகிலரவர்கட்கன்றோ
வளர்ந்ததீநரகமெல்லாம்வறுத்திடவைத்தவன்றே. [௩௩]

மன்னவனிவன்றனக்குவாய்த்திடுமடவாரீசன்
றன்னருச்சனைகள்செய்யார்சங்கரன்பூசைச்சைவர்
பொன்னடிபூசித்தில்லார்மெழுக்கிட்டாலயம்புதுக்கா
ரன்னவாம்பணிசெய்வோர்க்குமுபகரித்தறிந்திலாரே. [௩௪]

ஈசனாரன்பர்பாதரேணுவுமெய்தகில்லா
ராசைதானவற்றிலோர்க்குக்கனவினுஞ்சுகமுண்டாமோ
சாசினிதனிலேசென்மக்கடும்பாம்பின்விடமுற்றோர்க
டேசுறுசிவன்றன்பூசையமுதத்தாற்றீர்வரன்றே. [௩௫]

கொன்றைவேணியன்றன்பூசைகுறித்திடான்குலீனனாவ
னன்றியுமலங்கடின்னுஞாளியுமவனிமீதிற்
பன்றியுநாவிவாசமறியுமோபவஞ்செய்தோனை
யின்றுநான்விடுத்தேனாகிலிறைவநீபொறுப்பாய்போலும். [௩௬)

முன்னமேயெனையழைத்துமுதல்வனைப்பூசைசெய்வோன்
றன்னடிபணிதியல்லான்றனைநரகிடைத்தள்ளென்று

சொன்னதுகேயபன்றோபரமனுஞ்சொன்னான்றே
யென்னையாவீசனீறந்தவாணையேயிகழப்போமோ. (௩௭)

என்னவுரைத்தொடுக்கத்தோடும்வணக்கமுற்றியமன்சார்ந்த
சனமுடனறனைதுலோகஞ்சார்ந்தனனரசனோடு
மனகனுநந்திபுக்கான்கயிலையிலுதனுன்மைந்தர்
மனமகிழ்பாதராருக்குமாபதிபதியாமன்றே. [௩௮]

ஆங்கவன்பூசையாற்றினினைத்தவையடைவர்கண்டாய்
பூங்குழன்மாதர்க்குற்றபதிசிவபூசைசெய்யி
னோங்கிளமுலையாரன்றோனுமாபதியெனப்பூசிப்பா
ரீங்கதுபுரியின்மேலாமிறைவனுமகிழ்வன்றுனே. [௩௯]

பத்தினிப்பெண்டிர்கேள்வன்பரமன்றன்பத்தனன்றேன்
மத்தியபானியன்றோன்மறையவர்க்கோறல்செய்து
பித்தினிற்குரவனில்லாட்சேர்ந்தபேதையுமேயாவ
னத்தகைபோனைச்சேராதவள்கதியடைவளன்றே. (௪௰)

இற்பயில்கணவன்சைவனெனினிலவனேவல்செய்யாள்
கற்புடையவடாளேனுங்கடுநரகடைவளென்றே
யற்புறுதாதைசத்பமூர்த்திதானறையக்கேட்டே
பொற்புறுமதலைதந்தைசொற்படிபுரிந்துற்றுனல். [௪௧]

அன்னவன்மனைவிகற்பின்சாரதையமலன்பூசை
தன்னையும்வழுவாதாற்றித்தலைவனேசிவனென்றன்றுன்
சொன்னவைதவறகில்லாதொழுதனண்மருவத்தானு
மின்னனையாண்மேற்கோபம்புரிந்திடான்விழைவோடுற்றுன். ()

என்னவேவியமனோடுபிருகுமாமுனிவனென்போன்
பண்ணிபகாதைகேட்டுப்பரிவுடனிருந்துளேன்யான்
பொன்னெனுங்கற்பிற்பன்னிபுகன்றிட்டப்பூசியேயாகி
மன்னினேன்முன்னர்ச்சென்மவாசனைமறந்திலேனே. (௪௩)

என்றுசார்த்தூலகூறவிசைமுனியரசன்சைவ
னன்றுதான்வினவியேயற்புதமுடையவர்களானூர்
மன்றலாரரசன்றேவியாவுங்கேட்டனண்மகிழ்ந்தாள் [பாள்
கொன்றைவார்சடையோன்சைவக்கொழுநனெற்களித்தாளென்

ஆனதோர்செல்வமுற்றேறனென்றனளவர்கண்மேய
தானமத்தடைந்தேயீசன்பூசையின்றகைமைபேசி
ஞானமோடுற்றூர்நாரிசுகவாணியுனக்குநாஞ்சொ
லூனமில்கதைகேட்டோருயர்முத்திபெறுவரன்றே. (௪௫)

மாதர்கடமக்குமீசன்பூசைமாதன்மமென்றே
வோதியகணவன்சத்யவிரதன்சொலுண்மைகொண்டே

நாதனார்பூசைநாளுநாயகனோடுற்றாற்றி
யாதிதன்பத்தரானபுத்திரரநேகர்ப்பெற்ற[illegible]. (௪௬)

பெற்றசந்ததிகடாமுஞ்சைவராம்பிதாவைத்தாயை
யுற்றனமெனமகிழ்ச்சியுடையராயவர்க்டம்மைச்
சொற்றிடுதெய்வமென்னத்தொழுதிரேவாநதிக்கண்
பொற்றளிர்வில்வநீழலிலிங்கங்கள்பூசித்தாரால். (௪௭)

அணிந்தனர்கண்டிபூதிபுண்டரமஞ்செழுத்தின்
றுணிந்திடுசெபங்கள்செய்வார்சோதிசேர்லிங்கபூசை
தணிந்திடுமனத்தால்வில்வத்தளிரருச்சித்தார்சாருந்
திணிந்திடும்பத்திகண்டுசிவனுளமகிழ்ந்தானன்றே. (௪௮)

தூயவர்தம்மையீன்றசுகவாணிசைவவேடச்
சேயர்களளித்தமைந்தரவர்கடாஞ்சிறப்பிற்பெற்று
ராயகோட்பேரர்தம்மைச்சிவபத்திக்கேள்வன்றன்னோ
மேயுமாகியதியாவுங்கண்டுளமிகக்களித்தாள். (௪௯)

பாக்கியம்பெற்றேனென்றன்பகர்குலம்புனிதமென்றே
தேக்கியமகிழ்ச்சியோடுசிவபூசைசெய்திருந்தா
டேக்கியவிரதர்தங்கள்சுதர்வழிதழைத்தவெல்லா
நோக்கியமுனிவர்தேவர்நுவலருமகிழ்ச்சிபூத்தார். (௫௦)

அந்தநாடளிக்குஞ்செல்வமாரதனாகும்வேந்தன்
வந்துரேவாநதிக்கண்மன்னுமாச்சிரமந்தன்னிற்
பந்தமாபுத்ரரோடுபௌத்திரர்சைவாசாரச்
சந்ததிதழைத்தசத்யவிரதனைத்தான்கண்டானே. [௫௧]

வணங்கினான்புகர்வான்சத்யவரவிரதப்பேர்பெற்ற
குணங்கொளுமுனிவநின்றன்சிவபூசைக்கொள்கையாலே
யிணங்குசந்ததிகள்வாய்ந்தமுலையுணுமிளஞ்சேய்தானு
மணங்கொருபாகன்பூசையாற்றிடப்பெற்றதன்றே. (௫௨)

இச்சிறுகுழவியையவீசனார்பூசைமேன்மை
தைச்சுறக்கேட்டதுண்டோபடித்ததுதானுமுண்டோ
வைச்சுறுகொப்பூழுற்றகொடிவடுமாறிற்றன்றான்
மெச்சுமீதிறும்பூதன்றோவெண்ணீறுகண்டிபூண்ட. (௫௩)

புண்டரமிலங்குநெற்றிபுரிசடையுடனேயுற்ற
கண்டிலனிவைகள்யாவேகாதலேதுமக்குச்சொல்வீர்
கொண்டதோர்புதுமையீதுகூறிடக்கேட்டதின்றாற்
றொண்டர்நீரிளமையுற்றீர்சந்ததிதொலைவின்றாமால். (௫௪)

இத்தன்மையுறுதற்கென்னகாரணஞ்சிறார்களெல்லா
மெத்தவேயுாத்ததேகமேவினார்விமலன்பூசை
பத்திபாற்செய்கின்றாருன்றாச்சிரமத்திற்பானெய்
வைத்திடுதயிரன்றாதிகண்டிலேன்வரம்பெவ்வாறே. [ருரு]

எனவமாதவப்பேர்வேந்தன்கேட்டலுமியம்புகின்றான்
மன்னவாவெமக்கேயன்னபூரணிமகிழ்மனாளன்
அன்னருளதனாலன்னமலையுண்டுநெய்பால்தயிர்பாலின்
றுன்னியமலையுண்டுநெறியிற்செயவிமைமேபாருண்டால். (ருசா)

எங்கட்கும்மனையிற்காமதேனுவோடிந்த்ரதாரு
மங்களசிந்தாமணியுமேவுந்துமேவி
யிங்கிதந்தனைவுநல்குமீசனைப்பூசிப்போமச்
சங்கரனருளாற்கோடிசந்ததிதழைக்குமன்றே. (ருஎ)

கருமமதையாசரிக்கனையினிருந்துநாளுநாதனைப்பூசனைபுரிவோரால
ஞ்சேர்பாங்கள், பெருமையாலயன்பதமும்விரும்பகில்லோம்பேசுசமக
ந்தனிலேயுநனுகின்ற, பொருள்களியாவையுமீசனருளினாலேபொருந்து
மெமதில்லமெங்குநிறைந்துமேவுந, தருபவன்சங்கரனாகிலெமக்குவந்து
சார்ந்திடாப்பொருளுண்டோதாணிவேந்தே. [ருஅ]

ஏகனாஞ்சிவனைவிதபத்திலெத்துமெமக்குமேனாலகிலெய்தாப்பொ
ருளுமுண்டோ, பேரன்புடன்பூசனைபுரிவோர்சகலவாழ்வுமுற்றேபின்கயி
லையிற்போயுறுவாரன்றே, வாகைவேடனைவென்றோன்மேன்மைதேரா
மாட்டாதார்சனனமரணந்தனைச்சேர்ந்தே, தாகசோகத்தினொடுநரகிலா
ழவர்சந்ததியுமங்கவாய்ந்தழைந்திடாதே. (ருகூ)

ஈனருடன்ஞானிகளுஞ்சூகரத்தினிகழ்யோனியெய்தினோர்சிவனைய
ல்லா, ஊனமாந்தேவர்களைவணங்கல்செய்யாவொழிவிலாத்தருமங்களு
ஞற்றினோர்க்கே, ஞானநாயகனுஞ்சங்கரன்றன்பூசைகிடைத்திடுமெங்கத
ற்கிணையாகவில்வதுண்டோ, வானசிவன்போற்றெய்வமில்லையன்பரகங்
கோயிலாகவென்றுமமர்வன்றானே. [கூ0]

சங்கரன்றன்பத்தியுடையோர்கட்மைச்சாதிகுறித்திடுவதன்றால்
யாவரேனு, மங்களமாமன்பினுடனிவைக்கினன்னோர்மனக்கோயின்மகி
ழ்வனன்னவாறுபோலத், துங்கமாமேருகயிலாயமற்றைச்சொற்றிடுதற்றா
லங்களினும்விருப்பமில்லா, னங்கமுடனரன்பூசைபுரிவோர்தம்மையண்
டர்கள்பாவரும்பூசைபுரிகுவாரே. [கூக]

பரமனடியவர்கட்மதிதயமீசன்பத்திவித்துமுளைத்திடுகன்னிலமதா
கு, முரமுறுமப்பயிர்பலித்ததுண்டேலந்தவோங்குதுகரு மத்தினுக்கோர

றனேவலாளாகியிருந்தாலென்னிமலன்பூசை, பொச்சமறக்கிடைத்தா லேபோதுமிந்தப்பொழில்புரப்போனவன்மிகவும்புனிதன்றானே. [௬௯]

ஆங்கவனும்பூசிக்கத்தக்கோன்வில்வத்தருத்தருவெல்லாஞ்சிவன்ற னுருவமாகு, மீங்கிதுகாத்திடுவோனேசிவனைப்பூசையியற்றிடுவோனித ற்குவாய்க்காலுண்டாக்கி, போங்குவேவளர்க்கின்றான் விளைமூலத்தூறுந் தெண்ணீரோர்திவலைக்கநேகம்பாவ, நீங்கிடுமாலரனடியாாதமகருமே லோனிவற்பணியிற்கொடும்பாவநீறதாமே. [௭௦]

இந்தவனசாண்மகாமுனிவனுந்தமேதோவிவ்வுருவெடுத்தானையமில் லை, முந்துவில்வமோனவினைபேவளர்க்கப்பெற்றோனமுத்திசேர்ந்திடுவெ னியன்மனமதாக, வந்தமிலாக்கூவிளங்கடமைழக்கச்செய்தானுமிவன் பாக்கியத்திற்களவையுண்டோ, சிந்தைசெய்திங்கிவற்காணிறபாவநீங்கு ஞ்சிவனைசேவைபாமிவன்றன்சேவைதானே. [௭௧]

தினமுமிவன்பணியிடையேபுரிந்துவில்வதெரிசனத்திறுற்காலம் போக்கவேண்டு, மெனவியந்துசிவடுண்டிமுனிவனென்பானிதயத்தி னுறுதிகொண்டாங்கவனைக்கண்டான், மனமகிழ்ந்துசொல்கின்றான்வா ராய்வில்வவனபாலகாவுன்றன்மனைதானெங்கே, கனமுறுவெங்கரிமுதல மிருகமெயாக்கடிவனமிங்கிதிலிருப்பைகொல்லோ. [௭௨]

மனைக்கினைபுதுமைகொல்லோவென்றேதுண்டிமாமுனிசொற்றிட வணங்கிமகிழ்ந்துசொல்வா,னெனக்கையாவிற்றைவரையளவுமிந்தவெ ழில்வனத்தைப்புறத்தகன்றறிலாயுற்றேனும், மனக்கினிதாயுறப்பெரிதா ய்வளர்ந்தநன்மேபற்றிதனிற்கனிகளுண்டுமகிழ்வேனிங்கோ, ரனந்தமு ருவகைபானுவுதபந்தொட்டேயந்தமனவரையும்விடாதமர்வனன்றே.

இப்பாலென்பிறகுரம்பைக்கேகுவேனுலிந்தவனந்தன்னிலொன்று மெய்தாவண்ண, †மொப்பாரிபற்றவச்ரமுள்ளின் ‡வாரியுயர்த்தினேனு ழைவழியினுட்புகுந்தே, தப்பாமனீர்வார்ப்பேனிதனுள்யாருஞ்சார்வரி தாவிகலனுமேசார்ந்திடாதா, லப்பாகாணிதிப்பட்டவருத்தஞ்சொல்லவ ளமையுமோவெகுகாலமாயுற்றேனுல். [௭௪]

என்றனவ்வில்வவனபாலகன்றனிந்தனையுஞ்சிவடுண்டியென்போ ன்கேட்டே, நன்றயதென்றுவிசாரத்திடுநாமிதனுட்புகுவதெவ்வா றென்றிருந்தான், குன்றுவட்புனத்திருப்போன்குடிலிற்போனான்கொடு மாலையிருள்வந்துகூடிற்றன்றே, துன்றுழியெனவப்போதிர்த்தோர்வே ழந்தோன்றியதுகண்டனனோர்சூழல்சார்ந்தான். [௭௫]

அந்தமதகரிவந்துபிடித்துக்கையாலாகாசந்தனிற்றூக்கிக்குலுக்கி ற்றன்றே, சிந்தைகலங்கினன்றந்தித்துதிக்கைபுக்கசிவடுண்டிபுலம்புகின் றானென்னசெய்வேன், முந்துநானெண்ணியுற்றவெண்ணமண்முடி யாதுபோகியதாலிந்தோவந்தோ, விந்தமதகயம்விழுங்குங்கொல்லோவ ல்லாலெங்கேகொண்டேகுமோவறிகிலேனே. [௭௬]

† ஒப்பாரி-உவமை. ‡ வாரி-வேலி.

வில்வநீழலில்வீழ்ந்துவீந்தேதஞானன்மேலானபதம்பெறலாஞ்சிவ னிராவி, னல்லதளிர்கொண்டானையருச்சித்தேத்தநான்பெறுபேற்றில ன்வீண்சென்மமானே, னல்லல்பெறவினைவையெழுதும்விதியைத்தீயிலட் டிடவேவேண்டுமோபத்தைநீக்கித், தில்லைநகர்தனிலாடுமுக்கண்மூர்த்திசி வனேயென்றனைப்புரப்பாய்புரப்பாயென்பான். [௭]

கொன்றைவேணிபனெற்றிநெருப்புநாட்டக்கொழுஞ்சுடரேநீறணி மெய்க்குணத்தின்குன்றே, மன்றல்பெறுமம்பிகைசகாயனைவள்ளலே யுன்கருணைதெரிந்திலேனே, பொன்றுமுலகம்புரப்பாய்நீயேயன்றேயு னருட்குப்பாத்திரமாயெனையுங்காப்பா, யென்றுதுதித்தேயானைத்து திக்கையுற்றவிசைகொள்சிவடுண்டிமுறையிட்டானன்றே. (௭௮)

நாற்பத்தெட்டாவது வில்வவனச்சருக்க முற்றிற்று.

[illegible]

நாற்பத்தொன்பதாவது,

# புலோமைச்சருக்கம்.



நரையழகுபெறுஞ்செல்வத்தழகர்சைவாசாரத்தொழுகாகனிச்சார மாகு, முரையழகர்பத்தழகுபெற்றகல்விபுபகலியழகெனவுலகில்வா ழ்வார், விரையழகுபெறுங்கழுநீரழகர்செம்பொன்விரசிங்காதனத்தழகர் விளங்கும்வெண்பட், டரையழகர்கிண்கிணிக்காலழகராநாரத்தினாப்ப ழகர்பதஞ்சிந்திப்போமே. (௧)

அரதனைகரவேந்தன்புகல்வானிவ்வாறுபணைச்சந்தியவிரதமுந்துஞ் சைவ, வரதனுரைத்திடும்வார்த்தையெல்லாம்வேந்தன்மாரதன்றானு ணர்ந்துமிகவிரும்பூதெய்திச், சரதமாமிக்கதைபோற்கேட்டிலேன்யான் சாற்றுசிவடுண்டியெனுங்கருடசில, விரதன்பேற்செய்தவென்கொலென் னச்சொல்வான்வேழங்கையுற்றவனைவிசிற்றன்றே. (௨)

அவனெருவில்வத்தருவின்பனைபேவீழ்ந்தானதனையிருநைகக்கொ ண்டேயனைத்துக்கொண்டான், சிவனருளிதனைத்தெளிந்தேயுளம்பூரி த்தான்சிந்தூரத்தைப்பார்த்தினையசெய்புகின்ற, னுவமையிலாவுதவிசெ ய்தயூதனாதவுன்னருளாற்பூதசிவசிவியிற்பூசை, தவமிலாவகையியற்றப் பெற்றேனீசெய்சகாயமேமேலானசகாயமென்பான். (௩)

இந்தமதயானையெனைமிதிக்கவில்லையெற்றவிலைவேபிடத்தினொறிய வில்லை, யுந்திபிந்தவில்வவனமேவினுப்ப்கவுயர்ந்துளேன்மனநினைவின்படி யுற்றேனென், றந்தவில்வத்தருவினைவிட்டிழிந்தான்மிக்கவக்கானத்தி டைநடந்தானங்கேகங்கை, வந்திழிவாய்க்காலருகேயிலிங்கமூர்த்திவை குதலுந்தான்கண்டான்மகிழ்கொண்டானே. (௪)

பயங்கரமாம்பாவவினைபோக்குங்கங்கைப்பாய்புனல்வாய்க்காலதனின்மூழ்கிப்பூதி, நயந்தனனேக்காவருகிற்கண்டானன்றேநல்லவனத்தினினீற்றின்றுவியறன்னே, வியந்தனன்வாரின்னுடலுத்தூளனங்கண்மிக்கதிரிபுண்டரமும்புனைந்துகொண்டா, னுயர்ந்தவில்வத்தளிர்கொய்தானிலிங்கபூசையுவகையுடனுஞற்றினனுற்றுளானே. (௫)

பூதசிவசிப்பூசைநாலுயாமம்புரிந்துபரிந்தேகாலம்போக்கினனே, வீதினின்மெலன்குலமும்யானுமுய்ந்தேனினிக்கற்பகாலத்தும் பயமொன்றில்லே, நதியருச்சனையாருமங்கிதன்னுளிருப்பாவ வனம்பொடியாய்ப்போயிற்றன்றோ, நீநின்றதுறுலகபெங்குற்மெவன்றேன்செய்தருமயிதனைப்போலில்லையென்றான். (௬)

ஆயினும்மாபயருளதால்வில்வமோங்கியழகுபெறுமிவ்வனத்தின்காவலோன்றான், போயினன்றுவமினையென்சொல்வானேவெனப்புகன்றான்புனிதமுனாற்போயிற்றன்றோ, பெயினன்குடிசைதனைவிடுத்தேயன்மேனன்வெனாதலின்வில்வமூலங்கட்கெல்லாந், தூயநீர்நிறைக்கவனந்துற்றான்வில்வத்துளிர்சாத்துமிலிங்கத்தின்சிறப்பைக்கண்டான். (எ)

உற்றசிவலிண்டியையுங்கண்டான்மெத்தவுளமகிழ்ந்தானுனைக்கின்றனிந்தவேலி, செற்றுகின்றவனத்திலெந்தவழிபாய்வந்தோ ரிருந்தனனைடைத்ததுவந்திருந்ததில்லை. மற்றுமோர்மனிதரில்லோ னிதரோடுவனமிருகம்யானேபசுவருவதில்லைக், கற்றவர்நீர்கங்கைநீர்பொழியும்வாய்க்காற்கரையில்வந்தநதியாரோவெனக்கரைந்தான். (அ)

போற்றுமிந்தவிலிங்கத்தையொருவராலும்பூசித்தவல்லவிப்போதருச்சித்தார்யார், காற்றிலுதிர்பழுத்தவில்வத்துடனேபூதிகலந்தணிந்துவிளங்குவவாலிந்நீறு, சாற்றிலுயர்வனத்திலுற்றசாம்பர்வில்வந்தனக்கெருவாக்கொடுவெந்துநான்குவித்தேனேற்றவினையாலுமெடுத்தணிந்தேசுத்தமெனவிருப்பேனிதிலென்னைக்குறிப்பபாரீர். (௯)

சுந்திருவர்தேவர்சித்தாலலாவிந்தக்கானகத்திலொருவர்களுங்கலந்திடாரால், வந்தநீர்யாருமதுவரலாமோதுவழங்குமெனச்சிவபண்டிவகுப்பான்முன்னு, ளந்தபதயானைவந்தவாறுந்தன்னையாங்குநின்றேயெதெரிந்தவாறுமீசன், சிந்தைமகிழ்சிவசிப்பூசைசெய்யச்சிந்தித்தவாறுனன்றுதெரித்தானன்றே. (௧௦)

ஆங்கவன்சொல்லினவில்வவனபாலன்றனகமகிழ்ந்துமுனிவனைப்பார்த்தறைவான்வில்வத், தோங்குமகிமையுமதனைவளர்க்குஞ்சீருமுற்றசிவலிங்கத்தின்பெருமைதானும்,பாங்குடன்வில்வத்தளிராலதனைப்பூசைபரிந்துபுரிந்துறும்பேறும்பகர்வீரென்று,னேங்குபயந்தீர்ந்துசிவண்டியென்போனிசைத்தனயானையுமகிழ்ந்தேயியம்புவானல். (௧௧)

மிக்கவில்வவனபாலகேளாயிக்தமேதகையவிலிங்கமெல்லாஞ்சிவசொரூபம், புக்கவிவற்றினைவில்வத்தளிர்கள்கொண்டேபூசிக்கிலிட்டசித்திபொருந்துவாராற், றக்கவிதற்கிணையானதருமமில்லைத் தவந்தருமமொருகோடிதான்செய்தோர்க்கே, பெக்கலியுந்தீர்த்தெமையாளிறைவன்பத்தியையுந்திலிங்கார்ச்சனைப்பேறுமெய்துந்தானே. (கஉ)

விமலைபங்கர்க்கிலிங்கவருச்சனையிலுற்றவிருப்பம்போலொன்றினுமேவிருப்பமில்லை, யமலமாமிலிங்கவர்ச்சனையேசெய்யவமரரெல்லாம்வேண்டுவர்கூவிளத்தினுலே, பெமையாளுமிலிங்கேசன்பூசையாற்றிலிகபரம்பெற்றியமனையும்வெல்லலாமே, தமையுணர்வார்பூதிகண்டியணிந்தேயிசார்ச்சனைசெயிற்சித்திக்குமுத்திசத்யமாமே. (கங)

சிந்தைசெய்திப்படிபூசைபுரிவோன்றன்னைத்தெரிசிப்போன்பவங்களெல்லாந்தீருமன்றே, வந்தபயன்றாதரிசெய்வினுமாரான்மற்றவனைத்தேவரெலாம்வணங்கல்செய்வார், நிதலிங்கார்ச்சனையின்மேன்மைதன்னையிமையவர்யாவரும்புகலமாட்டாரன்றே, முந்துசதுர்வேதமுமங்கீசர்தாளைமுறையிடுவேதன்றியமொழியப்பாற்றே. (கச)

உடலதனிலுயிருள்ளகாலமெல்லாமுமைபாகனர்ச்சனையேசெய்யவேண்டு, முடியாவேலுடலம்விடுமளவிலெனுமுற்றியிடிற்கயிலைசெல்வானுதயகாலம், விடையவனைச்சேவிக்கிலன்றைப்பாவமவீடுமுர்ச்சிதரிசிக்கிலந்தச்சென்மத், திடர்தருபாவஞ்சிதையுமந்திப்போதெழுபிறப்பிலுள்ளபவமுழுதுந்தீரும். (கரு)

இலிங்கதரிசனத்தினிகபரத்தின்மேன்மையெய்துதல்போலொருதருமத்தெய்திடாதாற், றலங்கூறிவற்றினிற்பாவமெல்லாம்போக்குந்தூயகதையொன்றுளதாற்சொல்வோங்கேட்டி, நலங்குலவும்விந்தவரைச்சாரற்றன்னினரபதிதானொருவனுளனழகின்மிக்கா, னிலங்கடமிலில்லாதசெல்வம்பெற்றானீதியற்றானவன்றனோர்மகடான்பெற்றான். (கசா)

அன்னவள்பேரவாவன்னியழகின்மிக்காளவளிளமையுற்றிரண்வெரைகடாங்கு, மின்னெனவேவிளங்குகின்றளரம்பைதானுமெல்லியலுக்குவமையன்றுலன்றடன்னை, மன்னவனுந்தந்தைகண்டான்மோகங்கொண்டான்மனமருண்டான்ரழிவாயூறலுண்டான், புன்னெறியாலரசியலைநீக்கிமாதின்புணர்ச்சியிலேற்காலந்தான்போக்கினனே. (கஎ)

எழுநிலைமாடத்திலுற்றான்மகடன்றேடுமின்புறுவானந்தவிந்தச்சிகரமீதிற், றொழுதகுகந்தருவராற்பூசைகொண்டசுந்தரமாமிலிங்கத்தைக்கண்டான்விண்டான், பழுதறுசித்திரமனையாயுனதுமார்பிற்பணைமுலைக்கொப்பாமிதனைப்பார்ப்பாயென்றே, தழுவுமவடனத்தைநிகராமென்றன்பாற்சந்தனம்பூமாலைகளுஞ்சாத்தச்சொன்னான். (கஅ)

அந்தவிலிங்கந்தனக்கேயாசன்பின்னுமவடனக்குப்பிரியமுறும்படியேயாக, விந்தையாவலங்காரம்பலவுமாற்றிவிநோதமுடன்மேவுநாள்வி

தியினாலே, சுந்தரியங்கவளிறந்தாள்பாவஞ்செய்தோன்றுணையுடனே
மடிந்தானவர்க்கொண்டேக, வந்தனராற்காலபடர்கயிலையுற்றவள்ளலா
ர்கணங்களுமேவந்துற்றாரால். (௧௯)

அடுத்தயமதூதர்தமைப்பிடித்துத்தள்ளியடித்துரப்பித்துரத்தி
னாரவர்கள்போனார், கொடுத்தனரங்கவர்க்குத்தேவுருவஞ்சோதிக்குளிர்
மானமேற்றினார்கொண்டுபோனார், கடுத்தவர்செல்லும்போதின்மறலிக
ண்டான்கணக்கராஞ்சித்திரகுத்தனையேநோக்கி, யெடுத்தவிமானத்தி
னிற்செல்பாக்யம்பெற்றானிபாவனெனத்தேர்கிலேனியம்பீரென்றான்

ஐயவிவன்புரிந்தபாவந்தனக்கேயளவில்லை யானாலுமிலிங்கநாதன்
செய்யதெரிசனத்தினாற்புனிதனாகித் திருக்கயிலாயச்சிலம்பிற்செல்கின்
றானாற், றுய்யசிவலிங்கதரிசனத்தின்மேன்மைசுரர்முனிவர்தங்களாலி
யற்றலாமோ, வையனுமைசங்கரன்கணேசன்செவ்வேள்சதுர்வேதந்தா
மும்மறிந்துரைக்கலாமோ. (௨௧)

மரணமுறுமளவுமிவன்மகடன்னைமருவுகொடும்பாவியிந்தவரை
யின்மீது, கிரணமுறுமிலிங்கத்தைக்கண்டேயந்தக்கிளிமொழிகொங்கை
க்கிணையாயிருந்ததென்றே, யரணமுறுமதிற்சந்தமபூவின்மாலையலங்கா
ரம்புரிந்துகண்டுமகிழ்ந்துற்றானாற், காரணமுடன்செய்திலனேயெனினு
ம்பாவக்கடுந்துயர்போய்க்கயிலைநெறிச்செல்கின்றானே. (௨௨)

என்னவேசித்ரகுத்தர்சொன்னவார்த்தையியமன்கேட்டாச்சரியமு
டையோனாகி, யன்னவனைத்தூரத்தேதொழுதுபூசித்தானதன்பினழி
தொழிலோனாகியுற்ற, மன்னவனையிந்திரன்றனுலகிலுய்க்கவந்தவனிந்த
ராணிவானவர்களோடும், பொன்னடிகள்பூசைபுரிந்தேத்தப்பெற்றேபூங்
கமலாசனக்கடவுளுலகம்புக்கான். (௨௩)

வாணியுடனயன்முனிவர்தங்களோடும்வந்தெதிர்கண்டேபூசைசெ
ய்யப்பெற்றே, காணிபாலிகநிமாலோர்மார்பின்சேர்ந்தகடியுலகிற்புகக்க
ண்டான்கருடனோடுஞ், சேணிலவெதிர்கொடருச்சனைகளன்பாற்செ
ய்யவேபெற்றரன்வாழ்கயிலைசேர்ந்தே, யாணியாங்கணங்களொடுஞ்சிவ
னைநாளுமடிபணிந்துவீற்றிருந்தானரசன்றானே. (௨௪)

ஆனதால்வில்வவனபாலகேளாயருளிலிங்கதரிசனத்தினதிசயம்போ
ன், மானலஞ்சேர்தருமங்களொன்றுமில்லைமற்றதுவேசகலமங்களங்கண
ல்குந், தேனலர்கூவிளத்தினிளந்தளிர்கடாங்குஞ்சிரவிலிங்கமாமிதனைத்
தெரிசித்தோர்க்கு, மீனமிலாக்கல்யாணசுகங்களெய்துமிதனிலொருசந்
தேகமில்லையன்றே. (௨௫)

பெருகுவில்வமூலவிலிங்கத்திலீசன்பிரசன்னராகியுற்றேயன்பர்சா
த்துஞ், சருகுவில்வத்தளிர்களங்கீகரித்தல்போலச்சாற்றரியவாதனமுந்
தான்கொள்ளாராற், பொருவருமுத்தியுமதனாலளிப்பான்றேபுழுக்கடி

யாயினுஞ்சாத்தும்புண்ணியத்திற், கொருபெரும்புண்ணியமுங்கமொரவ்வாசெய்யும்பர்பாவவனக்கனலமிதுவாமன்றே. [உசு]

தீவினைவெற்பினையிடறுமிடியுமாகுந்தேவரெல்லாங்கூவிளச்செங்தளிர்கள்கொண்டே, யாவனிறைற்பூசைசெய்தாக்கம்பெற்றாருமறையுமிதற்கிணையாந்தருமமொன்று, மேவுகின்றதிலையென்றுவிளம்புமன்றே வில்வவனந்தனக்குவரம்பமைத்துத்தெண்ணீரோவிலாவகைசெறித்துவளர்த்தவில்வத்தொளிர்தளிர்கொண்டருச்சிப்போன்பானுவங்கீதான்.

வில்வமொன்றாயினும்வைத்துவளர்த்தோன்றனைமிக்ககயிலையிற்புத்ரபவுத்ரரோடுஞ், செல்லவல்லனெனவனமாவளர்த்துவோன்பாற்சிவன்பிரியமாவதுசெப்பிடவேண்டாவே, நல்லவிவைதப்பிமெருகாதையுண்டானுமபுகல்வோங்கேட்டவர்தம்பாவம்போக்குஞ், சொல்லரியவைபீட்டங்கள்பெறலாங்கண்டாய்தொன்றுவிளருமதாதிரத்தன்னில். [ ]

கோமனைபோர்வனசரப்பெண்டிர்க்கைதயாறுள்குடிசைதனக்கருகோர்கூவிளத்தின்வித்தை, யாமுறைபாற்பதித்ததறதும்பாத்திகட்டியந்திசந்திரீர்வார்த்துவேலிகோலிச், செமமுடன்காத்தளித்தான்வளர்ந்துசாகைசேர்ந்துபந்தநிழல் பச்செறித்ததன்பீற, காமமுறுமவளதற்கிழ்ச்சயனத்தானங்கற்றித்தான்காற்றிலவுசாயாவண்ணம். [உகூ]

அழகுபெறுமவானவின் வில்காணத்தற்கேபைசயாமற்கொறகொம்பாவணைத்துநட்டான், பழகுபெருமதுபனைத்துவேயாகமொட்டிவனைத்ததனற்பெலத்ததருமனைதபாலிங்கர், பழுந்றுமக்கிவக்குதியோர்கும்பம்போலப்பருத்துளபொக்காமதனிற்பருகுகள்ளீர, கழுவியபெகிபப்பிடுவனுள்கடொறுங்கடித்தாகந்தனக்கருந்துக்களிப்பாளன்றே. (௩௦)

அந்தவில்வந்தனிற்படுந்தவிலைகளெல்லாமவ்விலிங்கத்தருச்சனைபோலழகாவிழுஞ், சந்ததமிப்படியுற்றதாமலபூசைதான்பெற்றதாய்முடிந்ததுதனுக்கன்றே, பைக்கொடியங்களவிரவிற்போகத்துற்றபல்பொருளுக்கெரியவிளக்கேற்றிவைப்பாள், மைந்தருடன்கலந்துவிளையாடிக்கானவரிசைகளும்பாடிக்கூத்தாடுவாளால். [௩௧]

இப்படிகாலம்போக்கிமரிக்குங்காலமெய்திறுணமன்றூதர்பாசங்கொண்டே, மைப்படிகண்ணுடனையேபற்றவுற்றார்மறலியவர்தமைத்தடுத்தேமாற்றஞ்சொல்வான், முப்படியும்படிபுண்யமூர்த்தியாமிம்மொய்குழலையமபடாமூடரேநீ, கைப்பிடிக்கவுரியரல்லர்கண்டீர்யாருங்கண்கொடுபார்த்திடக்கூடாதகனுவீரே. [௩௨]

எனச்சமன்சொற்றனனிற்கும்போதிலீசற்கினியவன்பண்புலோமனெனுமிசைகொள்வேந்தன், வனத்தினில்வேட்டைகளாடியுடலமெல்லாம்வார்த்தொழுகும்வேர்வையொடுமங்கேவந்தான், றனத்தின்மிகுதருமவந்தவரசனுங்கட்டருமனையுந்தூதரையுஞ்சாமாறுற்ற, வனத்தினை

யுங்கண்டுமகிழ்மன்னனை நோக்கியடைந்த தெவன்போவதெவனென்றுகேட்டான். [௯௪]

மழுவன்புகல்வானற்றருமவுருவாகுமிந்நங்கைதனைக்காணவந்தோமிவடன்முன்வந், தமர்ந்ததனாற்புனிதர்களாய்விட்டோமென்றேயறைந்தனன்கேட்டரசனதிசயித்தான்சொல்வான், சமைந்தவுடனிவள்வேசியாகித் தூர்த்தர்தங்களுடன்சஞ்சரித்தாள்கோடிபாவஞ், சுமந்தவிவடனைப்பார்ப்பதென்னேயென்றுசொற்றபுவியரசனைப்பார்த்தியமன்சொல்வான்

கூறரியபுனிதையிவடன்மைசித்ரகுத்தரதிருவரினையள்வாசத்தாலே, வேறுபுண்யநதிகளுக்குமேலதானவிந்தரேவாநதியும்விளங்கிற்றன்றே, தேறுமிவள்சிவதருமமிவளவென்றுசெப்பவொண்ணாதரனற்றனருச்சனையேசெய்வாள், வீறுதருமத்திறனைமைத்தபூசைவிம்பகும்பவிலிங்கத்தின்மேன்மைபாராய். [௯௫]

சுடரின்மாலைகள்வைத்தசிறப்பைப்பாராய்சொல்லரியகூவிளத்தின்மூலந்தன்னி, லடரவேமெழுகியலங்கரித்தல்பாராயரியவில்வப்பழுப்பிலருச்சனைகள்பாராய், படருங்கூவிளந்தளிர்கள்பரப்புகின்றபார்ரதனிலுடல்கிடக்கவுயிர்தான்வீந்தா, ரிடர்கடோய்நரும்பிறவிக்கடலைநீங்கியிமயவர்கடுஞ்சொவரிபவின்பஞ்சேர்வார். [௯௬]

நையலாளிவள்வைத்துவளர்த்தவிந்தச்சாற்றரியகூவிளத்தின்றளிராகணடாயே, துய்யவிந்தவில்வக்கால்படர்ந்ததாலே துன்னுதருமதைபுனிதந்துலங்கிற்றன்றே, யையமிலிப்புண்ணியத்தின்பொருள்களெல்லாமார்பெற்றாரிவடருமததுருவமாமே, செய்யவிலவணரகுருண்மனிதர்சென்மஞ்சேர்ந்துசிவலிங்கபூசனைசெய்வாளால். [௯௭]

மாதிவடான்சிவதருமவாஞ்சைப்போகமன்னியேமன்னவன்றன்மகளாகின்று, மதிலிவளழகுகண்டுதேவாவேந்தன்செய்யமறைமாணியாமுருவமெய்திக், காதலினான்மணம்புணர்வனவன்றனக்கேகன்னியைக்கைக்கொடுத்தியென்றுகாலனபோனு, னோதுமவனுரைகேட்டபுலோமவேந்தனுளத்திலதிசயங்கொடுதன்மனையுற்றானே. [௯௮]

உற்றதன்பினவன்மனைவிகருப்பமுற்றாளுதரத்திலுறும்பாவைசிவத்தியானம். பெற்றனளீரைந்துதிங்கள்பெயர்ந்தபின்னர்ப்பெய்வளைமுன்னையின்ஞானத்துடன்பிறந்தாண். முற்றுசிவபுண்ணியத்தாலரன்றன்பூசைமுயல்கருத்தினுடன்கொப்பூட்கொடிகொய்யாமு, னற்றவத்தாலீன்றவளைநோக்கியாங்குநண்ணுகின்றாரதிசயிப்பநங்கைசொல்வாள். ()

அன்னையேதருமதையின்கரைக்கேவில்வத்தருந்தருவொன்றுளதாலாங்கதன்மூலத்தி, லென்னையேயாண்டருளுமமுதலிங்கமிருந்ததநிற்பிணிதீர்க்குமமுதமேய்ந்த, தன்னிகரிலதனையண்ணச்சிவிகையேறி

ச்சார்குவேன் மேண்ணணீறுசாத்தாயென்று, ளென்னையேயிவையிறும்பூ தென்றுவேந்தற்கிசைத்தனராங்கவனமன்சொலிதயங்கொண்டான். ()

மன்னவனுமவைசெய்வோமென்னவுன்னிமலர்பயிலும்பரியங்கத் தொட்டிலேற்றிப், பொன்னனையாடனைரேவாநதியின்கூலப்புனிமூற் கூவிளத்தருகேகொண்டுபோனு, னன்னமன்னுடுசத்தேகண்டுதான்மு ன்னமைத்தவில்வமிழலிலிங்கவமுதந்தன்னைச், சென்னிதாழ்ந்துறவண ங்கித்தழுவிக்கொண்டாள்சென்றுநிந்தீர்த்தமுவந்தாடினளே. (௪௧)

திருநீறுத்தூளனங்கள்செய்துகொண்டாடிரிபுண்டரத்தினொடுகண் டிபூண்டாள், கருநீறுசெயுமிலிங்கநாதன்றன்னைக்கையிலமைந்திடும்வில் வத்தளிர்கள்கொண்டவ், ளிருநீடுகுழந்தையுருவானமின்னுக்கொடிபோ ல்வாளுற்றருச்சித்துவகைபூத்தா, டருநீடுகோடையாசன்முதலினோர்க டாங்கண்டார்மனத்திலதிசயந்தான்கொண்டார். (௪௨)

தந்தைபுலோமனைபபுலோமசைதானோக்கிச்சாற்றுவாள்கன்னபூ டணமாம்வார்த்தை, யெந்தையேயினைபகுபபவமுதலிங்கர்க்கிசைந்தம ணிவிமானமண்டபப்ரகார, முநதுகோபுரமுடனுலபமுநன்றுமுடித்தி வணிறபட்டினமுண்டாக்கவேண்டும், வந்தவிவர்தமமைமூவிருகாலத்து மன்னியிங்கேயிருந்துபூசிக்கவேண்டும். (௪௩)

இத்தலமவிட்டெத்தலமுஞ்செல்வேனலவேனிந்தவிலிங்கேசனைப பார்த்திருக்கவேண்டு, மத்தனிவன்றனைப்பூசைபுரிவேன்றன்னையண்டர் தயக்கதிபதியாகண்டலன்றன், மெத்தமயலாகமணமபுணரவிங்குமேவி டுவனிவையெல்லாம்வேந்தர்வேந்தே, புத்தமுதாமிவ்விலிங்கமூர்த்தித ன்னைப்பூசனைசெய்பலத்தில்வருமெனக்கேகண்டாய். (௪௪)

நருமதைமாவிலிங்கத்திற்பூசைதானெநாளுநாடினைத்தபடிநல்கிப் பின்னர்ப், பெருமைபெறுமுத்தியுந்தந்திடுமேபென்றுபெண்கொடிதா ன்பெசுதலுமன்னன்கேட்டே, யொருமைபெறுமனத்தோடுமுவகையு ற்றுறுணமைமகள்சொன்முறைபாலயமுண்டாக்கித், திருமிகுபட்டின முமமைத்தரன்பூசைக்கேசெய்பொருள்யாவையுமமைத்துச் சிறப்பித் தானே. (௪௫)

தந்தைதந்தபொருள்யாவுங்கொண்டுபூசைசங்கரனுர்பிரியமுறத் தான்செய்தாளான், மூந்துமிளம்பேதையொடுபெதும்பைநீங்கிமொய்கு ழலாண்மங்கையாம்பருவஞ்சேர்ந்தாள், வந்தனன்வானவர்வேந்தன்குர வனோடுமன்னவன்கண்டெதிர்வணங்கிமகிழ்ச்சிகூர்ந்தா, னிந்திரன்று னந்தவில்வநீழன்மேவுமிறைவர்கும்பவிலிங்கபூசனைசெய்தானே. (௪௬)

புலியரசன்விண்ணரசன்றனக்குச்சொல்வான்பூங்குழறன்மகளை ண்ணமுடிப்பானெண்ணித், தவமுறுமென்மனையினீர்வந்தவாற்றுற்சாற் றரியதரும்மயான்செய்துளேனு, னவநிதியும்பெறுசெல்வமுறுநுமக்கே

னானுதவும்பொருளுளவோநவில்வீரென்றே, யவனுரைப்பவிந்திரன்று
ன்வில்வமூலத்தருளிலிங்கதரிசனமார்க்கெய்துமென்பான். (௪௭)

இந்தவிலிங்கேசனார்மகிமையெல்லாமியம்பெனக்குரைத்துளமுனிவ
ரைக்காணில், அந்திடும்வெவ்வினைநீங்கினைத்தவெல்லாம்வாய்க்குமெ
ன்றான்குரவனுண்டாளப்பாவெனன்போன், முந்துமுன்றன்புதல்விமணம்
புணரவானோர்முதல்வனிவண்வந்தனனென்றுரைத்தலோடுந், சிந்தை
மகிழ்ந்துதவுவலென்றுளம்பூரித்தான்றிருக்கலியாணச்சிறப்புச்செய்தா
ன்வேந்தன். (௪௮)

புரந்தரனார்தமக்குறுகல்யாணமென்றேடுகண்முரசமறைந்துபுரப்பது
க்கினான், வரந்தருசங்கரன்பூசைபுரியுஞ்சைவமகள்புலோமசையைம
ணக்கோலஞ்செய்தான், திரந்தருநன்முகூர்த்தமதின்மனையுந்தானுஞ்
சேர்ந்துமணச்சடங்கியற்றித்தேவர்வேந்தன், காந்தனிற்கன்னிகைதா
னமீந்துமேலாங்கடவுளடியார்க்கன்னதானமுஞ்செய்தானே. (௪௯)

இன்னவண்ணமென்றுரைத்தற்கரிதாயவினியகலியாணவிழாச்சி
றப்பியற்றி, மன்னவனும்புலோமன்றன்மருகனைவலாரியொடுமகள்பு
லோமசைக்குமேதன், முன்னிருத்திவரிசையாபுரியவில்வமூலவிலிங்
கேசரையேபரிவினோடுஞ், சொன்னவில்வத்தருச்சித்தேவலாரிதானுஞ்
சோதிவிமானத்தேறிச்சுவர்க்கம்புக்கான். (௫௦)

நாடோறுமேவந்திறைஞ்சிப்புலோமையம்பொனுடனிற்செல்
வாளந்தவிலிங்கநாதன், றாடொழுவோர்க்கழியாதஞானச்செல்வந்தந்த
ருள்வனென்றுவிடுண்டியென்போன், பீடுகெழுவில்வவனபாலனோடுமே
பேசினனவன்கேட்டானிறும்பூதுற்றான், றேடுறுமெய்த்தவமுனிவன்று
ளில்வீழ்ந்தேதெசெப்புகென்றானிக்கதைகேட்டுய்ந்தேனென்றான். (௫௧)

இனியடியேன்செய்பணியென்சொல்வீரென்னவிசைக்கின்றானி
ருடியிந்தவில்வக்கானைப், புனிதமுறவேவளர்த்துத்தழைக்கச்செய்தா
ய்புண்ணியனுன்போலொருவர்புகலவுண்டோ, தனிமுதல்வனருள்பெ
றுஞீவன்முத்தன்சாற்றிடக்கேளிந்தவனந்தன்னில்பாரு, முனிவர்குழா
ம்வந்திலிங்கபூசையாற்றமுறைவாயில்பெரிதாகமுடித்தியன்றே. [௫௨]

சகலசிவபத்தர்களுமிங்கேவந்துதண்புனற்கங்கையின்வாய்க்கா
ன்னின்மூழ்கி, யகலமாமதன்கரையிலிங்கந்தன்னையரிதினிலீவைத்தவி
ல்வத்தளிர்கள்கொண்டே, மிகமகிழ்ந்தர்ச்சனைசெய்யப்பணித்திப்பூசை
மேவாதலிங்கதரிசனந்தானுகா, திகழ்தருபூசனைகொளிலிங்கேசற்காணி
ற்செல்வமிகுசந்ததிவர்த்தனையாமன்றே. [௫௩]

அருச்சனைசெய்வோர்தமக்கேயுபகாரங்களமைத்திடிற்சங்கரன்பி
ரியனுவனன்றே, தெரிந்திடுமெங்கவர்தமக்கேயுபகாரங்கள்செய்பினுருத்
திரன்மிகவுந்தினமெமெய்பவான், பரிந்திடுமங்கவன்சற்றேறகோபஞ்செய்

யிற்பகிரண்டகோடிபொடிபடுங்கண்டாயே, விரிச்சிடுநான்மறைப்பொ
ருளாற்கவைவாராமல்விருப்பமுறநடந்திடவேவேண்டுந்தானே. [௫௪]

பரமனைப்பூசனைபுரிவோர்க்குபகாரங்கள்பண்ணுதாராரவருடான்
பெறுவதின்று, னரகினில்யாதனையிந்துசுடரோனுள்ளனாளெல்லாம்படு
வர்மிகுநன்மையாளர், வரதன்மகிழ்ந்திடநாலுவுபசாரத்தால்வந்தித்
தேயடியரையும் வணக்கஞ்செய்வார், சரதமாமிஃதுண்மைகொள்வா
யென்றுசாற்றினன்சிவஞண்டிமுனிவன்றனே. [௫௫]

உரைத்திடுஞ்சொல்வினவிவனபாலகன்றனுவந்தவூர்க்குக்கூவிளத்தி
ன்கனியேயாதி,நிரைத்தவுபகாரங்கள்பலவுஞ்செய்யநிகரிலாச்சிவஞணடி
யவைகைக்கொண்டே, நிரைத்தருகங்கையின்வாய்க்காறன்னின்மூழ்கி
த்திகழ்பூதியணிந்துவில்வத்தளிர்கொண்டககாற், கரைத்திகழ்நலலிலிங்
கவருச்சனைசெய்துற்றகனிகிவேதனஞ்செய்துணடுகளித்துற்றனை. ()

வனபாலனசிவடுணடிமொழிந்தவாறேமன்னுமந்தக்காவிலுக்குவா
ய்தறன்னைக், கனமாகவேவருந்தான்யாருமவந்துகங்கைநதிபுனல்வரு
ம்வாய்க்காலின்மூழ்கிப, புனைநீறுவிளங்கவிலவத்தளிர்கள்கொய்துபுனி
தலிங்கபூசைசெய்தாரவில்வநீழ, றனின்மேவிச்சிவஞண்டிதன்னைக்கண்
டார்சாருமவன்புரிந்தசெயல்யாவுங்கேட்டார். [௫௭]

தந்திபெடுத்தெறிந்தவவன்சேகஞ்சமற்றுந்தழுபபுபட்டதிருந்தவொ
ளிதனையுமபார்த்தார, சிந்தைமகிழ்ந்திருந்தனராலென்றுசைவசிவன்ச
த்யவிரதன்மகாரதனென்றேதுஞ், சுந்தரவேந்தனுக்குரைத்தானவன்
றன்சொல்வான் றூயமுனிவன்றனைபேபெடுத்தெறிந்த,வந்தமதயானை
யெங்கேபோய்தன்னதடைந்தக்கதியென்னையஃதறைதியன்றே. [௫௮]

சீலமுனிசிவஞணடிவனபாலன்றன்செல்கதிபெற்றவையுமின்னே
செப்பாயென்று, ஞாலமளித்திடுமெகாதன்றன்கேட்பஞானிசத்யவிரத
ன்றனவில்கின்றனு. லேனுறுமிக்கதைகேட்கிலிறுமபூதுண்டாமெய்
துறும்பாவங்களெலலாநாசமாகுஞ், சாலவேசிவபத்திதழைக்குமந்தத்
தந்திதுட்டமிருகவனஞ்சார்ந்ததாலோ. [௫௯]

பூதசிவஞ்சியிலந்தமதயானைக்கேபுசிப்பொன்றுங்கிட்டிலதாற்பசியினு
லே, வேதனையுற்றதுதிரிந்துமற்றைநாளோர்வெங்கானிற்செலுமதனையி
மயச்சாரற், போதுறுமோரமடங்கல்கண்டுதொடர்ந்தேதின்னப்புகும்
போதிலயனின்றவரிதான்கண்டே, யோதுமிந்தயானையைநீபாய்ந்துகொ
ல்லவுற்றிடேலிதுபுண்ணியவுருவாமென்னும். [௬௦]

அண்ணலாரருள்பெற்றதிதுதானென்னலாதியார்பூதசிவஞ்சிதான
ன்றே,இண்ணமாமிஃதொன்றுமருந்தவில்லைச்சிவனுக்குப்பிரியமஃதொ
ன்றுதானே,வெண்ணமாமொருபரமனடியார்தம்மையெடுத்துவில்வவன
த்தெறிந்தவதனாலன்றோ, கண்ணுதலார்தமைவில்வத்தளங்கள்கொண்
டேகந்த்திலருத்தியுடன்பூசித்தாரால். [௬௧]

ஓதுமதனுலிந்தவும்பலீசனுண்மையடியார்க்குதவிசெய்ததன்றேயாதலினுலிதன்றனுயிர்செகுத்தியாயினரியகொடும் பாவங்களடையுங்கண்டாய், மேதகையசிவனடியார்க்குதவிசெய்வோன் விண்ணவர்யாவரும்வணங்குமேன்மையோனே, நீதிபெறுமவர்க்கோறல்புரிவோன்வெய்யநிரையயாதனையுறனிச்சயமதாமே. [௬௨]

தந்திசைவர்க்குபகாரஞ்செய்ததிதுதன்னைநீகொல்லில்யமனுனையுங்கொல்வா, னிந்தவிமயாசலந்தான்சைவர்மேவற்கிருப்பிடமாமிவனுற்றதிதுவிட்டப்பால், வந்தசைவமில்லார்க்கொல்லென்னக்கேட்டவயமாவாளாவிருந்ததரிதான்வேறுன், றுந்தியேபாய்ந்ததன்மத்தகம்பிளந்தேயுயிருண்டததுவுமிறந்துற்றதன்றே. [௬௩]

அப்போதில்யமன்றூதரநேகர்வந்தாரணிமானங்கொண்டுகணத்தவரும்வந்தார், தப்போதும்யானையைக்கொன்மடங்கறன்னைச்சார்ந்தமன்படர்வளைந்துபாசம்வீசி, வெப்போடுமேயங்கியாற்றிலீர்த்துவிரைந்துசென்றூர்யானையைவிமானத்தேற்றி, யொப்போதிலாததெய்வவுருவநல்கியுயர்கயிலைசெறியதனிற்கணத்தோருய்த்தார். [௬௪]

மாதங்கஞ்சிங்கமுற்றவருத்தங்கண்டேமனமிரங்கிக்கணங்களைப்பார்த்துரைக்குமன்றே, ஈதன்றன்கணத்துளீர்வயமாவென்னைநலிதருசத்துருவேனுமமன்றன்றூத, ராதங்கஞ்செயலாமோவிடுத்தல்வேண்டுமருவினையேன்சைவருடல்பரிசஞ்செய்தே, னீதங்குநிகழ்ந்ததனுமமைக்காணவிந்தவிமானதத்தேறப்பெற்றுளேனே. [௬௫]

என்றனதுபுனிதமாந்தேகந்தன்னையிந்தவயமாப்பரிசஞ்செய்ததன்றே, நன்றிபெறுமிதுநரகயாதனைக்குணவிவுறுமோநான்புனிதசைவர்மேனி, யன்றுபரிசம்புரிந்தவதனுலிவ்வாறடுத்துளேனெனலோடுமதுவாமென்றே, சென்றுசிவகிங்கார்போய்ச்சிங்கந்தன்னைச்செம்பொனுலகதுசேரச்செய்தாரன்றே. [௬௬]

தும்பிகயிலையிற்போயததனைக்கொலலத்தொடர்ந்தசிங்கங்கொலைசெய்யேலென்றசிங்க, மம்புவியிலுற்றவைகளிரண்டுங்கண்டேயற்புதமுற்றரனடியார்சகவாசத்தா,னம்புறுமிக்கதிபெறலாமென்றுகூறிநாட்டிலுளதங்குலத்தோடுற்றவன்றே, வம்பவிழ்தார்மாரதகேள்சிவன்றன்பூசைமகிமைவேதமுமறியமாட்டாதன்றே. [௬௭]

உற்றயானறிந்தவளவுரைத்தேனிந்தவுபர்கதையிலொருவசனங்கேட்டுளோருங், கூற்றுளோர்களுமுத்தியடைவான்றேகடவுள்சிவன்றனைநினைக்குமதுவேநெஞ்சாஞ், சொற்றசிவதரிசனஞ்செய்கண்ணேகண்ணுந்தூயலிங்கபூசனைசெய்கையேகையா, நற்றமிழ்ர்ப்பான்றுதிசெய்நாவேநாவாநாதனடிமைத்திறமேதிறமதாமே. (௬௮)

தந்தையாரெனக்குவிசுவேசர்பெற்றதாயார்பவானிகுலதெய்வமும்மா,முந்துமிதனுலெனக்கிந்திரனும்போற்றுமுக்கியமாம்பாக்கியத்தின்

முதன்மைசேருஞ், சிந்தைமகிழ்சந்தசுவர்த்தனையுஞ்சேருஞ்சிவபத்தித் திடமுமவர்சேர்ந்தாரென்றே,வெந்திறல்சேர்மாவிரதராசன்கேட்கமிக்க சத்யவிரதன்றான்விளம்பினனே. [௩௯]

நாற்பத்தாறாவது புலோமைச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உகககூ.

---

நாற்பத்தேழாவது,

# சிவடுண்டி

# வனபாலன்முத்திபெற்றசருக்கம்.

வேறு.

அருந்தும்போதினுந்துயிலினுமரிவையர்புணர்ப்பால
வருந்தும்போதினுமறலிதான்வந்திடும்போதும்
பொருந்துமானந்தம்பூத்திடுஞ்சிவனடிப்போதென்
றிருந்துமுள்ளமாம்போதினிற்சேர்த்துவாழ்த்துவனே. [௧]

வேலைவேந்தன்சொல்வான்சத்யவிரதமாதவத்தோன்
மாலையாவுரைத்திடுங்கதைமாவிரதன்கேட்
டேலுந்துன்பங்கேட்டசனையிதயத்தருளிருத்திச்
சீலனுஞ்சிவடுண்டிசேர்கதிசெப்புகென்றான். [௨]

அனையசைவனக்கூவிளக்கானத்திலமர்ந்தே
வினைகணீங்கினன்சுகத்துடனோர்மதிமேவிச்
சினைகொள்பூந்தளிர்செங்கையாலெட்டினகொய்தே
தனைநிகர்த்தவனருச்சனைசெய்துசார்ந்திருந்தான். [௩]

பன்னுகூவிளப்பணைகளிலிவர்ந்தொருபருவ
முன்னுபூந்தளிர்கொய்தனன்பூசைசெய்துறைந்தான்
பின்னுறும்வருடத்தினின்மகபதிபிறங்குந்
துன்னுகிட்டிணபக்கத்திற்சதுர்த்தசிதோன்ற. [௪]

மிகமகிழ்ந்தனன்சிவார்ச்சனைசெய்துறும்விருப்பாற்
றகவிற்றான்கொய்ததருக்களிற்றளிரொன்றுங்காணா
னுவகையற்றனனென்செய்வோமிதற்கெனவுன்னு
வகம்விசாரமுற்றிருந்தனன்வந்துளாரநேகர். [௫]

தந்தையார்சிவசிசிக்குவில்வத்தளிர்கொய்வான்
வந்துளாரவண்டளிரொன்றுங்கண்டிலார்மருண்டார்
முந்துநின்றதோர்சிவடுண்டிதனைக்கண்டார்மொழிவா
ரெந்தையேசிவன்சிறப்புறுமித்தினந்தனிலே. [௬]

உனதுமாமுகஞ்சாம்பினையடுத்ததேதுரையா
யனகன்பூசனைக்கித்தினம்விசேடமதன்றோ

தனமுனக்கிதுவலலவோவிசாரசீசாரின்
மனையின்வாழ்க்கைசேரெங்களைச்சொலவழக்கிலையே. (௭)

மிக்கதோர்விசுவேசர்பூசையில்வினைபோமாற்
றுக்கவார்த்தையென்சொல்லுவீரெனச்சைவர்சொல்லத்
தக்கதோர்சிவடுண்டிகேட்டனன்சிவார்ச்சனையா
லெக்கடுந்துயராகிலுநீங்குமென்றிசைப்பான், (௮)

எனக்கருந்தனஞ்சிவார்ச்சனையிலதையெவர்கவர்வார்
மனத்திலாங்கதுகெடிலன்றோதுக்கம்வந்துறுமா
லுனத்தகுஞ்சிவனருள்பெற்றேனமன்பமுறேனு
லனைத்துமவேறுளபொருள்களிலாசையுமிலனே. (௯)

இந்தக்கூவிளக்காவினிவிலையொன்றுமிலதால்
வந்தசோகந்தான்மனத்தில்யான்வருந்தமுற்றிருந்தேன்
முந்துமிவ்விடைச்சிவலிங்கங்கூவிளமூலத்
தந்தமோடுற்றதிவ்விடம்போலெங்குமரிதால். [௧௦]

மற்றெனக்குயர்மாதவருடன்சகவாச
முற்றதின்றுபோலெத்தினத்தினுமுதவிடுமோ
முற்றுங்கூவிளத்தளிரெலாங்கொய்தனன்முறையா
லிற்றைநாள்வரையருச்சித்தேதனினித்தளிரிலையே. [௧௧]

பூதநாயகன்சிவநிசிப்பூசையிங்கிதற்கே
கோதின்முந்துறுசாதனங்கூவிளந்தளிரே
யீதிலாவிடிலருச்சனையவத்தமாயிடுமே
யூதநாதன்செய்துயர்வில்வத்தாலொழிந்துளனே. [௧௨]

இனைபகூவிளத்திலையிலையேலின்பமிலையே
புனையும்வில்வத்தின்றளிர்கொய்தோர்தமைப்புறம்போக்கே
னனையதாலொன்றுமுற்றிடாதற்றொழிந்தனவே
முனைவிரும்புமுடன்யானெடுத்திவைமுடித்தனனே. [௧௩]

உங்களைத்தடைசெய்திடிற்கோபமுற்றிடுமென்
றிங்கொளித்தனனின்றுநான்விசாரமுற்றிடைந்தேன்
றங்குகூவிளக்கானென்றுசமீபத்தினுளதோ
வங்கதில்லையேற்சேணிலோரடவியுற்றுளதோ. [௧௪]

வல்லியக்குலநிரையுமவ்வனத்திடையேகி
னெல்லுமுச்சியிலெய்திடுமிலிங்கமாங்கில்லை
யல்லுநன்பகலளவுமித்தினத்தினிலரனை
வில்வத்தாலருச்சனைசெய்யவேண்டுமாலன்றே. [௧௫]

நினைத்தவெண்ணங்களவமதாய்நிகழ்ந்துளவன்றே
மனத்தினிற்சிவநிசிவருமென்னவேமதித்துப்

புனத்திலோர்மரமாயினும்பொறித்துவைத்திலனே
யினத்தில்யார்வந்தோயாவையுங்கொய்துபோயினரோ. [கசு]

தளிர்களில்லைமேற்செய்வதென்சிவகிசிதனிலே
யொளிகொள்கூவிளத்தருச்சியானுடல்விடனன்றென்
றளிகொளுஞ்சிவடுண்டிதான்சொன்னவையனைத்துங்
களிகொளுஞ்சைவர்கேட்டனர்கழறுவரானர். [கஎ]

இருடியேசிவடுண்டியேமனைகளிலிருக்குங்
கருணைசேர்நருமதையிலிங்கரைக்கையிற்கொண்டே
தெருளும்யாமெலாம்பூனுமேற்றிசைசெலுமளவு
மருவுறுந்தளிர்க்கூவிளவனத்திலேகுதுமால். [கஅ]

செல்லுங்கானிடைச்சிங்கங்களுழுவைகளிருந்தே
கொல்லுமாயினுங்கொல்லுக கூவிளத்தளிரின்
வல்லிபாகனையருச்சியாதிருப்பதின்மரண
நல்லதேநமர்க்காண்டலுநடுங்குமேநமனும். [கசு]

வேங்கைசிங்கமுமேவுநம்மெதிர்வருங்கொல்லோ
வோங்கிடுஞ்சிவநாமங்களுரத்துநாமுரைத்தா
னீங்கிடும்பயமிலிங்கமுநீறுங்கைக்கொண்டே
யீங்குநாமின்றுபாணித்திடாமலேகுதுமே. (உ0)

வேறு.

இத்துயரநாம்பொறுத்தற்கெளியதன்றேயினியகூவிளத்தளிரா
லெம்பிரானைப். பத்திபிறைற்சிவகிசியினருச்சியாதான்பழிபெறுகற்பகன்
றமின்னுள்பாலனுவன், மத்தன்மதுவுனுங்கொடியோன்றானுமாவன்
ன்னுமிந்தக்காலம்போல்வாயாதென்றே, சித்தமகிழ்சிவடுண்டிமுனிவ
னெஞ்சீலமிகுஞ்சைவனவணிங்கிச்சென்றான். [உக]

மனைவிளையுந்தர்மகண்மருகர்பவுத்ரரோமெற்றுளசுற்றத்தவர்கள்
யாருங்கூடப், புனையுமனைமாளிகையாச்சிரமம்வீணிற்புகப்பெய்துபுறப்
பட்டார்களைப்பிறேடு,நினையுங்கூவிளக்கானில்வந்துற்றானிகரில்சந்த்
ரமண்டலங்கணெடுவெற்பேபோற், கனையும்வயப்போத்துவயமாவினங்
கள்கண்டவொருகோடிகதித்தெழுந்தவன்றே. (உஉ]

பகுவாய்கடமைப்பிளந்துகடைவாய்நக்கிப்பார்த்துநின்றதவைகண்
டார்சூலின்மாதர், தகுமுலையுண்குழவிகையிற்றாங்குமாதர்சார்ந்திடுமா
தர்களெல்லாநடுக்கமுற்றார்,புகல்வார்களரகரமகேசசம்போபூவையங்கா
வெனவுரத்துப்புலம்பாநின்றார்,மிகுசோகமுடனந்தோவனைவோருக்கு
ம்விளிவுறுகாலங்கள்வந்துவிளைந்தவென்பார். [உங]

அந்திவேளையினிலருச்சனைக்காம்வில்வத்தருங்கானுஞ்சிவனுடற்
கமைந்ததானம், வந்துளோமிதிற்பவங்கடீர்ந்தோமென்றேமன்னுமிருக
ங்களையுமதியாராகிச்,சிந்தையினிற்திடமுடனுங்கதனிற்புக்கார்சேர்கின்

றசிங்கங்கள்யாவுங்கண்டே, முந்துமதிசயத்துடன்மனிதராகுமுனிவர்வ ந்தார்தேவரவர்முன்னுரென்னும். (௨௪]

நல்லுவுணவாயெமக்கேயிவர்கள்வந்தார்நாடிலித்துபூதசிவலிங்கியாமன் றே,புல்லுமாகாரமின்றிவில்வங்கொண்டேபூதநாயகன்பூசைபுரியவேண் டும்,வல்லுயிர்கள்வதைபண்ணலாமோவிந்தவனத்திலிங்கதரிசனந்தான் செய்யவந்தோர், சொல்லரியபுண்ணியத்தின்வடிவமானுர்தூயவிவர்தரி சனத்தாற்சுகம்பெற்றேமே. (௨௫]

சாற்றரியசைவாசாரத்தரின்னோர்சங்கரன்பூசனைபுரிவாரிவர்களோ தும்,போற்றுசிவமந்திரந்தான்கேட்கப்பெற்றூற்பொருந்துறுபாவங்களெ ல்லாம்போகுமன்றே, யாற்றல்பெறுமதன்பெருமைக்களவையுண்டோ வங்கதனுன்முத்தியுமேயடையலாமே, யேற்றசிவநிசியிலன்பருடனேபூ சையிபற்றிடலிச்சென்மமொழிந்திடுமன்றே. [௨௬]

அம்புவிபிற்சிவபத்தர்க்கதிகராவாரரனருளாலிங்குவந்தாரிவரைக் காணில், வெம்புகொடுவினையொழியுமின்றிராவின்மிக்கவிவர்புரிபூசை த்தரிசனத்தா,னம்புறுநங்குலங்களெல்லாம்புனிதமாகுநமக்குமன்னா ளிளைமைமுதுமையாவும், கம்பமுறுதுட்டங்கள்புரிந்திடாதங்காந்தவாய் மூடியிருந்திடுமன்றே. [௨௭]

மற்றுநாமிப்படியுருமனந்தமாநிழைக்கிற்சிவனடியார்மருள்வார ன்றே, யுற்றசிவநிசிவிரதமனுட்டிக்கின்றேமோங்குமதமாவரினுமுயிரு ண்ணேமாற், சுற்றமுடன்யாவுமொழிந்துறைவோமென்றுசொலிக்கொ ண்டேபூதியுத்தூளனங்கள்செய்தே, பற்றிவில்வத்தளிர்பறிக்குமவர்கண் முன்னேபருஞ்சும்மைசும்மைகளாக்குவித்தவன்றே. (௨௮)

அன்னதுகண்டார்சைவசீலரெல்லாமதிசயித்தாரிவைமிருகமல்ல மேலாம்,பன்னருமாதவமுனிவராகுமென்றேபரிகின்றூர்சந்தேகப்பயங் கடீர்ந்தார், துன்னருங்கூவிளத்தருக்கணிறைந்தேயீசன்றுலங்குமால யஞ்செபமண்டபங்களோங்கி,மன்னுமனப்பொறுமையுற்றவரியின்கூட் டமல்குமந்தவனந்தனிலுட்புகுந்தாரன்றே. [௨௯]

அங்கணுறையுன்னதமாம்விசுவலிங்கமனையமூர்த்தியைக்கண்டாரக ம்பூரித்தா, ரிங்குவந்தோமித்தினமேசுதினமன்றேவினைப்புமனமயக்க முந்தீர்ந்தேகிற்றென்பார், கங்கையைக்கண்டார்மைந்தர்மனைவியோடு ங்கடிபுனலிளூடிநீறணிந்தார்கண்டிப்,புங்கமாலிகைபூண்டாரிலிங்கபூசை புந்திகொண்டூர்வில்வமுதற்பொருள்கொண்டாரே. [௩0]

அம்பிகாபதியுறையுமிரத்நதீபமணிதிகழாலயத்திலந்திவேளைதன் னிற், கம்பமிலாமனத்தினர்கள்வந்துபுக்கார்கங்கைவடிநீர்கும்பங்களிற் கொணர்ந்தா, ரும்பர்நாயகனுர்தம்மிலிங்கந்தன்னிலுருத்திரமந்திரங்கள்

கொண்டேயபிடேகித்தார், செம்பொன்வில்வத்தளிரிலட்டோத்திரசத ங்கள்செய்யசகத்திரநாமார்ச்சனைசெய்தாரால். [௩௧]

அங்கதனைச்சிங்கங்கள்கண்டுகேட்டேயகமகிழ்ந்தம்மந்திரங்கள கொண்டுதாமுஞ்,சங்கரனைவில்வத்தின்றளிர்களாலேசாற்றரும்பூசனைபு ரிந்தததனின்பேடும்,பொங்குகுருநீலகளும்பேரீந்துநாளிபூந்தாதின்கனி வகைகள்கொடுத்துசித்த, விங்கிதனைச்சைவசிலத்தர்கண்டாரிதுபுதுமை யிதுபுதுமையென்றூரன்றே. (௩௨)

அன்னபொழுதினிலானைக்குலமநேகமாகமெங்கும்பூதியுத்தூளனங் கள்செய்தே, பன்னுதுதிக்கையினின்மஞ்சனமுமேந்திப்பணைகளின்கூ விளத்தளிரின்பணைகடாங்கித்,துன்னியிலிங்கேசர்திருமுடியின்மீதுதுதி க்கையினீராட்டிவில்வத்துணருஞ்சூட்டிச், சென்னியால்வணங்கிநின் றுகூத்துமாடிச்சிவன்றனக்குப்பிரியம்வரச்செய்தவன்றே. (௩௩)

வல்லியங்கள்பலவில்வத்தளிர்கள்கொண்டுவந்திலிங்கார்ச்சனைபுரிந்து வணங்கிச்சூழ்ந்த, புல்லும்வனக்கோக்குலங்கள்பலபின்வந்தேபொழி முலையின்குடப்பாலாலாட்டும்வெள்ள, மெல்லொளிசேராலயம்பாற்கட லைப்போன்றயானையருச்சனைபுரியமளமளென்ன, வில்லுவமாமரங்கட மையிறுக்குமோதைமேதினியில்யாமுப்நோமென்பபோலும். (௩௪)

இருங்கானத்துள்ளபலமிருகமெல்லாமிப்படிபூசனைபுரியுமியல்பை யெல்லாஞ், சுருங்காதவன்புடையசைவசிலத்தூயவர்கண்டார்மிகவாச் சரியங்கொண்டார்,பெருங்காதலுடனுணவுந்துயிலுமின்றிப்பிறையவன் றனிசிப்பூசைபிரியத்தாற்செய்,தருங்காலைதனிற்கங்கைமூழ்கிப்பூதியணி மணியுந்தரித்துநித்யகருமஞ்செய்தார். [௩௫]

அருணவுதயந்தன்னிலந்தக்கானத்தடன்மிருகங்களுக்கெல்லாமதி பனை,, தருமகுணம்பெறுசிங்கவரசுபூசைச்சைவதவராசர்தமைவணங் கிச்சாற்றும்,பெருமைபெறுமூர்தமனைமாதர்மைந்தர்பிறிதுளவிவ்வனமி ருகமுள்ளவெல்லா,மொருமையுடன்சிவசிசியின்பூசையாற்றியுபவாசஞ் சாகரமுற்றொழிந்ததன்றே. (௩௬)

இத்தினத்திற்காலையினினியமமாற்றியினிதுபாரணம்புரிவதியல்பே யன்றோ, வுத்தமர்நீர்பாணிப்பதென்னேயுங்களுவகைமைந்தர்மனைவிய ரும்பசியாலுற்றூர், சுத்தமுடன்சுயம்பாகம்புரிவதற்கேசொல்லுமுபகர ணங்களெல்லாமுற்ற, வத்தனையுங்கொடுபோகியடுதல்செய்தேயரன்பூ சைக்காக்கியுணவாக்குவீரே. [௩௭]

என்னவுரைத்தவைசைவர்யாருங்கேட்டேயிதயமகிழ்ந்தனர்த ங்கள்பன்னிமாரை, யன்னபொருள்யாவுங்கொண்டடுதிரென்றூரடுக்க ளைபுக்கனராறுவகையதாகச், சொன்னசுவைக்கறிவர்க்கமன்னவர்க்கந் தூயமதுவர்க்கநால்வகையாமுண்டி, மன்னுமபூபத்தின்வகைவகைகளா யமலைமலைகளாவமைத்துநிறைத்தாரன்றே. [௩௮]

ஆங்கதனைச்சைவரெல்லாங்கண்டுபெருந்தியமைத்தனர்நைவேத்தியங்களானுக்காக்கிப்,பாங்குபெறும்யாவர்களும்புசித்தார்சிங்கம்பலமிருகம்யானைபுலிபசுவின்கூட்ட, மோங்குமுணவுங்கொடுத்தார்பாரணஞ்செய்துடலம்பூசித்திருந்தார்சிங்கராசன், நீங்ககலுஞ்சைவருக்குளதிகனானசிவபுண்டிதனைவணங்கிச்செப்புமன்றே. [௩௯]

பூதசிவநிசிவிரதத்தெம்பிரான்றன்பொருவில்பத்திபூண்டதவராசரேறே, யோதுசிவபுண்ணியத்தில்விசேடமாவதுரைத்திரெனச்சிவபுண்டியுண்மைசொல்வா,னுதனந்திமுதலினோர்புகன்றவிந்தநற்றருமம்யாவர்களு முணர்ந்துளாராற், காதலினால்யானுமுன்செய்தவத்தினாலேகடவுளருளாலுணரப்பெற்றுளேனே. [௪0]

புகல்கின்றபுண்ணியமநேகமுண்டாற்போற்றுசிவதருமம்போற்பாவம்போக்கா, வகிலமிசையதையாவர்தெரியவல்லாரதிதுரைக்கிலருந்தருமந்தழைக்குமன்றே,மிகுதருமம்யாவினுக்குமேலாமென்றேவிசுவாசமுடையோர்கள்விளம்புவாரா,னிகரிலதுவினவினோர்தமக்குமுத்திநிதிகுடங்கைதனில்வந்ததாகுமன்றே. [௪௧]

காமதேனுவைப்போலக்கேட்கிவிட்டகாமியங்கள்கொடுக்கின்றதிதுவேகண்டாய், பாமரனுக்கிதிற்புத்திவாராகல்விப்பாக்கியவான்களுக்கேமெய்ப்பத்திசேரு, மாமதுபோற்றிடிற்சிவன்றான்மகிழ்வன்றனேயதனைநீகன்றாகக்கேட்டிபன்றே, நாமமுறுமெத்தருமந்தனினுமேலாநற்றருமாதனருச்சனையதாமே. [௪௨]

அதனையேமங்களமாமுத்திவேண்டுமறிவினோராதரிக்கப்பெறுவதாமா,விதின்மேவுமதன்மேன்மைக்களவோவில்லையெத்தேவர்தாமுமதையுணராரென்றே, சதுவேதமுணர்ந்தசிவபுண்டிசொல்லச்சங்கரன்றன்பத்திபெறுசிங்கராசன்,மதிவேணியவன்பூசைசிவனிராவின்வரலாறும்வில்வவருச்சனையின்பேறும். [௪௩]

அத்தினத்திலுண்டிதுயிலின்றிமற்றையருந்தினத்திற்பாரணஞ்செய்பலனுமின்பஞ், சித்திபெறும்விரதசாதனங்கள்யாவுஞ்செப்பிடுவீர்தெய்வீகமாகநீர்தா,மித்திசையில்வந்ததரானருள்தன்றேவெளியேற்குக்கூட்டியதென்றிசைத்தலோடு, முத்திமுனிசிவத்தியானத்தனுகிமுதல்வனன்பர்தமைவணங்கியவர்முன்சொல்வான். [௪௪]

மாசிமதிக்கிட்டிணபக்கத்திலுற்றுவருந்திரயோதசிபுணருமாலைவேளை, தேசுபெறுசதுர்த்தசிதானிரவுசேருந்தினமதுவேசிவநிசியாமென்றுதேர்தி, பேசுமிதில்விரதமனுட்டிக்கவேண்டும்பெறுமற்றைத்தினமதியின்வாரத்தோடு,மேசில்சதுர்த்தசியுமேயுற்றதென்னிலிதுபிரமஞ்சத்தியமாமுத்தியீதே. [௪௫]

அதுவேமெய்த்தவங்காந்திகீர்த்திமேன்மையாக்குபொருள்யாவையுமேயளிக்குமன்றே, யிதுவேசத்தியவிரதமதிகடோறுமெய்துமவையனு

ட்டிப்போன்சிவத்தைச்சேர்வான், சதுர்வேதஞ்சொலுமிதனைச்செய்தி டானேற்*சங்கரனுய்விடுவென்மறையவனேனுக்தான், சிதமாம்புண்ணிய வசத்தினிதனைச்செய்யிற்சிவலிங்கத்தனின்முத்திசேர்வன்றுனே. (சகூ)

அரும்பூதசிவக்கிரியோடிலிங்கம்வில்வமருச்சனைசெய்புத்திபெறல்கி டையாதன்றே, வரும்பேறிங்கிவ்வகோடிதருமஞ்செய்தேவரவேண்டும் பெரியோர்தங்கருமமீது,பெரும்போகந்தரும்பார்க்குப்பிரியமீதேபிறை வேணியவர்க்குவில்வத்தளிரின்மீது, விரும்போகைகங்கைநதியமிர்த வெள்ளமிக்கமாமணிகளினுமேலிடாதே, (சஎ)

கூவிளத்தின்றளிரொன்றூழ்முடியிற்சாத்திற்குலவுமிளம்பிறைபோல க்கொள்வானெம்மான், றேவர்பிரானருச்சனையிற்கற்புநீங்குத்தெரிவை மைந்தன்பத்தியுறுனவனைநீச,னுவனிவனெனத்தள்ளவேண்டுமன்றேய ணிபூதிகண்டியுடனஞ்செழுத்து, மோவிலாதுடையவனேசிவன்றன்பூ சைக்குடையனெனவருமறையோருரைத்தாரன்றே. (சஅ)

இதமுறுமோர்காதைசொல்வன்சைவசீலத்திருடிகாளரியரசேயி னிதுகேண்மின், மதகயமொன்றுளதுமுன்னரிந்தக்கானின்மரங்களைவே ரொடுபறித்துவயிறுதூர்க்கும், கதமுறுவெம்புலிக்குலத்தைப்பிடித்தே நுங்குங்காட்டிளந்தருக்குலத்தைமுறிக்குமேனு, முதல்வனருச்சனை ப்பிரியந்தன்னால்வில்வமுத்திதருந்தருவதென்றைப்புரக்குமன்றே.

கங்கைநீர்தனிலாடிவனவிபூதிகாயமெங்குமாடியேதுதிக்கைதன்னி ன், மங்களமாம்வாரதிமஞ்சனங்கொணர்ந்தேமறைமுதல்வனிலிங்கத்தி லாட்டிநாளுந், துங்கமாங்கூவிளத்தின்றளிர்கள்சாத்திச்சூழ்ந்துதொழு தருச்சனைநின்மாலியங்கள்,பங்கமறவுயிர்ப்பினுனுகர்ந்துகானிற்பரமசிவ சங்கரவென்றோதிச்சென்றே. (ருo)

மன்னுபுலிக்குலங்கடமைப்பிடித்தடித்துவாய்த்ததசைதனைக்கங் கைதனிற்கழீஇய, * பின்னர்வனத்திருநீற்றிற்புனிதமாக்கிப்பேசுகனிவ கைபெருகக்கொண்டேயீசன்,சன்னிதிமுன்வைத்துநிவேதனங்கள்செ ய்தேசங்கரனைநினைத்தவைகடமையேயுண்ணு,மின்னதுசெய்தோரயுத வருடங்கானத்திருந்தரியயோகத்தாலுடலநீத்தே. (ருக)

அரியபுட்பமானத்திற்சிவகணத்தோரநேகர்வந்துதெய்வவுருவமை க்கவேறித், தெரியுநமனுலகிமையோருலகிற்சென்றுசிறப்பினெடுமெவர்க டாமெதிர்கொண்டேத்தப்,பெரியமறையோனுலகிற்புகவேகண்டான்பி ரியமுடனெதிர்கொண்டாசனத்திலேற்றிப்,புரிதருநற்பூசனையும்விதியிற் செய்தான்பொருந்துமவையோர்கண்டார்புகல்வாரன்றே. (ருஉ)

இப்பெரியோனியார்செய்ததருமம்யாதேயென்றுகேட்டனரீசற்க ன்பராகு, மப்பெருமையுடையோர்கடம்மைநோக்கியயன்புகல்வானிவ

* சங்கரன் சங்கரசாதியான்

ன்முன்னரமலன்பூசை, முப்பொழுதும்புரிதருகத்தருவன்மேலாமொய்
ம்பினன்பிரதோடகாலந்தன்னிற், றப்புரையாலரிகாமகீர்த்தனங்கள்சா
ற்றிவணக்கரியாகச்சனித்தானன்றே. [௫௩]

பரமனைப்பூசனைபுரிந்தபலத்தினலேபகர்தருமுற்சனனவாசனைதா
னுற்றே, யுரமுறுவெங்கயமாகவுதிக்கப்பெற்றுமோங்குமதமயக்கங்களு
ற்றமலீசன், றிரமுறுபூசனைசெய்தசென்னலோடுந்திகழ்சபையோர்வினை
விமகிழ்கிறந்தாரென்றே, வரதனடிபரவுசிவுண்டிகூறவனமிருகபதிகே
ட்டுமகிழ்ந்துசொல்லும். (௫௪)

ஏதையாபிரதோடகாலந்தன்னிலேனமாஞேன்பெயரையிம்பி
ஞேர்க, டீதையேபுரிகானில்வல்விலங்காய்ச்செனிப்பரோவிவைகேட்க
விரும்புகின்றேன்ஞேதைபாவெனலோடுஞ்சொல்வான்முன்னரோங்குசி
வபத்தனும்பிருகுவென்னு, மாதயாநிதியுலகமெங்குஞ்செல்வான்வைகு
ண்டலோகமதில்வந்துற்றானல். (௫௫)

மாயனூர்கோயின்மணிவாயிறன்னில்வந்தானந்தியில்வயினதேயன்
கண்டான், றூயனுமுனிவதிருவுடன்மான்மாலாய்ச்சுரதலீலைகள்புரி
வானுங்குத்துன்னன், ஞாயமாவெனப்புகன்றூன்வார்த்தைகேட்டுஞான
மாதவன்பிருகுநகைதான்கொண்டா, ஞயதோர்தடைசொல்புள்ளின்
வேந்தைச்சாம்பராக்கினனுட்புகுந்தானரியைக்கண்டான். (௫௬)

முனிமுனிவினேடுறுமப்போது.மாயன்மொய்குழலாளின்பமனமுற்
றுமுன்னந், தனியெழுந்துமவுனமாய்க்கைகொடீங்குச்சார்ந்திட்டுமெ
னவுரைக்குந்தன்மைகண்டா, னினியசிவபூசைசெயும்பிரதோடத்தினி
ப்போதின்மாதராரின்பஞ்செய்வாய்,துனியிழைக்குமுன்னுடையமோக
ந்தன்னைச்சுடவேண்டாவோவெனசெட்டுரேஞ்சொல்வான். (௫௭]

பிரதோடவேளையிற்பெண்கொடியைச்சேரும்பேதையர்களுனைப்
போல்யாங்கண்டிலோமா, லரனுடல்புரிதருமிவ்வேளைதன்னிலரிவையர்
களுடன்புணர்ந்தாலரியதுன்பம், வருமேயென்பதுதன்னைமறந்துளா
யோமற்றுனக்கிப்புத்திவந்ததேதுசொல்வாய், திருமேவுவோரந்திப்போ
துதன்னிற்சிவபூசைதனிற்காலம்போக்குவாரே. (௫அ)

என்னுளுமினியவந்திவேளைதன்னிலேந்திழையைப்புணர்வரோவு
னக்கிப்புத்தி, சொன்னாருன்மத்தமுண்டோவென்றுதூயமாதவன்று
ன்மாதவனைநோக்கிப், பன்னுளும்பிரதோடந்தனிலுன்னுமம்பகாந்து
ளோர்தெரிசித்தோர்பரவல்செய்தோர், துன்றுதநிரையத்திற்புகுவாரெ
ன்றுசூழ்கோபத்தாற்சாபஞ்சொல்லிப்போனன். (௫௯]

தெரிசனஞ்செய்பாவமதுதிரக்காசித்திருநகரந்தனிற்சென்றுன்கண்
டபோதிற், கரியவனைப்பிரதோடகாலந்தன்னிற்கண்டதுன்பமொழிந்தி
ன்பங்கலந்தானென்றே, யுரியசிவுண்டிசொன்னவார்த்தைசிங்கத்தோ
ங்கரசன்வினவியுளமகிழ்ந்தேயின்னு, மரியசிவதருமகதைபுகலியென்ன
வாங்கதுகேட்டதன்பின்னுமறைகின்றானல். [௬0)

